இறவாததென்பது கூறவேண்டியதில்லை. ஹோமர் என்ற கிரேக்க மகாகவியின் மதம் ஒரு தனி உபாசகனும் இல்லா தொழிந்தும், அவர் மொழி பேச்சுவழக்கில்லா தழிந்தும், பல்லாயிர வருடங் கழிந்த இக்காலத்தும், அவருடைய காவியங்கள், அவற்றிலுள்ள கவிநயங்களுக்காக, அளவிறந்த அருங்கலைவிநோதர்களால் பயிலப் பெற்று வருகின்றன. அவ்வாறே, 'ஒன்றே குலமும் ஒருவனே தெய்வமும்' என்று திருமூலர் கூறுமாறு, எல்லா மனிதரும் சவர்ணர் அவர்ணர் என்ற பாகுபாடின்றி ஏகவர்ணராய், எல்லா மதத்தினரும் தெய்வம் ஒன்றே என்பது தெரிந்து சர்வ சமய சமரச பாவனையுடையவராகும் அதிதூரமான எதிர்காலத்தும், கம்பராமாயணம், அதனிலுள்ள அசாதாரண அதியற்புத காம்பீரிய கவித்துவ சாதுரியம் காரணமாகப் பயிலப்பெற்று இறவாது நிலைநிற்பதாம். *

மதவுணர்ச்சி அல்லது சாதியுணர்ச்சி அல்லது இரண்டு உணர்ச்சியும் காரணமாகச், சிலர், சீவகசிந்தாமணியையும், சிலர், கம்பராமாயணத்தையும் வெறுத்து விலக்குவது, சேரர், பாண்டியர் பகைவரென்ற உணர்ச்சியினால் பாண்டிநாட்டு முத்தையும், பாண்டியர், சேரர் பகைவரென்ற உணர்ச்சியினால் சேர நாட்டுச் சந்தனத்தையும் வெறுத்து விலக்கினாற் போலும். *

## அவையடக்கம்

கம்பராமாயண சாரத்திலே சேர்த்தற்குரிய சில கவிகளின் நயம் எனக்குப் புலப்படாமையால், அவைகள் சேர்க்கப்படாமல் விட்டிருக்கலாம்; அவ்வாறே சேர்த்தற்குரிய நயம் இல்லாதவைகள் சில, எனது பகுத்தறிவுக் குறைவாற் சேர்க்கப்பட்டிருக்கலாம்.

பொதுவாக, எல்லா நூல்களும், விசேடமாகக் கம்பராமாயணம் போன்ற ஆழமுடைய நூல்களும் படிப்பவரது இயற்கை அறிவு, கல்வி அறிவு, கேள்வி அறிவு, ஆராய்ச்சி அறிவு, அநுபவ அறிவு இவைகளுக்குத் தக்கவாறு பொருள் புலப்படுவனவாம். ஆதலால், யான் எழுதிய உரை, என் அறிவளவேயாய்ப் பல சிறந்த பொருள்களை விட்டிருத்தலும் அநேக பொருள்களைத் தப்பாகக் கொண்டிருத்தலும் இயல்பே. குற்றங்களை நீக்கிக் குறைகளை நிரப்பிக்கொள்ளுமாறு அறிஞரை வேண்டிக்கொள்கின்றேன்.

* இவ்வடுக்குறியிட்ட பாராக்கள் புதிதாகச் சேர்க்கப்பெற்றவை.

இந் நூலிலே தகுதியின்றிச் சேர்க்கப்பட்டிருக்கின்ற தனி இன் கவிகளும் தொடர்ச்சிப்பட்ட இன் கவிகளும் இவை இவை என்றும், தகுதி யிருந்தும் சேர்க்கப்படாது விடப்பட்டவை தனிக் கவியினத்தில் இன்னவை இன்னவை, தொடர் கவியினத்தில் இன் னின்னவை என்றும் காரணத்தோடு காட்டியும், பொருள் அரும் பதவுரை விசேட வுரைகளில் உள்ள குற்றங்கள் இவை, குறைகள் இவை யென்று விளக்கியும் தயைசெய்து தெரிவிக்கும்படி அறி ஞரை வேண்டிக்கொள்ளுகின்றேன்.

## நன்றியுரை

இந் நூலுக்கு மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் 'செந்தமிழ்'த் திங்கள் வெளியீட்டில் தாராளமாக இடம் அளித்தும், யான் வேண்டிக்கொண்ட காலங்களில் திருத்தங்கள் குறிப்பித்தும் உத வினவரான 'செந்தமிழ்'த் தலைமை யாசிரியர் திருநாராயணையங்கா ரவர்களுக்கும், உதவி யாசிரியர் T. K. ராமாநுஜையங்காரவர் களுக்கும், இந் நூலில் பால காண்டத்தைக் கவனித்துப் படித்து பல குறிப்புக்கள் எழுதி யுதவியிருக்கின்ற வண்ணார்பேட்டை வக்கீல் T. K. சிதம்பரநாத முதலியாரவர்கள், B. A., B. L., (Ex-commissioner, H. R. E. Board), அந்தக் காண்டத்தி லும் அயோத்தியா காண்டத்திலுமுள்ள சில கவிகளுக்கு விசேட வுரை வரைந்து உபகரித்த தூத்துக்குடி கவிராஜ பண்டிதர் ஜெக வீர பாண்டியன் அவர்கள், ஆகிய இருவருக்கும், இக் காண்டத் தைச் செவ்வையாக அச்சிடுதற்கான முறைகளைக் குறிப்பிட்டும் பாட்டுப் பகுதிகளுக்கும் வசனப் பகுதிகளுக்கும் தலைப்புக்கள் எழுதியும் மற்றையோருடன் புரூபுகள் திருத்தியும் உதவிய தூத்துக்குடி டிஸ்ட்ரிக்ட் முன்சிப் V. T. பழனியப்ப முதலியார், B. A., B. L., அவர்களுக்கும், புரூபுகள் திருத்தி உபகரித்த ராதா புரம் டிப்டி தாசில்தார் T. M. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள், B. A., தூத்துக்குடி வக்கீல் A. ராமமூர்த்தி ராவ் அவர்கள் B. A., B. L., சென்னைச் சர்வகலாசாலை ரீடர் S. வையாபுரிப் பிள்ளை அவர்கள், B. A., B. L., அக்கலாசாலை ஸீனியர் லெக்சரர் R. P. சேதுப்பிள்ளையவர்கள், B. A. B. L., ஆகியவர்களுக்கும் எனது நன்றியறிவு பெரிதும் உரியதாயுள்ளது.

இப் புத்தகத்தை மிக்க சிரத்தையோடு பதிப்பித்து, அரும் பத அகராதி, பாட்டு முதற்குறிப்பகராதி முதலியவைகளைச் சித்தஞ்செய்து பல வகையிலும் செவ்வையுறச் செய்த பதிப்பாசிரியர் வக்கீல் M. P. S. துரைசாமி முதலியார், B. A., B. L., அவர்களுக்கும் எனது மனமார்ந்த வந்தனங்கள் உரியன.

இந்நூல், 'செந்தமிழ்'ழில் வெளியாகி வருவதை அப்போதப்போது பார்த்து மகிழ்ச்சியுற்ற அமையங்களில் அம்மகிழ்ச்சியை எனக்குத் தெரிவித்து ஊக்கமூட்டிய உபகாரத்துடன் முகவுரையளிக்கும் பேருபகாரமும் புரிந்துள்ள மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் சாமிநாதையரவர்களுக்கும், ஆங்கில முகவுரை அளித்து உதவிய சுவாமி விபுலாநந்தஜி மகராஜ் B. Sc. (LOND.) அவர்களுக்கும் யான் மிக்க கடப்பாடுடையேன்.

இந்நூலை உரிமையாக அங்கீகரித்தருளிய திருப்பனந்தாள் மடத்துத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாத தம்பிரான் சுவாமிகளவர்களுக்கு எனது அத்தியந்த வந்தனம் உரியதாகின்றது.

இந் நூலைத் தங்கள் வெளியீடாக வெளியிட்ட சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்கும், இதனை நன்கு பதிப்பித்த ஹிலால் பிரஸ் அதிபரவர்களுக்கும் எனது நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

வெள்ளகால் P. O.<br>தென்காசித் தாலூகா.

வே. ப. சுப்பிரமணிய முதலியார்

# துணை நூற்பட்டி*


1. பாலகாண்டம் :— இராமசுவாமி நாயுடு உரையுடன், சர்வசித்துஸு.

2. ,, அ. குமாரசுவாமிப் பிள்ளை, த. கனகசுந்தரம் பிள்ளை அரும்பதவுரையுடன், காலயுக்திஸு.

3. ,, வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர் உரையுடன், அட்சயஸு.

4. ,, சுருக்கம் :—வ. வெ. சுப்பிரமணிய ஐயர் அரும்பொருள் விளக்கத்துடன், 1917 கி. பி.

5. அயோத்தியா காண்டம் :—வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர் உரையுடன், விபவஸு (1928).

6. ,, சண்முகம் பிள்ளை உரையுடன், 1919.

7. ,, சுப்பராய செட்டியார் உரையுடன், 1904.

8. ,, சேஷ சாஸ்திரியார் உரையுடன், ஸர்வதாரிஸு.

9. ஆரணிய காண்டம்:— எம். ஆர். கந்தசாமிக் கவிராயர், எஸ். வெங்கடராயலு நாயுடு, உரையுடன், 1900.

10. ,, வை. மு. சடகோபராமானுஜாச்சாரியார், சே. கிருஷ்ணமாச்சாரியார் உரையுடன், ப்லவங்கஸு.

11. கிஷ்கிந்தா காண்டம்:— ஷை இருவர், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர் உரையுடன், விரோதிக்ருத்ஸு.

12. ,, பண்டித சவரிராயர், பால ஸரஸ்வதி கிர்ஷ்ணமாச்சாரியார், மூலமும் பாட பேதங்களும்.


* பாட்டுக்களின் பாட நிர்ணயத்திற்கும் பொருள் காணுதற்கும் உதவிய நூல்களின் விவரணம். (Bibliography.)

13. சுந்தர காண்டம் :— வி. கோவிந்தப் பிள்ளை உரையுடன், விளம்பி௵.

14. ,, வை. மு. சடகோபராமாநுஜாச்சாரியார், சே. கிருஷ்ணமாச்சாரியார், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர், உரையுடன், ரக்தாக்ஷி ௵ (1924).

15. ,, ஷை இரண்டாம் பதிப்பு, ஆங்கீரஸ ௵ (1932).

16. ,, பண்டித பி. ஆர். கிருஷ்ணமாச்சார்யர், மூலம், கதைச் சுருக்கம், ஆங்கில முகவுரையுடன், ஸ்ரீவாணி விலாசம் பிரஸ், (1907).

17. யுத்த காண்டம் :— வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர் உரையுடன், இரண்டு பகுதிகள், ஆங்கீரஸ௵ (1932).

18. கம்பராமாயண அருங்கவி விளக்கம்:— கவித்தலம் துரைசாமி மூப்பனார், சர்வதாரி௵.

19. ஏழுகாண்டமும் மூலம் மட்டும்:— அ. கந்தசாமி முதலியார், தாது, இரத்தாட்சி.

20. ,, அ. சுந்தரநாத பிள்ளை, 1911, இரண்டு பகுதிகள்.

21. ,, அ. இரங்கசாமி முதலியார், 1914, இரண்டு பகுதிகள்.

22. வால்மீகி ராமாயண வசனம்:— பண்டித நடேச சாஸ்திரியார் மொழிபெயர்ப்பு.

23. கம்பராமாயண ஓலைச்சுவடி:— திருநெல்வேலிக் கவிராயர் வீட்டுப் பிரதி.

# மேற்கோள் விளக்கம்

| | |
|---|---|
| அ. கு. | அ. குமாரசுவாமிப்பிள்ளை : பாலகாண்டம் |
| இ. நா. | இராமசுவாமி நாயுடு : பாலகாண்டம் |
| உரி. நி. | உரிச்சொல் நிகண்டு |
| ஐங்குறு. | ஐங்குறுநூறு |
| ச. அ. | சங்க அகராதி |
| சிந்தா. | சிந்தாமணி |
| சூடா. | சூடாமணி நிகண்டு |
| த. அ. | தமிழ் அகராதி |
| த. பெ. அ. | தமிழ்ப் பெயர் அகராதி |
| து. மூ. | துரைசாமி மூப்பனார் : கம்பராமாயண அருங்கவி விளக்கம் |
| நாலடி. | நாலடியார் |
| பத்துப்பா. | பத்துப்பாட்டு |
| பரிபா. | பரிபாடல் |
| பிங்கல. | பிங்கல நிகண்டு |
| புற. நா. | புறநானூறு |
| புறப். வெண். மா. | புறப்பொருள் வெண்பா மாலை |
| மணிமேகலை | மணிமேகலை |
| திரு. ச. | திருமயிலை சண்முகம் பிள்ளை : அயோத்தியா காண்டம், உரையுடன் |
| வை. மு. கோ. | வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யர் : அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், உரையுடன் |
| சோ. சு. | சோடசாவதானம் சுப்பராய செட்டியார் : அயோத்தியா காண்டம், உரையுடன் |
| பெருங்கதை | பெருங்கதை |
| இ. அ. | இலக்கியச்சொல் அகராதி |
| குறள் | திருக்குறள் |
| நான்மணிக்கடிகை | நான்மணிக்கடிகை |
| கந்தபு. | கந்தபுராணம் |
| திருவாச. | திருவாசகம் |
| கலி. | கலித்தொகை |
| நைடதம் | நைடதம் |

| | |
|---|---|
| குற்றாலத் தலபுராணம் | திருக்குற்றாலத் தலபுராணம் |
| திருமுருகாற்றுப்படை | திருமுருகாற்றுப்படை |
| திருவிளையாடற்புராணம் | திருவிளையாடற் புராணம் |
| மு. ரா. க. | மு. ரா. கந்தசாமிக் கவிராயர் |
| க. ரா. சா. | கம்பராமாயண சாரம் |
| திருமூலர் | திருமூலர் |
| சிங்கை வெண்பா | சிங்கை வெண்பா |
| திருவேங்கடமாலை | திருவேங்கடமாலை |
| குமரகுருபரர் | குமரகுருபரர் |
| திரிகூடராசப்பக் கவிராயர் | திரிகூடராசப்பக் கவிராயர் |
| நளவெண்பா | நளவெண்பா |
| கலிங்கத்துப்பரணி | கலிங்கத்துப்பரணி |
| தணிகைப்புராணம் | தணிகைப்புராணம் |
| நன்னூல் | நன்னூல் |
| நீதிநெறி விளக்கம் | நீதிநெறி விளக்கம் |
| சுவர்க்கநீக்கம் | சுவர்க்கநீக்கம் |
| சீவகசிந்தாமணி | சீவகசிந்தாமணி |
| தாயுமானவர் | தாயுமானவர் |
| 'தமிழர் நேசன்' | 'தமிழர் நேசன்' |
| கோயிற்புராணம் | கோயிற்புராணம் |
| மகாவாக்கியம் | மகாவாக்கியம் |
| வீரசோழியம் | வீரசோழியம் |
| பதிற்றுப்பத்து | பதிற்றுப்பத்து |
| வால்மீகி ராமாயண வசனம் | வால்மீகி ராமாயண வசனம் |
| பெரும்பாணாற்றுப் படை | பெரும்பாணாற்றுப் படை |
| வில்லி பாரதம் | வில்லி பாரதம் |
| சேக்கிழார் (தடுத்தாட்கொண்ட புராணம்) | சேக்கிழார் (தடுத்தாட்கொண்ட புராணம்) |
| கம்பர் (தனிப்பாடல்) | கம்பர் (தனிப்பாடல்) |
| தொல்காப்பியம் | தொல்காப்பியம் |
| திருக்கோவையார் | திருக்கோவையார் |
| சாகுந்தலம் | சாகுந்தலம் |
| அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் | அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் |
| நாம. நிக. | நாம தீப நிகண்டு |
| அகலிகை வெண்பா | அகலிகை வெண்பா |
| தென்னிசன் | தென்னிசன் (Tennyson) |
| Paradise Lost | Paradise Lost |

## படல அட்டவணை

# கம்பராமாயண சாரம்

## சுந்தர காண்டம்

[மற்றைய காண்டக் கதைகளினும் அழகான கதையைக் கூறுவது; இராமனது திருமேனி அழகைக் கூறுவது; சுந்தரன் என்னும் பெயரையுடைய அனுமான் செயல்களைக் கூறுவது என இக்காண்டத்திற்குப் பலர் பலவாறு பொருள் கூறுவர்]

### 1. கடல் தாவு படலம்

[இலங்கை சேருமாறு அனுமான் கடலைத் தாவிச் சென்றதைக் கூறுவது]

கடவுள் வாழ்த்து

அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை யரவெனப் பூத மைந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபா டுற்ற வீக்கம்
கலங்குவ தெவரைக் கண்டா லவரென்பர் கைவி லேந்தி
இலங்கையிற் பொருதா ரன்றே மறைகளுக் கிறுதி யாவார்

கொண்டுகூட்டு * : *அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு என, எவரைக் கண்டால், பூதம் ஐந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் (ஆகிய சராசர) வேறுபாடு உற்ற வீக்கம் கலங்குவது, மறைகளுக்கு இறுதியாவார் (ஆகிய) அவரே கைவில் ஏந்தி இலங்கையில் பொருதார் என்பர்.*

பொருள்: *உண்மைப் பொருளாகிய மாலையை உள்ளபடி கண்டால், முன் அம் மாலையால் தோன்றிய தோற்றப் பொருளாகிய பாம்பு காணப்படாது நீங்குதல் போல, உண்மைப் பொருளாகிய எவரைக் கண்டால், அவரால் தோன்றிய தோற்றப் பொருளாகிய பிரபஞ்சம் காணப்படாது நீங்குமோ, வேதாந்தப் பொருளாகிய அவரே இலங்கையில் இராக்கதரோடு போர் செய்தார் என்பார்கள் பெரியோர்.*

---

* *அந்நுவயம - உரைமுறை - வசன நடை* (Prose order).

அலங்கல் - பூமாலை. உற்ற - மிகுந்த. வீக்கம் - மிகுதி. அன்று, ஏ, அசைகள்.

'அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு, (அலங்கலை உள்ளபடி கண்ட மாத்திரத்தில், காணப்படாதொழிதல்) என' என்று, 'அரவு' என்பதற்குப் பின் 'என' என்பதற்கு முன் பல சொற்களை வருவித்துப் பொருள் கொள்ளல் வேண்டும். இவ்வாறு பொருள் விளக்கத்துக்குத் தடையின்றிக், கூறாது விடக்கூடிய சொற்களைக் கூறாது விடுதலைக் கம்பராமாயணத்திற் பல இடங்களிற் காணலாம். இதற்கோருதாரணமாகக் க. ரா. சா. பால காண்டம் 'குருவின்' என்ற 42-ம் பாட்டைப் பார்க்க.

மாலை மாயைக்கும், மாலை காரணமாகத் தோன்றும் பாம்பு மாயை காரணமாகத் தோன்றும் பிரபஞ்சத்துக்கும், மாலையைப் பாம்பாகக் காணும் (சூரியன் ஒளி தோன்றாத) காலம் மாயையைப் பிரபஞ்சமாகக் காணும் (ஈசுவரன் அருள் தோன்றாத) காலத்துக்கும், காண்போன் ஆன்மாவுக்கும், சூரியன் ஈசுவரனுக்கும், சூரியன் ஒளி ஈசுவரன் அருளுக்கும், சூரியன் ஒளியால் மாலையை உள்ளபடி அறிதல் ஈசுவரன் அருளால் மாயையை உள்ளபடி அறிதலுக்கும், மாலையை உள்ளபடி அறியவே அது காரணமாகத் தோன்றிய பாம்பு காணப்படாதொழிதல் மாயையை உள்ளபடி அறியவே அது காரணமாகத் தோன்றிய பிரபஞ்சம் காணப்படாதொழிதலுக்கும் ஒப்பு என்று உவமான உவமேயங்களை விரித்துணர்ந்துகொள்க.

பிரபஞ்சத்திற்கு மூலமாயிருக்கும் மாயை பிரகிருதி என்றும் கூறப் படும்.

நமக்குப் புலப்படும் பிரபஞ்சத்துக்கு முதற்காரணமான மாயை சட மாதலால், தானே தொழிற்பட மாட்டாத அதனினின்றும் பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பவர் 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்றவாறு ஈசுவரனென்பது பற்றி 'அவரால் தோன்றிய தோற்றப் பொருளாகிய பிரபஞ்சம்' என உரையிற் கூறப்பட்டது.

மாலையை வியவகாரிக உண்மைப் பொருளாகவும் மாயையைப் பாரமார்த்திக உண்மைப் பொருளாகவும் கொள்க.

'(நிலம் நீர் தீ காற்று வானம் ஆகிய) பஞ்சபூதங்களும் (தனிப் பொருள்களாக உள்ள தன்மை நீங்கித் தம்முட் கலப்புற்றுத் தம் தனி நிலையினின்று) மாறிய மாறுபாட்டினால் (ஆகிய சராசர) பேதங்கள் மிகுந்த மிகுதி' என்ற பொருள் உள்ள 'பூதம் ஐந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடு உற்ற வீக்கம்' என்பது, அண்டகோடிகளடங்கிய பிரபஞ்சத்தைக் குறித்தது.

மாலையில் தோன்றும் பாம்பு, தோற்றத்தில் உள்ளதாய், உண்மையில் இல்லாததாதல்பற்றிப் 'பொய்ம்மை அரவு' எனப்பட்டது.

'மா யானையைக் காண்போர், அது எப்பொருளால் ஆக்கப்பட்டதோ, அப்பொருளாகிய மரத்தைக் காணார்; மரத்தைக் காண்போர், அதனால் ஆக்கக் கூடிய யானையைக் காணார்; அவ்வாறே, பாராதி பூதபரிணாமமான பிரபஞ் சத்தைக் காண்போர் அதன் காரணமாகிய பரம்பொருளைக் காணார்; பரம் பொருளைக் காண்போர் அதன் காரியமாகிய பிரபஞ்சத்தைக் காணார்' என்று பொருள்படும்,

> மரத்தை மறைத்தது மாமத யானை
> மரத்தில் மறைந்தது மாமத யானை
> பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
> பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்

என்ற திருமந்திரப் பாட்டுடன் இப்பாட்டு ஒருவாறு கருத்தொத்திருத்தல் காண்க.

இந்தியாவினின்று இலங்கைக்குத் தூத்துக்குடி வழியாகச் செல்வோர், இடையே உள்ள ஒரு தீவைக் கடக்கும்வரையும் இந்தியாவைக் காண்கின் றன ரென்றும், இலங்கையைக் காண்கின்றில ரென்றும், அத்தீவைக் கடந்த மாத்திரத்தில் அவர்களுக்கு இலங்கை தோன்ற, இந்தியா மறைந்துவிடுகின்ற தென்றும் சொல்லப்படுவதும் மேற்கூறிய கருத்துக்குத் துணையா யிருத்தல் காண்க.

ஆன்மா, பிரபஞ்ச முகமாகிப் பிரபஞ்சப் பற்று (அதாவது பிரபஞ்சப் பொருள்களில் அவா) உடைமையே,

> அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
> தவாப் பிறப்பீனும் வித்து

என்றவாறு, பிறப்புக்குக் காரணம்; அதுபோல, ஆன்மா பரம்பொருள் முக மாகிப் பரம்பொருட் பற்றுடைமையே பிறப்பு நீங்குதற்குக் காரணம் என்ற கருத்தை இப்பாட்டு விளக்குதல் கவனிக்கத்தக்கது.

மெய்ப்பொரு ளல்லாத பிரபஞ்சத்தை மெய்ப்பொரு ளென்று மயங்கு தலால் பிறப்பு உண்டாதலும் மெய்ப்பொரு(ளாகிய கடவு)ளை அறிதலால் அம்மயக்கமும் பிறவியும் ஒழிதலும் கூறுதலால், இப்பாட்டு,

> பொருள் * அல்லவற்றைப் பொருளென் றுணரும்
> மருளான் † ஆம் மாணாப் பிறப்பு

என்ற குறட் கருத்தைத் திருட்டாந்த முகத்தால் தெளிவித்தல் தெரிக.

---

* பொருள் - மெய்ப்பொருள்.

† மருள் - மயக்கம்; மருள், மயக்கம், விபரீத உணர்வு, திரிபுணர்ச்சி என் பவை ஒரு பொருள் குறித்தவை.

உயிர், ஈசுரன், உலகம் என்ற முப்பொருள்கள், என்றும் உள்ள மெய்ப் பொருள்களென்னுங் கொள்கை, சைவ வைஷ்ணவர்க்குப் பொது. ஆதலால் மேலே, பிரபஞ்சம் என்ற உலகத்தைப் பொய்ப்பொருளென்றது ஸ்தூலப் பிரபஞ்சத்தைக் குறித்தென்க. ஸ்தூலப் பிரபஞ்சம் அழிதலாவது அது முன் னிருந்த சூக்கும நிலையை யடைதலென்றும், ஸ்தூலப் பிரபஞ்சம் சூக்குமப் பிரபஞ்சத்தி லொடுங்கச் சூக்குமப் பிரபஞ்சம் மூலப் பகுதியில் ஒடுங்கி இறுதியாகச் சர்வ வியாபகப் பொருளாகிய பரத்தி லொடுங்கிய நிலையைப் 'பரத்தில் மறைந்தது பார் முதற் பூதம்' என்பது குறித்த தென்றும் மேற் கூறிய கொள்கையுடையார் கூறுவர்.

'மாலையினிடத்தில் உண்டாகின்ற பாம்பு என்ற பொய்யாகிய எண் ணம் போல (விபரீத புத்தியை உண்டாக்குவதும்) பஞ்சபூதங்களும் தனித் தனியே யிருக்கும் தம் தன்மையை விட்டு மாறி ஒன்றாகச் சேர்ந்ததனாலான தும் (இருத்தல், பிறத்தல், பருத்தல், வளர்தல், தேய்தல், அழிதல் என்ற உட லுக்குண்டாகின்ற அறுவகையாக) விகாரப்படுதலை யுடையதும் (தேவர், மனிதர், விலங்கு, தாவரம் என்னும் பாகுபாடு பொருந்தியதுமான மிக்க பிறப்பு எவரைப் பார்த்த மாத்திரத்தில் ஒழிந்துவிடுமோ, வேதங்களின் முடி வான உபநிடதங்களிற் கூறப்படுகின்ற பொருளா யிருப்பவராகிய அக் கட வுளே இலங்கையிற் (சென்று அரக்கருடன்) போர் புரிந்து அவரை வென் றவராவர் என்று சொல்வார் (தத்துவ ஞானிகள்)'* என்று இப்பாட்டுக்குப் பொருள் கூறப்பட்டிருப்பது காண்க.

இப்பாட்டிற் கூறிய மயக்கக் காட்சிபோல, அடுத்த பாட்டில், கடலைக் கடக்கப் பேருருவங்கொண்ட அனுமான் பொன்னுலகமாகிய தேவ லோகத்தைக் கண்டபோது, அது பொன்னுடான இலங்கையோ என்று சந்தேகித்தற் கேதுவான மயக்கக் காட்சி கூறப்பட்டிருத்தல் கவனிக்கத் தக்கது. அம்மயக்கக் காட்சிக்கு இம்மயக்கக் காட்சி தோற்றுவாய் செய் தது போலும். (க)

**அனுமான் கால்களை ஊன்ற, மகேந்திர மலையிலுண்டான நிகழ்ச்சிகள்**

**2.** வன்றந்த வரிகோ ளுகம் வயங்கன லுமிழும் வாய
பொன்றந்த முழைக டோறும் புறத்துராய்ப் புரண்டு போவ
நின்றந்த மில்லா னூன்ற நெரிந்துகீ ழழுந்தி நீலக்
குன்றந்தன் வயிறு கீறிப் பிதுங்கின குடர்கண் மான

* வை. மு. கோ.

கொண்டுகூட்டு: *அந்தம் இல்லான் நின்று ஊன்ற, நீலக் குன்றம் நெரிந்து கீழ் அழுந்தி(யதால்) தன் வயிறு கீறிப் பிதுங்கின குடர்கள் மான, வல் தந்தம் வரிகொள் நாகம் வயங்கு அனல் உமிழும் வாய(னவாய்ப்) பொன் தந்த முழைகள் தோறும் புறத்து உராய்ப் புரண்டு போவ.*

பொருள்: *(மகேந்திர மலைமீது ஏறி நின்று இலங்கை சேர்தற்குப் பேருருவங் கொண்ட) அனுமான் கால்கள் அழுத்த, (அவன் உடற் பாரத்தினால் அந்த) மலை நெரிந்து கீழே அழுந்தியதனால், அதன் வயிறு பிளந்து பிதுங்கின குடல்கள் போலப் பெரிய மலைப் பாம்புகள் தாம் தங்கியிருந்த குகைகளிலிருந்து வெளியே நெளிந்து பெயர்ந்து போவனவாயின.*

*வல் தந்தம் வரிகொள் - வன்மையான பற்களையும் (உடல்) வரிகளையும் உடைய. அனல், விஷத்தைக் குறித்தது. வாய - வாயை உடையன. பொன் தந்த முழை - (சுரங்கங்களில்) பொன்னைத் தருகின்ற குகைகள். உராய் - பெயர்ந்து—சிந்தா.; உலாவி—புற நா. 'உராவி' உராய் என வந்தது. அந்தம் இல்லான், அனுமான் சிரஞ்சீவி என்பதைக் குறித்தது. குடர், குடல் என்பதன் போலி. மான - போல.*

*இப்பாட்டுத் திரிபு என்னும் சொல்லணியாய் அமைந்திருத்தல் காண்க.*

பாட பேதம்: *வயங்கழல்: குன்றந்த வயிறு.* (உ)

[ *அனுமான் கால் ஊன்றிய அதிர்ச்சியால் வெருண்டு அந்த மலைப் புலிகள் இன்னும் மயிர் முளையாத கண் திறவாத தம் இளங் குட்டிகளை வாயிற் கௌவித் தூக்கிக்கொண்டு ஓடலுற்றன.* ]

### மலை மரக்கலம்போல் ஆதல்

**3.** தாரகை சுடர்கண் மேக மென்றிவை தவிரத் தாழ்ந்து
பாரிடை யழுந்து கின்ற படர்நெடும் பனிமாக் குன்றம்
கூருகிர்க் குவவுத் தோளான் கூம்பெனக் குமிழி பொங்க
ஆர்கலி யழுவத் தாழுங் கலமென லாயிற் றன்றே

கொண்டுகூட்டு: *தாரகை சுடர்கள் மேகம் என்ற இவை தவிர, பார்இடைத் தாழ்ந்து அழுந்துகின்ற படர் நெடும் பனிமாக் குன்றம், கூர் உகிர் குவவு தோளான் கூம்பு என, ஆர்கலி அழுவத்துக் குமிழி பொங்க ஆழும் கலம் எனல் ஆயிற்று.*

பொருள்: நட்சத்திரங்கள், சூரிய சந்திரர்கள், மேகம் என்ற (தன் உச்சிக்கு அடுக்க உள்ள) பொருள்கள் (மேலே செல்லுதல் போலத் தன்னினின்று) நீங்கா நிற்கப், பூமியில் அழுந்துகின்ற அந்த மலை, (தன்மேல் நின்ற) அனுமான் பாய்மரம் போலத், தான், சமுத்திரத்தில் குமிழிகள் எழ முழுகுகின்ற மரக்கல மென்று சொல்லும்படி யாயிற்று.

தாரகை - நட்சத்திரம். என்ற இவை, என்றிவை யெனத் தொக்கது. தவிர - நீங்க. கூர்உகிர் - கூர்மையான நகம். குவவு - திரட்சி. கூம்பு - பாய்மரம். ஆர்கலி - கடல். அழுவம் - பரப்பு; ஆழம். கலம் - கப்பல்.

'பூமியை ஆர்கலி யழுவமாகவும், அப் பூமியில் தாழ்ந்து உட்புகும் மகேந்திர மலையை அக்கடலில் முழுகிப்போகும் மரக்கல மாகவும், அம் மலை மீது நின்ற அனுமானை அம் மரக்கலத்தின் மீதுள்ள பாய்மரமாகவும், அக்காலத்து மலையின் மேற்புறத்தில் தோன்றும் நக்ஷத்திரங்களையும் சுடர் களையும் அம் மரக்கலம் முழுகுங் காலத்துத் தோன்றும் நீர்க் குமிழிகளாக வும் கொள்க. "மேகந் தவிர" என்று கூறியது, இயற்கை பற்றியதே யன்றி, உவமையை நிறைத்தற்காகவன் றென்க.' * உவமை நிறைத்தற் காகவன் றென்று கொள்ளாமல், உவமானத்தில் மேகத்தை வெண் மேக மாகக்கொண்டு, உவமேயத்தில் நுரையை வருவித்து 'மேகம் நுரையாகவும்' என்று சேர்த்துக் கூறலாம். கம்பர் உவமான உவமேயங்கள் கூறுங்கால், சில சமயங்களில், அவைகளிற் சில பகுதிகளைக் கூறாது உய்த்துணரவைத்த லுண்டாதலால். உவமேயத்தில் 'குமிழி' வருதல் கொண்டு 'நுரை' வரு விப்பது உபலக்கணத்தா லென்க. (௩)

## தேவமாதர் நடுங்குதல்

4. வெயிலியற் குன்றங் கீண்டு வேடித்தலு நடுக்க மெய்தி
மயிலியற் றேவி மார்க டழீஇக்கோளப் பொலிந்த வானோர்
அயிலெயிற் றரக்க னள்ளத் திரிந்தநா ளணங்கு புல்லக்
கயிலையி னிருந்த தேவைத் தனித்தனிக் கடுத்தல் செய்தார்

கொண்டுகூட்டு: வெயில் இயல் குன்று கீண்டு வெடித்தலும் மயில் இயல் தேவிமார்கள் நடுக்கம் எய்தி தழீஇக் கொள்ளப் பொலிந்த வானோர், அயில் எயிற்று அரக்கன் அள்ள, (கயிலை) திரிந்தநாள், அணங்கு புல்ல (அக்) கயிலையின் இருந்த தேவைத் தனித்தனி கடுத்தல் செய்தார்.

* வை. மு. கோ.

பொருள்: (அனுமானது பாரம் தாங்க மாட்டாமல்) அந்த மலை பிளந்து வெடிக்கத், தேவமாதர் பயந்து தம்மைக் கட்டிக் கொள்ள விளங்கிய தேவர்கள், இராவணன் கைலாச மலையை வாரியெடுக்க, அம்மலை சுழன்ற காலத்தில் பயந்து உமாதேவி கட்டிக்கொள்ள அந்த மலையில் இருந்த சிவனைத் தனித்தனியாக ஒத்தார்கள்.

வெயில் - ஒளி. இயல் - தன்மை. வெயில் இயல் குன்று - (தன்னிடத் துள்ள பொன்மணிகள் அருவிகள் முதலியவைகளால்) ஒளித் தன்மையுடைத் தான மலை. மயில் இயல் - மயில் போலும் சாயல். தேவி - தேவப்பெண்; மனைவி. தழீஇ - தழுவி. அயில் - கூர்மை. எயிறு - பல். கடுத்தல் - ஒத்தல்.

பாட பேதம்: மயிலியற் றளிர்க்கை மாதர். (ச)

அனுமான் ஆகாயத்தில் கிளம்புதல்

[ அனுமான் வாலை உயர்த்திக், கால்களை மடக்கி, மார்பை ஒடுக்கித், தோள்களை எழுப்பிக், கழுத்தைச் சுருக்கிக், கைகளை நீட்டி, வேகமாக உயரக் கிளம்பினான். ]

வானிற் செல்லும் அனுமான் வருணனை

விண்ணவ ரேத்த வேத முனிவரர் வியந்து வாழ்த்த
மண்ணவ ரிறைஞ்சச் செல்லு மாருதி மறமுட் கூர
அண்ணல்வா ளரக்கன் றன்னை யமுக்குவா மின்ன மென்றுக்
கண்ணுத லொழியச் செல்லுங் கயிலையங் கிரியு மொத்தான்

கொண்டுகூட்டு: விண்ணவர் ஏத்த, வேதம் முனிவரர் வியந்து வாழ்த்த, மண்ணவர் இறைஞ்சச், செல்லும் மாருதி, மறம் உள்கூர, 'அண்ணல் வாள் அரக்கன் தன்னை இன்னம் அமுக்குவாம்' என்று, கண்ணுதல் ஒழியச், செல்லும் கயிலையங்கிரி ஒத்தான்.

பொருள்: தேவர்கள் துதிக்க, முனிவர்கள் ஆசீர்வதிக்கப், பூவுலகத்தோர் வணங்கச் செல்லுகின்ற அனுமான், (தன்னைப் பிடுங்கி எடுத்தானென்ற) கோபம் மனத்தில் மிகுதலினால், 'இராவணனை முன் அமிழ்த்தினது போல இன்னும் அமிழ்த்துவோம்' என்று, சிவன் தன்மீது இருத்தல் நீங்கத் தனியே செல்லும் கைலாச மலையை ஒத்தான்.

மறம் உள்கூர - கோபம் மனத்தில் மிக. அண்ணல் - பெருமை (உடைய).

'முன்னர்ச் சிவபிரான் இராவணன் சாமகானஞ் செய்ததற்கு உவந்து அவனைக் கால் தளர விட்டிட்டமை கருதி, கைலாசகிரி இப்பொழுது அவனை அமுக்குதற்கு அப்பிரானின்றித் தான் தனியே சென்றதென்க.' *

கைலை மலையாகிய வெள்ளிமலை பருமையிலும் நிறத்திலும் அனுமானை ஒத்ததென்க. (௫)

தடக்கைநா லைந்து பத்துத் தலைகளு முடையான் றனே
அடக்கியைம் புலன்கள் வென்ற தவப்பய னறுத லோடும்
கேடக்குறி யாக மாகங் கிழக்கெழு வழக்கு நீங்கி
வடக்கெழுந் திலங்கை செல்லும் பரிதிவா னவனு மொத்தான்

கொண்டுகூட்டு: நால் ஐந்து தடக்கை(யும்) பத்துத் தலைகளும் உடையான் ஐம்புலன்கள் அடக்கி வென்ற தவப் பயன் அறுதலோடும், (அவன்) கெட (அறி) குறி ஆக, மாகம் கிழக்கு எழு வழக்கு நீங்கி, வடக்கு எழுந்து இலங்கை செல்லும் பரிதிவானவனை (அனுமான்) ஒத்தான்.

பொருள்: இருபது கைகளும் பத்துத் தலைகளும் உடைய இராவணனது தவப்பயன் அநுபவித்து ஒழிந்துவிட்டதனால், இனி அவன் கெட்டுப்போவதற்குத் துர்நிமித்தமான அறிகுறியாக, இயல்பாக எக்காலத்தும் கிழக்கே உதிக்கும் முறைமை நீங்கி, வடக்கே உதித்துத் தெற்கே இலங்கை நோக்கிச் செல்லும் சூரியனை ஒத்தான் (வடக்கேயிருந்து தெற்கே செல்லும் ஒளிமயமான அநுமான்).

தடம் கை - பெரிய கை; நீண்ட கை. ஐம்புலன்கள் அடக்கி - (ஐம்பொறிகளை அவற்றிற்குரிய) ஐம்புலன்கள் (நுகரச் செல்லாமல்) தடுத்து. மாகம் - ஆகாயம். வழக்கு - வழக்கம். பரிதி வானவன் - சூரிய தேவன். (௬)

அநுமானது வாலின் வருணனை

விளித்துப்பின் வேலை தாவும் வீரன்வால் வேத மெய்க்கும்
அளித்துப்பி னனும னென்னு மறந்துணை பெற்ற தாயும்
களித்துப்புன் றேறழின்மே னின்ற வரக்கர்கண் ணுறுவ ராமென்
றேளித்துப்பின் செல்லுங் கால பாசத்தை யொத்த தன்றே

* வை. மு. கோ.

கொண்டுகூட்டு : விளித்து, பின் வேலை தாவும் வீரன் வால், வேதம் எய்க்கும், அளியும் துப்பும் (உடைய) அனுமன் என்னும் அறம் துணை பெற்றது ஆயும், களித்துப் புன்தொழில்மேல் நின்ற அரக்கர் கண்ணுறுவர் என்று ஒளித்துப் பின் செல்லும் கால பாசத்தை ஒத்தது.

பொருள் : (தோள் கொட்டி) ஆரவாரித்துப் பிறகு கடல் தாவத் தொடங்கிய அனுமானது வாலானது, வேதங்களை உணர்ந்தவனும், அருளும் பலமும் உடையவனும் ஆகிய அந்த அனுமானென்ற தரும தேவதையைத் துணையாகக் கொண்டதாயிருந்தும், கள்ளுண்டு இழிதொழில் புரிதலையே மேற்கொண்ட இராக்கதர் பார்த்துவிடுவார்களென்று (பயந்து, அனுமானது உடல் மறைவில்) மறைந்து பின் பக்கமாகவே (அவர்களைக் கொல்லுங் காலத்தை எதிர்பார்த்து அக்காலம் வந்தவுடன் கொல்லக் கருதிச்) செல்லுகின்ற கால பாசத்தை ஒத்தது.

விளித்து - கூவி. எய்த்தல் - அறிதல். அளி - அருள் ; அன்பு. துப்பு - பலம். களித்தல் - கள் உண்ணல் ; கருவங்கொள்ளல். காலபாசம் - இயமனது கயிறுபோன்ற ஆயுதம்.

'வேதமெய்க்கும் அளித்துப்பின் அனுமன்' என்பதற்கு, 'வேதம் எய்க்கும் ( - உணரும்) அனுமன் ; அளியும் துப்பும் உடைய அனுமன்' என்னாது, 'வேதம் மெய்க்கும்' என்று கொண்டு 'அளி' என்பதற்கு அடையாக்கி, 'வேதங்களில் நிரூபித்துச் சொல்லப்படுகின்ற (திருமாலின் அவதாரமான இராமபிரானது) கருணையாகிய வலிமையைப் பெற்றுள்ள அனுமான்' என்பது முந்திய உரை.

'கீழ் இரண்டாஞ் செய்யுளில் "அண்டமுந் திசைகளெட்டும் நடுங்கத்தோள் கொட்டி யார்த்தான்" என்றுராதலின், இங்கு "விளித்துப்பின் வேலை தாவும் வீரன்" என்றார்.' *

'இனி அனுமான் இலங்கையிற் சென்று தனது வாலினாற் பல அரக்கர்களைக் கட்டியும் எறிந்தும் அடித்தும் தவறாது கொல்வதனால், அவ்வாலுக்கு அரக்கர்மேற் செல்லும் காலபாசத்தை உவமை கூறுதல் ஏற்கும்.'

பாட பேதம் : அருந்துணை. (எ)

விண்ணவரும் மண்ணவரும் அனுமான் வேகங் கண்டு கலங்கல்

[ 'அனுமான் செல்லும் வேகம், இலங்கை (சேர்தற்கு வேண்டிய) அளவினதன்று; அதற்கு மிக அதிகமா யிருக்கின்றது ;



* வை. மு. கோ.

இவ்வளவு வேகங்கொண்ட இவன் குறிப்பு வேறு யாதோ?' என்று விண்ணுலகத்தோரும் மண்ணுலகத்தோரும் கலக்கமடைந்தார்கள்.

அவன் வேகங் கொள்ளும்படி முன்னாக நீட்டிக் கொண்டு சென்ற கைகள், இராம லக்ஷுமணர் அவனுக்குத் துணையாக முன் சென்றாற் போன்றிருந்தன. ]

கடலினின்று மேலெழுந்த மைநாக மலையின் வருணனை

[ அவன் அவ்வாறு செல்லும்போது, எதிரே, கடலுள் முழுகிக்கிடந்த மைநாக மலை, ஆகாயம் அளாவ எழுந்து வந்ததானது, தேவர்கள் அமுதத்துக்காகக் கடலைக் கடைந்த காலத்தில், கடலினின்று ஐராவத யானை தோன்றுதல் போன்றது; அன்றியும், பொன்னும் மணிகளும் ஒளி செய்கின்ற அளவற்ற சிகரங்கள் கிரீடங்கள் போலவும் அருவித்திரள் மேலாடை போலவும் விளங்க, கடலிற் பள்ளிகொண்ட ஆயிரங் கிரீடங்கள் உடைய திருமால் உலகத்துள்ள தீயோரைத் தொலைக்க எழுந்ததும் நிகர்த்தது.

அம் மலைமேற் காணப்பட்ட பளிங்குப் பாறையானது, அதன்மேல் இப்பிகள் ஒலிக்கும் பாசித்திரள் இடிகள் முழங்கும் மேகக் கூட்டம்போல, (தான் ஈன்ற) முத்துக்கள் சூழ விளங்கும் சங்கு நட்சத்திரங்களின் மத்தியில் பிரகாசிக்கும் பூரண சந்திரன் போல, எங்கும் நிலவு பரவப்பெற்ற வானத்தை ஒத்திருந்தது. ]

மைநாகம் அனுமனை உபசரிக்க,
அவன் அதன் அன்பைப் பாராட்டிச் செல்லல்

[ அந்த மலையைக் கண்ட அனுமான், அதனைத் தலைகீழாகத் தள்ளிவிட்டு, அப்பாற் செல்ல, அது, ஒரு மானுட வடிவத்துடன் தோன்றி, 'நான் விரோதி யல்லன். இந்திரன் மலைகளைச் சிறகரிந்த காலத்தில், உன் தந்தையாகிய வாயு தேவன், என்னைக் கடலிற் கொண்டு சேர்த்துக் காப்பாற்றினன். அந்த நன்றியறிவால் அவன் புத்திரனாகிய உன்பால் அன்பு செய்கின்றேன். என்பால் தங்கி இளைப்பாறியிருந்து விருந்தருந்திச் செல்வாயாக' என, அனுமான், 'யான், மேற்கொண்ட காரியம் நிறைவேறினா லன்றி ஒன்றும் புசியேன்; உன் அன்பு என்னைப்பற்றிக்கொண்டபோதே,

உன்பால் தங்கியிருந்து விருந்து அருந்தினேன் போல, மகிழ் வடைந்தேன். அன்பினும் சிறந்ததாக நீ தரத்தக்க விருந்து யாதிருக்கின்றது? ]

8. முன்பிற் சிறந்தா ரிடையுள்ளவர் காதன் முற்றப்
பின்பிற் சிறந்தார் குணநன்றிது பெற்ற யாக்கைக்
கென்பிற் சிறந்தா யதோரூற்றமுண் டென்ன லாமே
அன்பிற் சிறந்தா யதோர்பூசனை யார்க ணுண்டே

கொண்டுகூட்டு: '(யாசகரது) காதல் முற்ற (ஈவதில்) முன்பு சிறந்தார், இடை (சிறந்து) உள்ளவர், பின்பு சிறந்தார் (ஆகிய இவரது கொடைக் காரணமான) குணம் ( - அன்பு) நன்று. இதுபெற்ற யாக்கைக்கு என்பின் சிறந்து ஆயது ஓர் ஊற்றம் உண்டு என்னலாமே! அன்பில் சிறந்து ஆயது ஓர் பூசனை ஆர்கண் உண்டு?

பொருள்: '(தம்பால் அடைந்த யாசகரது) ஆசை நிறைவேற(க் கொடுத்தலில்) முதலாகச் சிறந்தோர் (ஆகிய முதல் வள்ளல்கள்), நடுவாக(ச் சிறந்து) உள்ளோர் (ஆகிய இடை வள்ளல்கள்), கடையாகச் சிறந்தோர் (ஆகிய கடை வள்ளல்கள் என்ற இவர்களுடைய கொடைக்குக் காரணமான) குணமாகிய அன்பு மற்றெல்லாக் குணங்களினும் சிறந்தது. அப்படிப்பட்ட அன்பைக் கொண்ட (உயிர் நின்ற) உடம்புக்கு (உறுதி தருவதாகிய) எலும்பினும் (உறுதி தருவதில் அதிகமாகச்) சிறந்து அமைந்ததோர் உறுதி தரும் பொருள் ஆக அவ் அன்பு அவ் உயிர்க்கு இருக்கின்றதென்று நிச்சயமாகக் கூறலாம். அவ்வளவு சிறந்த அன்பினும் சிறந்த உபசாரம் யாரிடத்தில் உண்டு? (ஒருவரிடத்தும் இல்லை).

வள்ளல்களின் 'குணம்' அன்பு. 'இது' அந்த அன்பைச் சுட்டியது. ஊற்றம் - உறுதி; உறுதி தரும் பொருளை உணர்த்தி நின்றது. ஆமே என்பதில் ஏ தேற்றப் பொருளையும், உண்டே என்பதில் ஏ எதிர்மறைப் பொருளையும் குறித்தன.

அன்பு கொள்வது உயிராயினும், எ௮ - ம் குறள் உரை கூறுமாறு உயிர் 'உடம்போ டியைந்தல்லது அன்புசெய்ய லாகாமையின்' 'இது (அன்பு) பெற்ற யாக்கை' என்றார்.

அன்பு செய்தலினும் உபசாரம் செய்தல் சிறந்த தன்றென்பது கருத்து.

பாட பேதம்: யாங்கணுண்டே. (அ)

[ 'உபசாரமாகிய விருந்திலும் சிறந்த உன் அன்பை ஏற்றுக் கொண்டேன். உன் விருந்தையும், நான் செல்லுங் காரியம் சித்தியானால், திரும்பி வரும்போது ஏற்றுக்கொள்வேன்' என்று அனுமான் சொல்லிச் செல்வானானான். ]

சுரசை அநுமானை வாழ்த்தி வழியனுப்பல்

[ அப்போது, அவன் பலத்தைச் சோதிக்கும்படி தேவர்களா லேவப்பட்ட சுரசை யென்பவள், அரக்கி உருக்கொண்டு, ஆகாய வழியை அடைத்து, 'என் பசி தீர்க்க என் வாயுட் புகுவாயாக. வேறு வழியில்லை' என, மூச்சுவிடும் நேரத்துக்கு முன்னே அவள் வாயுள் நுழைந்து அவன் வெளிப்பட்டான். உடனே அவள் தன் இயற்கை யுருவங்கொண்டு, 'இனி உன்னால் முடியாத காரியம் ஒன்றும் இன்று' என்று வாழ்த்தி வழியனுப்பினாள். ]

அநுமான் அங்காரதாரையின் வாயுட் சென்று வயிற்றைக் கிழித்து வெளிப்படல்

[ அவன் அப்பாற் போம்போது, கடல் மற்றொரு கடலைப் பெற்றுவிடப், பெற்ற கடலின் மீது பிறந்த கடல் தோன்றுதல் போலக், கரிய பெரிய உருவமுள்ள அங்காரதாரை யென்னும் அரக்கி அக்கடலினின் றெழுந்து, யாருடைய நிழல் கிட்டினும் அதைப்பற்றி அவரை யிழுக்கும் தன் வரபலத்தினால் அனுமானை நிழல்பற்றி யிழுத்து, 'என்னைக் கடந்து செல்பவன் ஆரடா!' என்று அதட்ட, அவன், 'அண்டத்துக்கு உறை போன்ற உன் வாய்வழி யல்லது வேறுவழி யில்லையாம்படி வானவழி யடைத்த நீ ஆர்?' என, 'இயமன் உன்னைக் காக்க வந்தாலும், யான் உன்னைத் தின்னும் விருப்பை நிறைவேறாமற் றடுக்க முடியாது!' என்றாள். ]

9. திறந்தா ளெயிற்றையவ ளண்ணலிடை சென்றான்
அறந்தா னரற்றிய தயர்த்தமர ரெய்த்தார்
இறந்தா னெனக்கோடோ ரிமைப்பதனின் முன்னம்
பிறந்தா னெனப்பெரிய கோளரி பெயர்ந்தான்

கொண்டுகூட்டு: அவள் எயிற்றைத் திறந்தாள். அண்ணல் இடை சென்றான். (அவன்) இறந்தான் எனக் கொண்டு அறம்தான் அரற்றியது; அமரர் அயர்த்து எய்த்தார். பெரிய கோளரி (- அனுமான்) ஓர் இமைப் பதனின் முன்னம் (செத்துப்) பிறந்தான் எனப், பெயர்ந்தான்.

பொருள் : (மேற் கூறியவாறு சொன்ன) அவள் வாயைத் திறந்தாள். அனுமான் அதன் ஊடே சென்றான். அவன் இறந் தானென் றெண்ணிக்கொண்டு, தரும தேவதை அழுது புலம்பியது; தேவர்கள் சோர்ந்து வாடினார்கள். அப்போது அவன் இமைப் பொழுதுக்குள்ளாக(ச் செத்துத் திரும்ப)ப் பிறந்தவன் போல (அவள் வயிற்றைக் கிழித்து) வெளியானான்.

*எயிறு - பல், இலக்கணையாக அதனோடு சம்பந்த முடைய வாயைக் குறித்தது. எனக்கொடு - என் றெண்ணிக்கொண்டு. கோளரி - சிங்கம். 'அவள் எயிற்றைத் திறந்தாள்' என மாற்றுக. 'இறந்தான் எனக்கொடு அறந்தான் அரற்றியது' எனக் கூட்டுக.*

*நரசிங்கம் தூணைப் பிளந்து வெளிப்பட்டாற் போல அனுமான் அரக்கி வயிற்றைப் பிளந்து வெளிப்பட்டா னென்றும் இறுதி அடிக்குப் பொருள் கூறுவர்.*

பாட பேதம் : *வயிற்றின் வழி.* (கூ)

**10.** சாகா வரத்தலைவ ரிற்றிலக மன்னான்
ஏகா வரக்கிகுடர் கோண்டுட னெழுந்தான்
மாகா லசைப்பவட மண்ணினுற வாலோ
டாகாய முற்றகத லிக்குவமை யானான்

கொண்டுகூட்டு : *சாகா வரம்(பெற்ற) தலைவரில் திலகம் அன்னான் அரக்கி (வாய்க்குள்) ஏகா, குடர்கொண்டு உடன் எழுந்தான். (அவன்) மா கால் அசைப்ப, வடம் மண்ணின் உற, வாலோடு ஆகாயம் உற்ற கதலிக்கு உவமை ஆனான்.*

பொருள் : *அனுமான் அங்காரதாரையின் குடலைப் பிடுங் கிக்கொண்டு உயர எழுந்தான். அப்போது அவன், கயிறு தரையிலே தொடர்புற்றுக் கிடக்க, வாலோடு ஆகாயத்தை அடைந்த காற்றாடி போன்றான்.*

*சாகாவரத்தலைவர் - சாகா வரம் பெற்ற சிரேட்டராகிய சிரஞ்சீவியர் எழுவர். ஏகா - (அரக்கி வாய்க்குள்) ஏகி. குடர் - குடல். மா - பெருமை. கால் - காற்று. வடம் - கயிறு. கதலி - காற்றாடி.*

*அனுமான் காற்றாடிப் பட்டத்துக்கும், அவன் வால் அதன் வாலுக்கும், அரக்கி குடல் அதன் கயிற்றுக்கும், பிடுங்கப்பட்ட குடலுடன்*

தொடர்புடையதாய் அவள் வயிற்றில் எஞ்சியிருந்த குடற்பகுதி மேலே போனது போகத் தரையிற் கிடக்கும் கயிற்றுப் பகுதிக்கும் ஒப்பு.

பாட பேதம்: நாகா மிருகத் தலைவரில். (௧0)

இலங்கையில் அனுமான் பவள மலையிற் பாய்தல்

[ அவ்வாறு ஆகாய வழியே போன அனுமான், இலங்கா நகரத்துக்கு அடுத்திருந்த பவள மலைமேற் பாய்ந்தான். அவன் பாய்ந்ததனால் அலைந்து தள்ளாடிய அந்த மலை, புயற்காற்று மோதப்பட்ட கப்பல் போன்றது. ]

இலங்கையைக் கண்ட அனுமான் அதிசயம்

மண்ணடி யுற்று மீது வானுற வரம்பின் றன்மை
எண்ணடி யுற்ற குன்றத் தலத்துநின் றெய்த நோக்கி
விண்ணிடை யுலக மென்னு மெல்லியன் மேனி நோக்கக்
கண்ணடி வைத்த தன்ன விலங்கையைத் தெரியக் கண்டான்

கொண்டுகூட்டு: அடி மண் உற்று, மீது வான் உற, வரம்பின் தன்மையை எண்(ணுகின்றதும், அனுமான்) அடி உற்ற(தும் ஆன) குன்றத் தலத்து (அவன்) நின்று, விண் இடை உலகம் என்னும் மெல்இயல் (தன்) மேனி நோக்க, கண்ணடி வைத்தது அன்ன இலங்கையை எய்த நோக்கி (அது) தெரியக் கண்டான்.

பொருள்: தனது அடிப் பாகம் பூமியில் (மிகத் தாழ்வான கீழ்ப் பூமிவரை) பொருந்தி, மேற்பாகம் ஆகாயத்தில் (உச்சிவரை) உற்றதனால் (உலகத்தின் மேல் கீழ்) எல்லை நிலைமையை மதிப்பிடுகின்றாற் போன்றதும், அனுமானது பாதம் தங்கியதுமான (அந்தப் பவள) மலைமேல் அவன் நின்று, வானத்தில் உள்ள தேவலோகமாகிய பெண் தன் வடிவழகைப் பார்க்க வைத்த கண்ணாடி போன்ற — எனவே தேவலோகத்தின் பிரதிபிம்ப மென்று சொல்லும்படியான அழகுடைய — இலங்கையை நன்றாகக் கூர்ந்து நோக்கி (அது துலக்கமாகத்) தெரியக் கண்டான்.

அடி, மண் உற்று என மாற்றுக. எண்ணல் - மதிப்பிடுதல். எய்த நோக்கி - (கண் பார்வை, பார்க்கப்படும் பொருளில் நன்றாகப்) பொருந்தப் பார்த்து. 'அடியுற்ற' என்பதற்கு 'இலங்கைக்கு முன்னடியிலுள்ள' என்றலும் ஒன்று.

மதில் சூழ்ந்த மாவிந்த நகரமும், அதனைச் சூழ்ந்த அகழியும், அதனைச் சூழ்ந்த தரையும், முறையே, ஒரு தடாகத்திலே தோன்றும் தேவநகரின் பிரதிபிம்பத்தையும், அதனைச் சூழ்ந்த நீர்ப் பகுதியையும், அதனைச் சூழ்ந்த கரையையும் போலும் என்ற கருத்துக்கொண்ட 'குடவளைக் குலம்' என்னும் நைடதப் பாட்டை இப் பாட்டு நினைவுகூரச் செய்கின்றது.

பாட பேதம்: வானுறு. (கக)

**12.** நன்னக ரதனை நோக்கி நளினக்கை மறித்து நாகர்
பொன்னக ரிதனை யொக்கு மென்பது புல்லி தம்மா
அந்நக ரிதனி னன்றே யண்டத்தை முழுது மாள்வான்
இந்நக ரிருந்து வாழ்வா னிதுவதற் கேது வென்றான்

கொண்டுகூட்டு: (அனுமான்) நல் நகர் அதனை நோக்கி நளினக் கை மறித்து, 'இது பொன் நகரை ஒக்கும் என்பது புல்லிது அம்மா! அந் நகர் இதனின் நன்றே? அண்டம் முழுதையும் ஆள்வான் இந் நகர் இருந்து வாழ்வான். இது அதற்கு ஏது' என்றான்.

பொருள்: அவன் அந்த இலங்காபுரியைப் பார்த்து (ஆச்சரியத்தால்) கையை மடக்கினவனாய், ('இப் பெண் இலக்குமி போல்வாள்' என்பதிற்போல, உவமேயப் பொருளுக்கு அதனினும் சிறந்த பொருளையே உவமானமாகக் கூறல் முறையாதலால், அதற்கு மாறாக,) 'இந் நகர் பொன்னகரொக்கும் என்பது மதியீனம். இம்மதியீனம் இருந்தவாறு என்னே! ஆச்சரியம்! மெய்யாக அந்த நகரம் (இந்த நகரத்துக்கு உவமான மாகுதற்கு) இந்த நகரத்தினும் அதிக அழகுடையதோ? (இல்லை.) (தேவர் உலகு உள்பட) உலகங்க ளனைத்தையும் ஆளும் இராவணன் இந் நகரிலிருந்து வாழ்கின்றான். இது (- அவன் இந் நகரை இராசதானியாகக் கொண்டு வாழ்வது) அதற்கு (- அந்நகர் இந்நகரினும் அழகுடைய தன்று என்பதற்குக்) காரணமாகு' மென்று எண்ணினான்.

நல் - அழகிய. நன்று - அழகியது: நன்மை - அழகு.—புறப். வெண். மாலை. நளினம் - தாமரை. நாகர் - தேவர். புல்லிது - ஈனமானது: மதியீனமானது என்ற குறிப்புப் பொருள் கொள்ள நின்றது. 'இது பொன்னகரை ஒக்கும்' எனவும் 'அண்டம் முழுதையும்' எனவும் விகுதி பிரித்துக் கூட்டுக. என்றான் - என்றெண்ணினான்.

சுருங்கிய சொற்களால் விரிந்த பொருள் விளங்க 'இது அதற்கு ஏது' என்ற நயம் நோக்கத்தக்கது.

பாட பேதம்: அன்றேல்: வாழான். (௪௨)

மாண்டதோர் நலத்திற் றுமேன் றுணர்த்துதல் வாய்மைத் தன்றால்
வேண்டிய வேண்டி னெய்தி வெறுப்பின்றி விழைந்த துய்க்கும்
ஈண்டரும் போக வின்ப மீறில தியாண்டுக் கண்டாம்
ஆண்டது துறக்க மஃதே யருமறைத் துணிவு மம்மா

கொண்டுகூட்டு: ' "(பொன் நகர்) மாண்டது; ஓர் நலத்திற்று ஆ(கு)ம்" என்று உணர்த்துதல் வாய்மைத்து அன்று; (ஏனெனில்) வேண்டிய வேண்டின் எய்தி விழைந்த(வைகளை) வெறுப்பு இன்றித் துய்க்கும் ஈண்டு(தல்) அரும்போக இன்பம் ஈறு இலது யாண்டுக் கண்டாம், ஆண்டுத் துறக்கம். அரு மறைத் துணிவும் அஃதே.' (என்றான்).

பொருள்: '(மேற்கூறிய இரண்டு நகரங்களுக்குள்ளே "பொன்னகரானது) மாட்சிமைப்பட்டது; ஒப்பற்ற இன்பம் (தருதலை) உடையது" என்று சொல்வது உண்மை யுடையதன்று; (பொய்யே; ஏனெனில், இப்போது அங்குள்ள தேவர்கள் இராவணனாற் செயிக்கப்பட்டவராய்த் துன்புற் றிருக்கின்றனர். எல்லாரும்) விரும்பப்பட்ட பொருள்களை, (எப்போதேனும்) விரும்பினால், (அப்போது) அடைந்து, (அவ்வாறு) விரும்பி அடைந்த பொருள்களைத் தெவிட்டுத லில்லாமல் அநுபவிக்கின்ற, (பிற இடங்களில்) கிட்டாத அநுபோக சுகம் முடிவில்லாதிருப்பதை எவ்விடத்துக் காண்கின்றோமோ, அவ்விடமே சுவர்க்கமாம். அருமையான வேதங்களின் சித்தாந்தமும் அதுவே யாம். (ஆதலால், தேவர்கள் துன்பங்களை அநுபவிக்கும் பொன்னகர் சுவர்க்கமன்று; இராக்கதர் எல்லாப் போகங்களையும் அநுபவிக்கும் இலங்கா நகரே சுவர்க்கமா' மென்று அநுமான் எண்ணினான்.)

மாண்டது - மாட்சிமைப்பட்டது. ஓர் - ஒப்பற்ற. நலம் - இன்பம். நலத்திற்று - இன்பமுடையது. உணர்த்தல் - தெரிவித்தல், சொல்வதைக் குறித்தது. வாய்மைத்து - உண்மை யுடையது. ஆல், அசை. வேண்டிய - வேண்டியவை - விரும்பப்பட்ட பொருள்கள். வெறுப்பு - தெவிட்டுதல். விழைந்த - விரும்பப்பட்டவை. 'விழைந்த(வைகளை) வெறுப்பின்றித் துய்க்கும்' எனக் கூட்டுக. ஈண்டு(தல்) அரும் - நெருங்குதற்கரிய - கிட்டாத. யாண்டு - எவ்விடம். ஆண்டு - அவ்விடம். ஆண்டது என்பதில் அது

பகுதிப்பொருள் விகுதி. முன் பாட்டின் முடிவிலுள்ள 'என்றான்' என் பதை இப்பாட்டின் முடிவிலும் வருவித்துப் பொருள் முடிவுசெய்க.

முந்திய பாட்டில் 'பொன்னகர்' 'இலங்கை' யென ஒன்றற்கொன் றெதிராகக் கூறப்பட்ட நகரங்களுள் முன்னதை இப்பாட்டில் முதலடியி லும் பின்னதை ஏனைய மூன்றடிகளினும் குறிப்பித்தார்.

முதலடிக்கு, 'மிகச் சிறந்த ஒப்புயர்வு இல்லாத அழகை மட்டும் உடையதிவ் விலங்கை என்பது உண்மையல்ல' என்ற பொருளும் உண்டு.

பாட பேதம்: வேண்டுஞ் செல்வம்: வீழ்ந்து துய்க்கும். (கரு)

## 2. ஊர் தேடு படலம்

[ அனுமான் சீதையை இலங்கையில் தேடியதைக் கூறுவது ]

---

### அனுமான் அரக்கரது ஐசுவரியம் கண்டு அதிசயித்தல்

[ அனுமான் பவள மலையிலிருந்து இலங்கா நகரத்தை நோக்கினான். அங்கே உள்ள இராக்கதர் மாளிகைகள் இந்திரன் மாளிகையை ஒத்தவை யென்றால், அவ்வாறு உவமித்தல் குற்றத்தின் பாற் படும்படி அம்மாளிகைகள் சிறந்தன வென்றும், அவ்வாறே அரக்கர் ஐசுவரியம இந்திரன் ஐசுவரியத்தை யொக்குமென்பது மென்றும், திரிலோகங்களிலுமுள்ள பெருமையும் ஒளியும் மிக்க எந்த ரத்தினமும் திருமால் மார்பில் அணிந்த கௌத்துவ ரத்தினத்தை ஒத்திராதது போலப், பெருமையும் அழகுமுடைய எந் நகரும் அந் நகரை யொத்த தில்லை யென்றும், எந்த ஊரும் அந்த ஊரை யொக்குமென்பது நரகம் சுவர்க்கத்தை யொக்கு மென் பது போலுமென்றும், ஒழிவின்றி ஓடும் சூரியன் தேர்க் குதிரைக ளல்லாத எல்லாக் குதிரைகளும், ஒரு கணமும் நிலைபெயர முடியா மல் உலகத்தைத் தாங்கி நிலையாக நிற்கும் திசையானைக ளல்லாத எல்லா யானைகளும் அந்நகரத்துள்ளன வென்னும்படி குதிரை களும் யானைகளும் சிறந்தனவாயும் மிகுந்தனவாயு மிருக்கின்றன வென்றும், இராவணன் இந்திரன் ஆட்சியினின்றும் பறித்துக் கொண்டுவந்து வைத்திருக்கின்ற கறபக தருக்களும், தேவரும்,

---

 * ஊர் தேடு - ஊரில் தேடிய.

தேவமாதரும் ஏவல் செய்துகொண்டிருத்தல் அவன் செய்த தவப் பயனென்றும், அனுமான் எண்ணினான். ]

இலங்கையின் ஒளி மிகுதி

**14.** திருகு றுஞ்சினத் தரக்கருங் கருநிறந் தீர்ந்தார்
அருகு போகின்ற திங்களு மறுவற்ற தழகைப்
பருகு மிந்நகர்த் துன்ஞெளி பாய்தலிற் பசும்போன்
உருகு கின்றது போன்றுள துலகுசூ ழுவரி

கொண்டுகூட்டு: 'அழகைப் பருகும் இந் நகர்த் துன் ஒளி பாய் தலின், திருகுறும் சினத்து அரக்கர் கருநிறம் தீர்ந்தார்; அருகு போகின்ற திங்கள் மறு அற்றது; உலகுசூழ் உவரி பசும்பொன் உருகுகின்றது போன் றுளது.'

பொருள்: '(உண்பவர், வாய்க்கினிய உணவை உண்ணுதல் போலத், தன்னைக் காண்பவர், கண்ணுக்கினிய தனது) அழகைக் கண்ணால் உண்ணுவார்போல் ஆவலோடு காணும் இந் நகரத்தின் ஒளி பாயப் பெற்றதனால், இந் நகரத்தில் உள்ள இராக்கதர் (தமக்கியல்பான) கரு நிறம் நீங்கியுள்ளார்கள்; இந் நகரத்தின் அருகே செல்லும் சந்திரன் களங்கம் நீங்கினதாம்; இந் நகரத் தைச் சூழ உள்ள (இயல்பாகக் கரியதான) கடல் பொன் உருகு கின்றது போன்றிருக்கின்றது' என்று அனுமான் எண்ணினான்.

திருகுதல் - முறுகுதல் — புறநா. தீர்தல் - நீங்குதல். ' "உலகு" என்பது உலகத்தின் ஒரு பகுதியையும் உணர்த்துதலை "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்ற தொல்காப்பியத்திலும் காண்க' என்றதனால் 'உலகு' இங்கே இலங்கை நகரத்தை உணர்த்தியது.

இராக்கதர் கரிய நிறம் நீங்கினதும் கடல் பொன்னுருகினாற் போன்ற தும் அனுமான் முகக் கண்களால் கண்ட தற்காலக் காட்சிகளாகவும், 'அருகு போகின்ற திங்களும் மறுவற்றது' அகக் கண்ணாற் கண்ட பிற்கால நிகழ்ச்சியாகவுங் கொள்க, இப்படலம் 42-ம் பாட்டில் சூரியன் அத்தமித்தல் சொல்லப்படுதலால்.

பாட பேதம்: வெஞ்சினத் தரக்கரும்: பரத்தலின். (கச)

**15.** அண்ட முற்றவும் விழுங்கிரு ளகற்றுநின் றலரி
கண்ட வாற்றினிக் கடிநகர் நெடுமனைக் கதிர்கள்
உண்ட வாற்றினென் றுரைப்பரி தொப்பிடிற் றன்முன்
விண்ட வாய்ச்சிறு மின்மினி யென்னவும் விளங்கா

**கொண்டுகூட்டு :** *'அண்டம் முற்றவும் விழுங்கு இருளை நின்று அகற்றும் அலரியை, இக் கடிநகர் நெடுமனைக் கதிர்கள் கண்ட ஆற்றின் உண்ட ஆற்றினால் (அதனை, உள்ளதாம்) ஒன்று (ஆக) உரைப்பு அரிது. (மனையுடன்) ஒப்பிடில் (அது) தன்முன் விண்ட ஆய்ச் சிறு மின்மினி என்னவும் விளங்கா.'*

பொருள் : *உலக முழுதும் விழுங்கிய இருளை அது நில்லா தொழியத், தான் நிலையாக நின்று, நீக்குகின்ற சூரியனை இந் நகரத்து மாளிகைகளின் ஒளிகள் பார்த்தபடியே விழுங்கிய படியால், அச் சூரியனை உள்ளதாகிய ஒரு பொருளாகச் சொல்லு தற்கில்லை. (அச்சூரியனை உள்ளதாக வைத்து மேற் கூறிய மாளிகையோடு) ஒப்பிட்டால், அது அதன்முன் மின்மினிப் பூச்சி (விளங்குதல்) போலவுங்கூட விளங்காததாம்.'* *

*அலரி - சூரியன். ஆறு - படி. கடி - காவல். நெடுமை - பெருமை. சிவஞான சித்தியாரின் காப்பில் 'செல்வமும் ஒன்றே' என்பதிற்போல, 'ஒன்று' 'ஒரு பொருள்' என்று பொருள் கொள்ள நின்றது. 'உரைப் பரிது' என்பதில் 'அரிது' இன்மை குறித்தது. ஒப்பிடில் - ஒப்பிட்டால். 'விண்டு உமிபோனால் முளையாதாம்' என்பதிற் போல, 'விண்ட' '(ஒளி) நீங்கிய' என்ற பொருள் குறித்தது. 'ஆய் - சிறுமை. (புறநானூறு 249)'— ச. அ. ஆய்ச்சிறு மின் மினி - மிகச் சிறிய மின்மினிப் பூச்சி. 'விளங்கா' என் பதில் துவ் விகுதி தொக்கது.*

*'இருள்(ஐ) நின்று அகற்றும் அலரி(யை) மனைக்கதிர்கள் கண்ட ஆற் றின் உண்ட ஆற்றின் (அவ் அலரியை) ஒன்று (ஆக) உரைப்பரிது' என இயைக்க.*

*பொன்னே நிலமாகிய இலங்கையில், பொன்னாலும் இரத்தினங்க ளாலும் அமைக்கப்பெற்ற மாளிகைகளின் ஒளித்திரள், உலக முழுவதையும் விழுங்கிய இருளை விழுங்கிய சூரியனை விழுங்கியதெனவும், மாளிகை முன்*

---

* *'உலக முழுவதும் நிறைந்த இருளைத் தான் நிலைபெற்று விலக்குகின்ற சூரியன் செய்கின்ற வகையோடு, சிறந்த இவ்விலங்காபுரியிலுள்ள உயர்ந்த மாளிகை களின் கிரணங்கள் (அவ்விருள் முழுவதையும்) உண்டொழிக்கின்ற வகைக்குச் சிறிதும ஒப்புமை சொல்ல இயலாது' என்பது முதல் மூன்றடிகளுக்கு முந்திய உரை.*

சூரியன், அச் சூரியன் முன் மின்மினியையும் ஒவ்வாதெனவும் வியக்குமாறு கூறியது காண்க.

பாட பேதம்: ஆற்றலொன்று: விளங்கான். (கரு)

வன வருணனை மதில் வருணனைகளும் ஆடல் பாடலர்தி விநோதங்களும்

[ 'பொன் மலர், நாற்றம் உடைத்து' ஆனால், எவ்வளவு சிறந்ததாம்! 'மாணிக்கம் தித்திக்கில் என் ஆகும் மற்ற மதுரங்களே!' என்ற மனோபாவனைகள் உண்மையானாற் போல, 'பொன் மணிகளா லியற்றப்பட்ட செயற்கைக் காடுகளும் சோலைகளும் இயற்கை மரங்கள் போலத் தேன் மலர் கனிகளைத் தருகின்ற அற்புதம் இந் நகரத்திலுள்ளதேயன்றி மற்றை நிலவுலகத்திலேனும் வானுலகத்திலேனும் எங்குமில்லை' என்றும், 'இராவணனுக்குப் பயந்து இலங்கைக்கு மேலாகச் செல்லாமல் சூரியன் உத்தராயண தக்ஷிணாயனமாகச் செல்லுகின்றானென்பது உண்மையன்று, நேராக மேலாகச் சென்றால், இந்நகரத்து மதிலொளி கண்கூசச் செய்யுமென்று விலகிச் செல்கின்றா' னென்றும், 'கைலாச மலையைத் தூக்கிய வல்லமையுடைய இராவணன், தனக்குப் பகைவர் வானவராதலால், "அவர்கள் சேர்தற்கரிதாகச் செய்வே" னென்று அவர்களது வானுலகத்தினும் உயரமாக இந்நகர மதிலை அமைத்திருக்கின்றா' னென்றும், 'அவன் ஆணையின்றி இம் மதிலைக் கடந்து உள்ளே வாயு நுழையான், சூரியன் பிரவேசியான், இயமனும் போகா னென்றால், தேவர் செல்ல வல்லரல்ல ரென்று செப்புதல் வீணே!' யென்றும், 'இந் நகரத்திலே பாடுவார் பல ரெனின், ஆடுவார் அவரினும் பல' ரென்றும், 'ஆடல் பாடல்களுக்கியையத் தாளம் தட்டுவார் அவர்களினும் அதிக' ரென்றும், நர்த்தனஞ்செய்யும் தேவமாதருக்கு எதிராக அவரினும் மேலாக வித்தியாதர மின்னார் நிருத்தம் புரிய, அவரோடு இகலி அவரினும் திறமாக இயக்க மகளிர் நடனமாட, அவருடன் வாதிட்டு இராக்கத மடவார் அவரினும் சிறப்பாக நடிக்கக் கண்டு மகிழ்ந்து எந்நாட்டு மங்கையரும் அவ் அரக்கிகளை எதிராராய் வியந்துகொண்டிருக்கின்றார்க' ளென்றும், 'மாளிகைகள் தோறும் சோலைகள் தோறும் கள்ளுண்டு ஆடிப்பாடிக் களிப்படைகின்றவர்க ளல்லாமற் கவலையடைகின்றவர்க ளொருவரையும் காண்கின்றிலே' னென்றும் அனுமான் கருதினான். ]

அரக்கர் களிப்பு

**16.** தேறன் மாந்தினர் தேனிசை மாந்தினர் செவ்வாய்
ஊறன் மாந்தின ரின்னுரை மாந்தின ரூடல்
கூறன் மாந்தின ரனையவர்த் தொழுதெழு கோபத்
தாறன் மாந்தின ரரக்கியர்க் குயிரன்ன வரக்கர்

**கொண்டுகூட்டு :** *'அரக்கியர்க்கு உயிர் அன்ன அரக்கர் தேறல் மாந்தினர்; இசைத் தேன் மாந்தினர்; செவ்வாய் ஊறல் மாந்தினர்; இன் உரை மாந்தினர்; ஊடலில் கூறல் மாந்தினர்; அனையவர்த் தொழுது எழு மாந்தினர்.'*

பொருள் : *'அரக்கிமார்க்கு அவர்கள் உயிர்போன்ற கணவராகிய அரக்கர் (அம்மாதர் கையாற் கொடுக்கப்பெற்று அதனால் இயல்புக் கதிகமாக இனியதான) தேனைக் குடித்து மகிழ்ந்தார்கள்; (அத்தேனினும் இனிதாக அவர்கள் பாடும்) இசைத் தேனைச் செவிமடுத்து* * *மகிழ்ந்தார்கள்; (அவ் இசைத்தேனை அளித்த) செவ்வாயிற் பிறந்த நீர் (ஆகிய தேனை) உட்கொண்டு மகிழ்ந்தார்கள்; (மீண்டும் அவ்வாயிற் பிறந்த) இனிய பேச்சைக் கேட்டு மகிழ்ந்தார்கள்; (இனிது பேசியவர் 'ஊடுதல் காமத்திற் கின்பம்' என்று ஊடி அவ்) ஊடலில் ('தொடாதே' 'தூரப்போ' என்பன போன்ற வார்த்தைகளைக்) கூறுதலையும் பிரியமாகக் கேட்டு மகிழ்ந்தார்கள்; (அவ் ஊடல் தணியத்) தொழுது அதன் பயனாகக் கோபம் ஆறுதலை உணர்ந்து மகிழ்ந்தார்கள்.'*

*தேறல் - தேன்; கள் என்றும் பொருள் கூறலாம். 'மாந்தினர்' எனப் பலமுறை வருபவைகளுள் முதல் மூன்றும் 'உண்டார்' என்ற செம்பொருளையும், அடுத்தவை இரண்டும் இறுதிய தொன்றும் முறையே 'கேட்டார்' 'உணர்ந்தார்' என்ற தாற்பரியப் பொருள்களையுந் தந்து நின்றன. 'தேன் இசை'யை 'இசைத்தேன்' என மாற்றுக. தேன் 'இசை'யைத் 'தேன்போலும் இசை' என்று கொண்டால், 'இசை மாந்தினர்' என்பதற்கு 'இசையைக் கேட்டு மகிழ்ந்தனர்' என்று பொருள் கொள்க. கோபத்து ஆறல் - கோபத்தின் தணிவு.*

*அனுமான், இதன் முன், இராக்கதர் 'களிக்கின்றாரன்றிக் கவல்கின்றாரொருவரைக் காணேன்' என்று, இப்போது இவ்வாறு களித்தார்களென்று தான் கண்டவற்றையும் ஊகித்தவற்றையும் தனக்குத் தானே*

* செவிமடுத்தல் - கேட்டல்; மடுத்தல் - குடித்தல்.

கூறுகின்றாகாதலால், அதனை விளக்க, 'மகிழ்ந்தார்' என்ற சொல்லை வருவிக்கவேண்டிய இடங்களெல்லாவற்றிலும் வருவித்துப் பொருள் கூறப்பட்டிருத்தல் காண்க.

ஓர் இராக்கத மாது கள்ளுக் கொடுக்க அவள் கணவன் குடித்துக் களித்தான்; வேறொருத்தி பாட அவள் புருடன் கேட்டு மகிழ்ந்தான்; மற்றொருத்தி வாயமுதை அவள் கொழுநன் உண்டு உவந்தான் என்றிவ்வாறாகத் தொடர்பின்றிப் பிரித்தும் இப்பாட்டுக்குப் பொருள் செய்யலாம்.

பாட பேதம்: தொழுதவர். (கசு)

## இராக்கதர் பெருக்கமும் இலங்கையின் பரப்பும்

[ 'தேவர் மனிதர் மிருகங்கள் முதலிய உயிர்த் தொகைகள் இராக்கதர் தொகைக்கு உறையிடவும் போதா. இந்நகர வித்தாரம் அபாரமானது. இதன் ஒரு தெருவிலிருந்து மற்றொரு தெருவுக்குப் போதல், ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசத்துக்குப் போதல் போலாம். ]

## சேனைச் சிறப்பு

[ 'யான், இராம பிரானுக்கு இலங்கைச் சேனை அளவைத் திரும்பிச் சென்று செப்பும் போது, மல் வீரர் படை பெரிதென்பேனோ, வாள் வீரர் படை பெரிதென்பேனோ, விற்படை பெரிதென்பேனோ, எப் படை பெரிதென்பேன்!' என்னும் இவை போல்வன பலவும் எண்ணி, 'இனி இராக்காலம் சமீபிப்பதால் இரவிற் சஞ்சரிப்போராகிய இராக்கதர் இங்கு வர நேரினும் நேரும்' என்று, அவர் அறியாவாறு அனுமான் தன் உடலைச் சுருக்கி மறைவானான். சூரியனும் தன் ஒளியை ஒடுக்கி மறைந்தான். ]

## இருட் செறிவு

[ இருள் இராவணனுடைய பாவம்* போல வளர்ந்து, அவன் பழிபோலப் பரந்தது. செவ்வந்தி வானமும் காரிருளும், நெருப்பும் புகையும் நிகர்த்தன. ]

* பாவம் கருமை யென்பதும், தருமம் வெண்மை யென்பதும் கவிமரபு.

இராவணனுக்கு ஏவல் செய்யத் தேவர்கள் விரைதல்

[ *இராக்கதர், இராவணன் ஏவலால், இந்திரன் சந்திரன் இயமன் முதலியோருடைய உலகங்களுக்குச் செல்லலுற்றனர். இராவணனுக்குப் பணிவிடை புரியத், தேவமாதர், வித்தியாதர மடவார், இயக்க மகளிர், நாக கன்னியர் ஆகிய இவர்கள் விண் வழியே விரைந்து சென்றனர். அவ்வாறே தேவரும் அசுரரும் நாகரும் இயக்கரும் வித்தியாதரரும் வேறு தேவ கணத்தினரு மாகக் குற்றேவல் செய்யக் கூட்டங் கூட்டமாகச் செல்வோர், 'தாமதமாய்விட்டது, இராவணன் கோபிப்பான்' என்று தலை மாலையும் கழுத்து மாலையும் மேலாடையும் சரிந்து விழ விரைந் தோடினார்கள்.* ]

சந்திரோதய வருணனை

[ *இராவணன் முதலிய இராக்கதர்களின் பாவமாகிய கோடை காய்ந்து வாட்டியதனால், ஈரப் பசையற உலர்ந்திருந்த தருமமாகிய பயிர், அனுமானாகிய மழை வரப்பெற்றதனால், மூளைத்தெழுதல் போலச் சந்திரன் உதித்தெழுந்தது.*

*கீழ்த்திசைக் கிறைவனாகிய இந்திரனுக்குச் சத்துருவாகிய இராவணன், அனுமான் வந்ததனால், வாழ்வற்றான், இந்திரன் வாழ்வுற்றான் என்ற மகிழ்ச்சியால் கீழ்த்திசையாகிய பெண்ணின் முகம் பொலிவது போலச், சந்திரன் பொலிந்தது.*

*இராவணனுக்கு அடங்கி யொடுங்கி ஒதுங்கிப் பதுங்கி யிருந்த இந்திரன், இனிப் பகை ஒழிந்த தென்று பயம் நீங்கித் தனக்குரிய கீழ்த் திசையினின்று கெம்பீரமாக வெளியே புறப் பட, அவன் சாமரைகள் போலக் கடலலைகள் எழுந்து விழுந்து விளங்க, அவன் கொற்ற வெண்குடை போலச் சந்திரன் பொலிந் தது.*

*ஆகாயமாகிய புருடன் சந்திரனாகிய வெள்ளிக் குடத்தினால் பாற்கடலின் பாலை முகந்து பூமிமேற் பொழிந்தாற் போல வெண் ணிலா எங்கும் பரவியது.*

*ஆகாயம், காமதேனு வென்ற வானுலகப் பசுவாகச், சந்தி ரன் அப்பசுவின் பால்மடியாக, அம் மடியினின்று சுரந்து வழிந்து பரந்த பாற்பரப்புப் போல நிலாப் பரப்புத் தோன்றியது.* ]

நட்சத்திர வருணனை

**17.** எண்ணுடை யனுமன்மே லிழிந்த பூமழை
மண்ணிடை வீழ்கில மறித்தும் போகில
அண்ணல்வா ளரக்கனை யஞ்சி யாய்கதிர்
விண்ணிடைத் தங்கின போன்ற மீனெலாம்

கொண்டுகூட்டு: *மீன் எலாம், எண் உடை அனுமன்மேல் (வானவர் இறைக்க) இழிந்த பூமழை, அண்ணல் வாள் அரக்கனை அஞ்சி மண் இடை வீழ்கில(வாய்), மறித்தும் போகில(வாய்), ஆய்கதிர் விண் இடைத் தங்கின (போன்றன).*

பொருள்: *நட்சத்திரங்களெல்லாம், அனுமான் மீது (வானவர் மகிழ்ந்து வாழ்த்தி வாரி இறைக்க) விழுந்த மலர் மழை, இராவணனுக்குப் பயந்து மண்ணில் வீழாவாய்த், திரும்பவும் மேல் நோக்கி விண்ணில் போகாவாய், இடையே அந்தரத்திலே தங்கியவற்றைப் போன்றன.*

*எண் - ஆலோசனை; அறிவு; மதிப்பு. இழிந்த - இறங்கிய. மறித்தும் - திரும்பவும். அண்ணல் - பெருமை. ஆய்தல் - ஆராய்தல், நுணுகுதல். கதிர் - சூரியசந்திரர்; கிரணம். ஆய் கதிர் விண் - ஆராய்தற் குரிய சூரிய சந்திரர் (வழங்கும்) வானம்; நுணுகிய கிரணங்கள் (பரத்தலை) உடைய வானம்.*

*'தேவர்களின் சம்பந்தமான அசேதனங்களும் (அறிவில்லாப் பொருள்களும்) இராவணனிடத்து அஞ்சுகின்றன வென, அவனது அதிபயங்கரமான தன்மை இங்கு வெளியாம்.'—வை. மு. கோ.* (கஎ)

நிலா வருணனை

[ *அவ் இரவில் மல்லிகை யரும்புகள் மலர, அவற்றில் வண்டுகள் தேனுண்ண மொய்த்தல், பகைப் பொருள்களாகிய இருளும் நிலவும் பல பல சிறு சிறு பிரிவுகளாய் ஒன்றோடொன்று நெருங்கிச் சண்டையிடுதலை ஒத்திருந்தது.*

*நிலா இலங்கை முழுதும் பரவியது அந் நகருக்கு வெள்ளை வஸ்திரங்கொண்டு உறையிட்டது போன்றது.* ]

**18.** இகழ்வரும் பெருங்குணத் திராம னெய்ததோர்
பகழியின் செலவென வனுமன் பற்றினல்
அகழ்புகுந் தரண்புகுந் திலங்கை யன்னவன்
புகழ்புகுந் துலாயதோர் பொலிவும் போன்றதே

கொண்டுகூட்டு: *இகழ்வு அரும பெருங் குணத்து இராமன புகழ், அனுமன் பற்றினல், அன்னவன் எய்தது ஓர் பகழியின் செலவு என, அகழ் புகுந்து, அரண் புகுந்து, இலங்கை புகுந்து உலாயது ஓர் பொலிவும் போன்றது (அந் நிலா).*

பொருள்: ***இராமனது புகழ், தனக்கு அனுமான் ஆதாரமாக அவ் ஆதாரத்தினல், அவன் அம்பின் (தடையற்ற வேகமான) போக்குப்போல (இலங்கையைச் சூழ்ந்த கடலாகிய) அகழைத் தாண்டி, மதிலேயும் தாண்டி, இலங்கையிற் புகுந்து எங்கும் உலாவிப் பரவியதையும் ஒத்தது அந்த நிலா.***

*இகழ்வு அரும் - இகழ்தல் (செய்தற்குரிய குற்றமொன்றும்) இல்லாத: அருமை இன்மை குறித்தது. பகழி - அம்பு. செலவு - செல்லுதல். பற்று - ஆதாரம் - தாங்கும் இடம். அரண் - மதில். உலாவியது உலாயதென விகாரமாயிற்று. பொலிவு - அழகு; விளக்கம்.* (கஅ)

மதில் வருணனை

[ ***அனுமான் இலங்கை நகரத்துட் செல்லக் கருதித், தான் இருந்த பவளமலேயினின்று புறப்பட்டுக், கடலே அகழியாகப் பெற்று வானத் துச்சிவரை வளர்ந்த மதிற் பக்கத்தில் வந்தான்.*** ]

**19.** கலங்கலில் கடுங்கதிர்கண் மீதுகடி தேகா
அலங்கலயில் வஞ்சகனை யஞ்சியெனி னன்றால்
இலங்கைமதி லிங்கிதனை யேறலரி தென்றே
விலங்கியகல் கின்றன விரைந்தென வியந்தான்

கொண்டுகூட்டு: *'கலங்கல் இல் கடுங்கதிர்கள், அலங்கல் அயில் வஞ்சகனை அஞ்சி இலங்கை மதில்மீது கடிது ஏகா எனின் அன்று; இங்கு இதனை ஏறல் அரிது என்றே விலங்கி விரைந்து அகல்கின்றன' என வியந்தான்.*

பொருள்: 'சந்திர சூரியர்கள் இராவணனுக்குப் பயந்து இலங்கைக்கு மேலே செல்கின்றிலவென்றால், (அவ்வாறு செல்லாமைக்குக் காரணம் பயம்) அன்று; வேறு யாது எனின், இந்த மதிலை ஏறுதல் ஏலாததென்றே (அக் கதிர்கள்) விலகி அப்பாற் செல்கின்றன என்பது' என்று ஆச்சரியப்பட்டான் அனுமான்.

*கலங்கல் இல் - (கலங்கிய நீர் நிறமாறுதல் போல) நிறம் மாறுதல் இல்லாத. கடுமை - விரைவு. அலங்கல் அயில் - (வெற்றி) மாலை (அணிந்த) வேல். அரிது - ஏலாதது.—சு. அ.*

*இதன் முன் இப்படலம் உக-ம் கவியில் 'இம்மதிலொளி கண் கூசுவித்தலால் சூரியன் இலங்கைமேற் செல்லா' னென்ற வருணனையை இக்கவி நினைவுறுத்துகின்றது.* (கக)

அனுமான் மதிலைத் தாண்ட முயலுதல்

[ அனுமான், இராவணன் ஆணையின்றி உட் செல்வார்க்கு இயமன் வாய் போன்ற மதில் வாசலைக் கண்டான். அது, மகா மேரு மலை ஊடறுத்து இடை வெளி செய்யப்பட்டது போன்றதென்றும், கடல் நீர் முழுதும் செல்லுவதற்கு இட்ட மதகையொத்ததென்றும், இராவணனை எதிர்க்க ஈரேழுலகத்தவரும் வந்தால், அவர்கள், சிலர் பின் சிலர் செல்லும் அவசியமின்றி ஒருமிக்கச் செல்லப் போதிய அகலமுடையதென்றும் எண்ணினான். அவன், இத்தனையென்று வரையறை செய்ய இயலாத பெருந்தொகையான வான விளக்குக்கள் இருளை விழுங்கி விளக்கஞ் செய்யப்பெற்று, இயமனும் அஞ்சும்படியிருந்த அந்த வாயிலிலே, செம்பட்ட மயிரும், சினத்தீச் சுவாலிக்கும் செங்கண்களும், கோரப் பற்களும், கரி நிறமும் உடையராய்க், கொடிய பல ஆயுதங்கள் பூண்டவராய், எண்ணிலடங்காதவரா யுள்ள இராக்கத வீரர் காவல் செய்துகொண்டிருத்தலைக் கண்டான். கண்டு, 'எத்தேவர், எவ் அசுரர், வேறெவர்தாம் இக் காவலைக் கடக்கவல்லார் உளர்? ஒருவரும் இல்லை; யான் கருங்கடல் கடந்தது கடினமன்று; இந்தக் காவற் பெருங்கடலைக் கடப்பதுதான் கடினம்: இக் காவலாளருடன் போர் தொடங்கினால், அது முடிய நாள் பல கழியும்; சீதாதேவியைத் தேடிக் காணுதற்கு இடையூறும்; இவ் வாயில்வழி உட்புகுதல் எளியதன்று; அன்றியும், " இவ் வழியே

இந் நகருட் பிரவேசிக்க" எனப் பகைவன் நியமித்திருக்கிற வழியே புகுதல் பலசாலிகளுக்குத் தகுதியன்று; ஆதலால், சூரியனும் தாண்டாத மதிலை வான் வழியாகக் கடந்து இந்நகரின் உள்ளே புகுவேனாக' வென்று, அவ்வாயிலை விட்டு அம் மதிலின் வேறொரு பக்கம் சென்றான். ]

### இலங்கைமாதேவி அனுமானை வழிமறித்தல்

[ அங்கே இலங்கைக்கு அதிதேவதையாய் அதனைக் காக்கும் இலங்கைமாதேவி, வான் வழிச் செல்லும் சூரியனைப் பற்ற வரும் இராகு கேது வென்னும் பாம்புபோல, வான் வழிச் செல்லும் சோதிமானான அனுமானைப் பற்றுதற்கு வழி மறித்து நின்றாள். அவள், கூற்றுவனும் அஞ்சும் கோபமுடையாள். சந்திரனை இரண்டாகப் பிளந்து வைத்தாற் போன்ற வீரப் பற்களை யுடையாள். ]

### இலங்கைமாதேவி வருணனை

**20.** அஞ்சு வணத்தி னுடை யுடுத்தா ளரவெல்லாம்
அஞ்சு வணத்தின் வேக மிகுத்தா ளருளில்லாள்
அஞ்சு வணத்தி னுத்தரி யத்தா ளலையாரும்
அஞ்சு வணத்தின் முத்தொளி ராரத் தணிகொண்டாள்

கொண்டுகூட்டு: *அஞ்சு வண்ணத்தின் ஆடை உடுத்தாள்; அரவு எல்லாம் அஞ்சு உவணத்தின் வேகம் மிகுத்தாள்; அருள் இல்லாள்; அம் சுவணத்தின் உத்தரியத்தாள்; அலை ஆரும் அம் சு வள் நத்தின் முத்து ஒளிர் ஆரத்து அணி கொண்டாள்.*

பொருள்: *(இலங்கைமாதேவி) பஞ்சவருணச் சேலை கட்டியவள்; பாம்புகளெல்லாம் பயப்படும் கருடன்போல வேகம் மிகுந்தவள்; இரக்கம் இல்லாதவள்; அழகிய பொன்னின் (இழைகளாலான) மேலாடை (-தாவணி) உடையவள்; கடலில் தங்கிய நீரில் உள்ள அழகிய நல்ல பெரிய சங்கின் முத்து ஒளிசெய்கின்ற மாலையாகிய ஆபரணத்தை அணிந்துகொண்டவள்.*

*இப் பாட்டின் நான்கு அடிகளிலும் வரும் 'அஞ்சு வணத்தின்' என்பது கீழே குறித்திருக்கிறபடி முறையே பிரித்துப் பொருள்கொள்ளப்பட்டிருக்கிறது:*

அஞ்சு வ(ண்)ணத்தின் - பஞ்சவருணத்தின் - ஐந்துவிதமான நிறங்களை யுடைய. அஞ்சு உவணத்தின் - (பாம்புகளெல்லாம்) பயப்படுகின்ற கருடன் போல. அம் சுவணத்தின் - அழகிய பொன்னின். அம் சு வள் நத்தின் - அழகிய நல்ல பெரிய சங்கின்.

இப் பாட்டு, ஓர் அடியின் முதலில் வந்த சொற்களே மற்ற அடிகளின் முதலிலும் வரப்பெற்ற 'யமகம்' என்னும் சொல்லணி நிகழப்பெற்றது. இது பெரும்பான்மையான யமகச் செய்யுட்கள் போலாது, சிறிதும் கருகுதலின்றிச், சொல்லும் பொருளும் ஒன்றும் ஒருங்கே இனியனவாய் அமைந் திருத்தல் பாராட்டற்பாலது. (௨௦)

## அனுமான் அவளை அடித்து வீழ்த்தல்

[ அவள், கண்ணை இமை காத்தல்போல, இலங்கையைக் காப் பவள். அனுமானை 'நில் நில்' என்று அதட்டிக்கொண்டு எதிர் வந்தாள். இவ்வாறு எதிர்பாராவண்ணம் திடீரென எதிர்ந்தவளை அவன் சிறிதும் திகைப்பேனும் அச்சமேனுங் கொள்ளாமல் அமைதியாக 'வருக' என்றான். 'அஞ்சாமல் அசட்டுத் துணிவுடன் ஆகாத காரியம் செய்யப் புகுந்தாய்! அறிவில்லாய்! போய்விடு!' என்றாள். 'இவ்வூர் காணும் ஆசையால் உள்ளே போகின்றேன். இந்த ஏழை போவதனால் உனக்கு யாது நட்டம்?' என்றான். 'திரிபுரம் எரித்த சிவன்போன்ற தீரரும் செல்லுதற்கு அஞ்சும் இவ் ஊர்க்குள்ளே செல்லத்தக்கவன் நீயேயோ! சீ! சீ! போ!' என்று இகழ்ந்து சிரித்தாள். சிரித்தவளை மாறி இகழ்ந்து சிரித் தான். 'நகைக்கின்ற நீ ஆர்? உன்னைக் கொன்றுவிடுவேன்: உயிரை இழந்து நீ அடையும் பயன் யாது? ஓடிப்போகாமல் நிற்கின்றாயே!' என்றாள். அவன் 'இவ் ஊருட் புகுந்து பார்த்து விட்டுத் தான் போவேன்' என்றான்.

'இவன் வஞ்சகன், வானரமல்லன், இயமனும் அஞ்சும் என் னைப் பரிகசிக்கிறான்! இவனைக் கொல்லாதுவிட்டால் இவ் வூருக்குத் தீங்கு விளையும்' என்று எண்ணிச் சூலாயுதத்தை யெறிந்தாள். அவன், பாம்பைக் கடித்துத் துண்டுபடுத்தும் கருடன் போல அதைக் கடித்து ஒடித்து, அவளுடைய மற்ற ஆயுதங்களையும் பறித்து எறிந்தான். எறியவே, கையாலடிக்க முயன்றாள். அவள் கைகளை ஒரு கையாற் பற்றிக்கொண்டு, பெண் கொலை பிழை

யென்று, அவள் வலியை ஒடுக்க மற்றொரு கையால் ஓர் அறை அறைந்தான். கீழே விழுந்தாள். பின்பு எழுந்து கூறுவாளானாள்:]

### அவள் தன் வரலாறு கூறி அகலல்

[ 'என் பேர் இலங்கா தேவி. யான் பிரமன் கட்டளைப்படி இவ்வூர் காப்பவள். அவனை நான் எவ்வளவு காலம் இவ்வூரைக் காவல் செய்யவேண்டு மென்று கேட்டபோது, "ஒரு குரங்கு உன்னைக் கையால் தாக்கியபோது என்பால் மீண்டு வருவாயாக" என்றான். அவ்வாறே முடிந்தது. அறம் வெல்லும்; பாவம் தோற்கும்; உன் விருப்பம் அனைத்தும் நிறைவேறும். நகர்க்குள் ஏகுவாயாக!' என்று வணங்கிச் சென்றாள். ]

### இலங்கையுள் புகுந்த அனுமான் அதன் ஒளி மிகுதி கண்டு வியத்தல்

[ சிற்றுருக் கொண்டிருந்த அனுமான், மதிலைத் தாவிப் பெரிய பாற்கடலில் சிறிய மோர்த்துளி சிந்தினது போல்*, இலங்கைமா நகருட் குதித்தான். அங்கே இரத்தினங்கள் இழைத்த பொன் மாளிகைகள் அளவிறந்த ஒளி சிறந்த விளக்குக்களோடு எங்கும் பகல் (போல ஒளி) செய்ய, அவன், தான் இரவிலே ஒருவரு மறி யாமல் சீதையைத் தேடிக் கண்டுபிடிக்க எண்ணியிருந்த எண் ணத்துக்கு எதிராகச் சூரியோதயமாய்விட்டதே யென்று திடுக் கிட்டான். பின்பு தெளிந்து, 'இந்நகர் இரவில் இவ்வளவு ஒளி யுடையதா யிருத்தலினன்றே, இங்கு வாழும் இராக்கதர் நிசிசரர் (- இரவிற் சஞ்சரிப்பவர்) ஆயினா'ரென் றெண்ணினான். ]

### அங்கே பல இடங்களிலும் அனுமான் சீதையைத் தேடிச் செல்லல்

[ அவன், 'நாம் தெரு நடுவே சென்றால், பிறர் கண்டு பிடித்தற் கேதுவாய் நாம் கருதியுள்ள காரியத்துக்கு இடையூறும்'

---

* பால் எத்தனை பேரளவினதாயிருந்தாலும் அதிற் றெறித்த ஒரு சிறு மோர்த் திவலை அப் பால் முழுவதினும் பரவி அதன் இனிமையை மாற்றிப் புளிப் பாகச் செய்துவிடல்போலப், பெரிய இலங்கை நகரிற் சேர்ந்த சிற்றுருக்கொண்ட அனுமான் அப் பெருநகர் முழுதும் படர்ந்து (- பரந்து சென்று) சுட்டு அதன் அலங்காரத்தைக் கெடுத்து அலங்கோலப் படுத்தப்போவதை முன்னதாகக் குறிப் பிப்பாராய்க் கம்பர், 'சீரிய பாலின் வேலை சிறுபிரை தெறித்ததன்னான்' என்ற கவித்திறம் கண்டு களிக்கத்தக்கது.

[என்று எண்ணி, முன்னமே சுருங்கியிருந்த உடலை இன்னமும் சிறிதாகச் சுருக்கிக்கொண்டு, வீடுகளின் நிழல் சாய்ந்த பக்கத்து ஓரமாகச் செல்வானாய், எந்தப் பூவிலே தேன் உள்ள தென்று தேடித்திரியும் வண்டுபோல, எங்கே சீதை உள்ளாளென்று நாடி, அரக்கர் மாளிகைகள், ஆனைக்கூடங்கள், குதிரைப் பந்திகள், தேர் நிலயங்கள், வணிகர் கடைகள் முதலிய இடங்க ளெல்லாவற்றி லும் தேடிப் பார்த்துக்கொண்டு சென்றான். ]

பேரியநா ளோளிகோ ளுறு விதமணிப் பித்திப் பத்தி
சோரியுமா நிழல்க ளாங்குச் சுற்றலாற் காலின் றோன்றல்
கரியனாய் வெளிய னாகிச் செய்யனாய்க் காட்டுங் காண்டற்
கரியனா யெளிய னாய்த்தன் னகத்துறை யழக னேபோல்

கொண்டுகூட்டு: நாள் ஒளி கொள் நானா வித(மான) பெரிய மணிப் பித்திப் பத்தி சொரியும் மா நிழல்கள் ஆங்குச் சுற்றலால், காலின் தோன்றல், காண்டற்கு அரியனாய் எளியனாய்த், தன் அகத்து உறை அழகனே போல், கரியனாய், வெளியன் ஆகிச், செய்யனாய்க் காட்டும்.

பொருள்: (பல வருண) நட்சத்திரங்களின் ஒளிகள் படைத்த பலவகையான பருமையான இரத்தினங்களால் அமைக்கப்பெற்ற சுவர் வரிசைகள் சொரியும் ஒளிகள் சூழ்தலினால், வாயுகுமாரனான அநுமான், — (அன்பரல்லார்) காணுதற் கரியவனாய் (அன்பர் காண) எளியவனாய்த் தனது மனத்தின்கண் வாழும் சுந்தர மூர்த்தி(யாகிய சுவாமி பலவாறு தோன்றுதல் போல, — ஓரிடத் தில்) கறுத்தவனாகியும், (மற்றோரிடத்தில்) வெளுத்தவனாகியும், (வேறோரிடத்தில்) சிவந்தவனாகியும் தோன்றுவானானான்.

நாள் - நட்சத்திரம். பித்தி - சுவர். பத்தி - வரிசை. நிழல் - ஒளி. கால் - வாயு. தோன்றல் - மகன். காட்டும் - தோன்றுவான். ‘பெரிய மணிப் பித்தி’ யெனக் கூட்டுக. (உக)

## அமர மாதர் அரக்க மாதரை நீராட்டல்

[ அநுமான் அவ்வாறு செல்லும்போது குல முதலியவற்றிற் சிறந்த தேவ மாதர், சேடியராய், நீர்க்குடங்களை வருந்திச் சுமந்து கொண்டுவந்து நீராட்ட, அரக்க மாதர் சுகமாக நீராடுதலைக் கண்டான். ]

**22.** ஈட்டுவார் தவம லான்மற் றீட்டினு லியைவ தின்மை
காட்டினார் விதியா ரஃது காண்கிற்பார் காண்மி னம்மா
பூட்டுவார் முலேபொ ருத பொய்யிடை நையப் பூநீர்
ஆட்டுவா ரமரர் மாத ராடுவா ரரக்கர் மாதர்

கொண்டுகூட்டு: 'ஈட்டுவார் தவம் அலால் மற்று ஈட்டினுல் இயை வது இன்மை விதியார் காட்டினார். அஃது காண்கிற்பார் காண்மின், அம்மா! வார் பூட்டும் முலே பொருத பொய் இடை நைய அமரர் மாதர் பூநீர் ஆட்டுவார்; அரக்கர் மாதர் ஆடுவார்.'

பொருள்: (அக்காட்சியைக் கண்டபோது, அனுமான் தன் மனத்துள்ளே கூறியதாவது:) 'சம்பாதிப்போர் தவத்தை யன்றி வேறெதனேயும் சம்பாதித்தால், அதனுல் அடைவது (ஆகிய நன்மை ஒன்றும்) இல்லாமையை விதியார் காட்டியுள்ளார். அக் காட்சி ஆச்சரியமானது. அதனேக் காண விரும்புவோர்கள் இங்கே வாருங்கள்; இதோ பாருங்கள்! (தவத்தைச் சம்பாதியாத) தேவர்களுடைய பெண்கள் தனபாரம் தாங்கமாட்டாத சிற்றிடை (பெரிய நீர்க் குடத்தையும் சுமந்து) வருந்த நீராட்டுகிருர்கள்; (தவத்தைச் சம்பாதித்த) அரக்கருடைய பெண்கள் (சுகமாக) நீராடுகிருர்கள்.'

ஈட்டுதல் - சம்பாதித்தல். இயைதல் - பொருந்தல். விதி - பிரமன். விதியார் என்பதில் ஆர் உயர்வுப் பன்மை விகுதி. அஃது - காட்டினதைக் குறித்தது. 'வார் (-கச்சு) பூட்டும் முலே' யெனக் கூட்டுக. பொய்இடை - இல்லே யென்று சொல்லும்படி சிறுத்த இடை. பூ - அழகு; பொலிவு.

'பலவகை மகளிரைக் கூறத் தொடங்கி[த் தெய்வ நீராற்றிற் றெண் ணீர் (கொண்டு) வானவர் மகளிராட்ட] அரக்க மாதர் மஞ்சன மாடுவாரைக் கூறியவிடத்து அங்ஙன மாடுதற்குக் காரணங் காட்டுவாராய்த் தவப் பெரு மையைப் பாராட்டுகின்ற இச் செய்யுள் இடைப் பிறவரலாக நின்றதென்க. இங்ஙனம் கதை நிகழ்ச்சியைக் கூறுமிடத்து, அதனுற் போந்த பயனே ஆங் காங்கு உலகத்தாரை நோக்கிச் சொல்லிப்போதல் ஒருவகைக் கவி சமயம்.' *

'திருவள்ளுவர் அறன்வலியுறுத்தலில்

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானே டூர்ந்தா னிடை

என்று அறத்தின் சிறப்பை எடுத்துக் காட்டினுற் போல, இங்கு(க் கம்பர்) இங்ஙனம் தவத்தின் சிறப்பை எடுத்துக்காட்டினர்.' * (உஉ)

* வை. மு. கோ.

அரக்க மாதர் மதுவுண்டு மயங்கல்

[ வேண்டியதைக் கேட்டாற் கொடுக்கும் சிந்தாமணி வேண்டாமலே விளக்கொளியை வெப்பந் தவிர்த்துக் கொடாநிற்ப, அவ்வொளியில் கந்தருவ மகளிர் கடைமாடிவதைத் தாம் பஞ்சணையிலே சாய்ந்தபடியே யிருந்துகொண்டு காண்பவரையும்,—தம் கணவர் தம் மனப் புலத்து விளைத்த காமப் பயிர் தழைத்து வளர்தற்கு வார்க்கும் நீர் போல,—உள்ளக் கருத்தைத் தெள்ள உரைக்கும் கண்ணைச் சிவப்பிக்கும் கள்ளைக் குடிப்பவரையும் அனுமான் கண்டான். ]

உள்ளுடை மயக்கா லுண்கண் சிவந்துவாய் வெண்மை யூறித்
துள்ளிடைப் புருவங் கோட்டித் துடிப்பவேர் பொடிப்பந் தூய
வெள்ளிடை மருங்கு லார்தம் மதிமுகம் வேறொன் றாகிக்
கள்ளிடைத் தோன்ற நோக்கிக் கணவரைக் கவல்கின் றாரை

கொண்டுகூட்டு: தூய வெள் இடை மருங்குலார், உள் உடை மயக்கால் உண்கண் சிவந்து, வாய் வெண்மை ஊறித் துள் இடைப், புருவம் கோட்டித் துடிப்ப, வேர் பொடிப்பத், தம் மதிமுகம் வேறு ஒன்று ஆகிக் கள் இடைத்தோன்ற நோக்கிக், கணவரைக் கவல்கின்றாரை (அனுமான் கண்டான்).

பொருள்: (மேற்கூறியவாறு கள்ளுக் குடிப்பவருள்ளே, ஒருமுறை குடித்த கள்ளால் உண்டாகிய) மயக்கத்தினால் (கருங்) கண்கள் சிவப்பேறி, (செவ்) வாய் வெளுப்பூறி, (இரண்டுந்) துடிக்கும் சமயத்தில், புருவமும் துடிக்க, வியர்வை பொடிக்க, முகம் வேற்று முகமாகி, (மறுமுறை குடிக்கத் தொடங்கிய) கள்ளிலே (தாம் பிறர் போலத் தோன்ற)

I. நோக்கி, ('ஐயையோ! நம்மைக் காணோமே! பிறரையன்றோ காண்கிறோம்! நம் கணவர் நம்மைத் தேடிக் காணாது திண்டாடுவாரே! யாது செய்வோம்!' என்று)

அல்லது-II. (தாமறியாது தம் பின் நின்ற தம்) கணவரை (வேற்றுருவடைந்திருக்கிற தம்மோடு) கண்டு ('நம் கணவர் பிற மாதரோடு சேர்ந்தாரே!' யென்று) தம் கணவரைக் குறித்துக் கவலைப்படுகின்றவர்களை (அனுமான் கண்டான்).

உள் உடை மயக்கு - மனத்தைச் சிதறச் செய்த (கள் உண்ட) மயக்கம். உண் கண் சிவந்து வாய் வெண்மை ஊறி - மையுண்ட கண் சிவந்து வாய் வெளுத்து. துள்இடை - ( கண் வாய் இரண்டும் ) துடிக்கும் சமயத்தில். * புருவம் கோட்டித் துடிப்ப - புருவம் வளைக்கப்பட்டுத் துடிக்க. எழுதப் பட்ட ஓலையை எழுதிய ஓலை யென்றாற்போலப் புருவங் கோட்டப்பட்டு என்பது 'புருவங் கோட்டி' எனப்பட்டது. கள்ளுண்ட மயக்கத்தால் உண்டாகிய முகச்சேட்டையால் இயல்பாக வளைந்த புருவம் அதிகமாக வளைக்கப்பட்டது என்பது குறிப்பு. 'பெயர்' 'பேர்' என ஆகுதல்போல 'வியர்வை' 'வேர்வை' யென்றாகி ஈறுதொக்கு 'வேர்' எனச் செய்யுளில் வரும். பொடித்தல் - தோன்றுதல்: [' கூழை (- கூந்தல்) முடியா முலை பொடியா (- முளையாத - தோன்றாத ) ஒரு குதலைச் சின் மழலைக்கு ' திருக்கோ.—கoச. —ச. அ.] தூய - சுத்தமான. வெள்ளிடை: (வெளி - ஆகாயம்) : 'பொய் யிடை' போல, 'வெள்ளிடை மருங்குல்' 'மிகச் சிறுத்த இடை' என்ற பொருள் குறித்தது. ஆகாயம் இடைக்கு உவமான மென் பதை 'முலையும் மந்தரம் இடையும் அந்தரம்' என்பதிற் காண்க.

II அடையாளமிட்ட உரைப்பகுதியில் 'கணவரை நோக்கிக் கவல் கின்றாரை' என மாற்றிக்கொண்டு பொருள் கூறப்பட்டது.

கண் சிவத்தல், வாய் வெளுத்தல், கண்ணும் வாயும் புருவமும் துடித் தல், வியர்வை பொடித்தல், கவல்கின்றமை ஆகிய இவைகட்கெல்லாம் ஒரு காரணம் கள் மயக்க மென்பதை 'மயக்கால்' என்பதனால் குறிப்பித்தார். இப் பாட்டும் இதனோடு குளகமாக முன் பின் வரும் பாட்டுக்களும் இப்படலத் தில் 'இயக்கியர்' என்ற கஉக-ம் பாட்டில் வினை முடிவு பெறுகின்றன.

இப்பாட்டில் குறிப்பாகவும் சுருக்கமாகவும் கூறப்பட்டுள்ள மிக விநோதமான கருத்துக்கள், திருவிளையாடற் புராணச் செய்யுள்களில் வெளிப்படையாகவும் விரிவாகவும் கூறப்பட்டிருக்கின்றன. அச் செய் யுள்கள் வருமாறு:

> சாடியுள் நறவம் உண்டாள், தன் உரு வேறுபாட்டை
> ஆடியுள் நோக்கி, 'நானோ அல்லனோ? எனைத்தான் கைக்கொண்
> டோடினர் பிறரும் உண்டோ? உயிரனான் வந்திங் கென்னைத்
> தேடின், என் செய்கேன்! என்னைத் தேடித்தா சேடி' என்றாள்.
>
> (நறவம் - கள். ஆடி - கண்ணாடி. செய்கேன் - செய்வேன்.)

---

* 'துள் இடை புருவம் கோட்டி - துடிக்கின்ற நடுவிடத்தையுடையனவாகப் புருவங்களை வளைத்து' என்பது முந்திய உரை.

*களித்தவள் ஒருத்தி, நின்ற ஆடியுள் கணவன் தன்பின்*
*ஒளித்தவன் உருவும் தானும் நேர்பட உருத்து நோக்கித்,*
*துளித்த கண்ணீரளாகி 'ஏதிலாள் தோள் தோய்ந் தின்பம்*
*குளித்தனை இருத்தியோ!' என்றுரைத்தனள் கோபம் மூண்டாள்.*

*(களித்தல் - கள்ளுண்ணல். நின்ற ஆடி - நிலைக்கண்ணாடி. உருத்தல் - கோபித்தல். ஏதிலாள் - அந்நிய மாது.)* (உரு)

அவர்கள் காதல்கொண்டு கலங்கல்

[ *கரும்பாலையிற் கிடையாத கருப்பஞ்சாறும், தேன் கூட்டிலும் மலரிலும் இல்லாத தேனும், கள்விற்பார் மனையில் வாங்கலாகாத கள்ளும், கடலிற் கடைந்தெடுக்க முடியாத அமிழ்தமும் ஆன இனிமை மிகுந்த மாதர் வாயூறலை மாந்தி மயங்கியிருக்கும் அரக்கரையும், ஒரு தாமரை மலர்மீது மற்றொரு தாமரை மலரை வைத்தாற்போலக், கணவரைப் பிரிந்த சோகத்தாற் சோர்ந்து சாயும் முகத்தைத் தாங்கிய கையராகிய இராக்கதத் தையலாரையும், பிரிவாற்றாமையால் சோகித்து, உடல் தானே சாய்ந்தாற்போலப், படுக்கையிற் சாய்ந்தவராய்த் தம் கணவர்பாற் சென்ற தூதியர் வரும் வழிமேல் விழி வைத்துப், பிராணன் போனதோ வென அடங்கிக் கிடப்பார், அத் தூதியர் புன்முறுவலோடு வரக் கண்டு, இனிக் கணவர் வந்துவிடுவா ரென்ற களிப்பினால், அடங்கிய உயிர் திரும்புதற்குத் துடிக்கின்ற அரக்கியரையும் அனுமான் கண்டு சென்றான்.* ]

**24.** பள்ளியின் மைந்த ரோடு மூடிய பண்பு நீங்கி
ஒள்ளிய கலவிப் பூச லுடற்றுதற் குருத்த நெஞ்சர்
மெள்ளவே யிமையை நீக்கி யஞ்சன விழுது வேய்ந்த
கள்ளவா ணெடுங்க ணென்னும் வாளுறை கழிக்கின்றாரை

**கொண்டுகூட்டு:** *பள்ளியில் மைந்தரோடும் ஊடிய பண்பு நீங்கி, ஒள்ளிய கலவிப் பூசல் உடற்றுதற்கு உருத்த நெஞ்சராகி, மெள்ளவே இமை(யாகிய உறை)யை நீக்கி, அஞ்சனம் (ஆகிய) இழுது வேய்ந்த கள்ளம் (உடைய) வாள்* நெடுங்கண் என்னும் வாளை (அவ்) உறை(யினின்று கழிக்கின்றா(ர் போலக் கண் விழிக்கின்ற அரக்கிய)ரை(க் கண்டான்).*

** வாள் - ஒளி (பொருந்திய).*

பொருள்: ஒரு சயனத்தில் (தம்முடனிருந்த) கணவருடன் ஊடல் (யுத்தஞ் செய்து செயமடைந்து, அவ் யுத்தத்தால் நேர்ந்த சிரமத்தைச் சாந்தி செய்யத் தூங்குவார் போலக் கண் மூடியிருந் தவர்கள், அவ் ஊடற் போர்) செய்த (குரோத) குணம் மாறிக், கூடற் போர் செய்யத் தோன்றிய நினைவினராகி (அப் போர்க்கு ஆயத்தமாகும் அறிகுறியாக) இமை(யாகிய உறை)யை நீக்கி, மையாகிய நெய் பூசிய கண்ணாகிய வாளை அவ் உறையினின்று கழற்றுவா(ர் போல, மூடியிருந்த கண்ணை மெல்லத் திறக்கின்ற அரக்கிமா)ரையும் அனுமான் கண்டு சென்றான்.

பள்ளி - படுக்கை. மைந்தர் - கணவர்.—பரிபா. பண்பு - குணம். ஒள்ளிய - அழகான: (ஒண்மை - அழகு). பூசல் - போர். உடற்றுதல் - உக்கிரமாய் நடத்துதல். — சீ. அ. உருத்தல் - தோன்றுதல்—பதி. ப. நெஞ்சு, நினைவைக் குறித்தது: (சிந்தாமணி 458-ம் பாட்டில் 'நெஞ்சின் ஒத்து' என்பதன் உரையைப் பார்க்க.)

'கொழுநர் அறியாதபடி மெல்லப் பார்த்து அவரியல்பை அறிய முயன்றமைபற்றிக், "கள்ளம்" என்ற அடைமொழி கண்ணுக்குக் கொடுக் கப்பட்டது.' *

பாடபேதம்: உள்ளிய: அஞ்சன மெழுதி. (உச)

[ கணவர் வரவை எதிர்பார்த்து வாசலில் நின்ற தம்பால் அக் கணவர் வந்து நெருங்க, அவரோடு ஊடி, ஊடிய உணர்வும் உள்ள முதலிய அந்தக்கரணங்களும் வீட்டுக்கு வெளியே அக் கணவரோடு தங்கவிட்டு, உயிரைமட்டுங் கொண்டு உள்ளே சென்று, ஒருவாறு கதவை அடைக்க மட்டும் சத்தியுடையராய்த் தாளிடச் சத்தியற்ற அரக்க மாதரையும்,—முரசு முழங்க, முனிவர் மங்கள வாழ்த்து மொழிய, அமரர் ஆசீர்வதிக்கத், தேவர் தேவியரும் முனிவர் மனைவியரும் பல்லாண்டு பாடக் கல்யாணஞ் செய்யும் இராக்கத தம்பதிகளையும்—எங்கெங்கும் இனிதிருக்கும் இராக்கத மகளிரே யல்லாமல் இடையிடையே காணப்படும் இயக்க மாதர், நாக கன்னியர், வித்தியாதர மின்னார் முதலிய பெண்களெல்லாரையும், அவருள் எவளாயினும் சீதையா யிருப் பாளோ வென்று தெரியும் நோக்கத்துடன், நன்றாக நோக்கிக் கொண்டு சென்ற அனுமான் கும்பகருணனைக் கண்டான். ]

* வை மு. கோ.

## அனுமான் கும்பகருணனைப் பார்த்தல்

[ *அப்போது மலைபோலப் பிரமாண்ட காத்திரமுடையனாய், அலை கடலிலே திருமால் பள்ளிகொள்ளும் ஆதிசேடனை போலவும், அந்தக் கடலே போலவும், உலகத் திருளெல்லாம் ஒருங்கே திரண்டு ஓரிடத்தே ஒதுங்கி உற்றாற் போலவும், பாவமே உருவெடுத்தாற் போலவும், தண் கடலிற் றோய்ந்து குளிர்ச்சியும், நறுமலர்ச் சோலையூடு தவழ்ந்து மணமுங்கொண்டு தென்றல் வீசத், தேவ மாதர் கால் பிடிக்க, ஊழிக் காற்றுப்போல மூச்சு இயங்க, நிலாவை இரு கூறுபடுத்தி இரு கடைவாயாலும் உண்ண வைத்த தருணத்தில் விளங்கும் அந் நிலாப் பகுதிகள் போல வக்கிர தந்தங்கள் விளங்க, மந்திரத்தால் தடையுண்டு எவரையும் கொல்லாது தம்பித்திருக்கும் சர்ப்பம் போலவும், எல்லா உலகையும் எளிதே பொங்கி அழிக்கக்கூடிய கடல் கடவுள் ஆணைக்குக் கட்டுப்பட்டு நிலை கடவாது நிற்றல் போலவும், சர்வ லோகத்தாரையும் இலகுவாகக் கொல்லவல்ல கும்பகருணன் அசையாது நெடிய பெரிய தூக்கந் தூங்கிக்கொண்டிருந்தான்.*

*அனுமான் அவனை இராவணனோ வென்று ஐயுற்றுப் பொங்கியெழுந்த கோப வடவாமுகாக்கினியைப், பத்துத் தலை யிருபது கை யில்லாமை கண்டு, இராவணன் அல்லனென்று தெளிந்த அறிவுக் கடல் நீரால் அவித்தான்.*

*அவன் அப்பாற் செல்வானாகி எல்லா மாளிகைகளையும், ஆடற் சாலைகளையும், பாடல் மேடைகளையும், பள்ளிக்கூடங்களையும் முதலாக உடைய எல்லா இடங்களையும் பார்த்துச் சென்றான்.* ]

## அவன், விபீஷணனையும் இந்திரசித்தையும் பார்த்தல்

[ *அவ்வாறு செல்லும்போது, கற்பகச் சோலை மத்தியில் விளங்கிய ஒரு பவள மாளிகையை அடைந்தான். அங்கே, இயல்பாக வெண்ணிறம் படைத்த தரும தேவதை, தன் சுபாவ வருணத்தோடு இராக்கதர் மத்தியில் வெளிப்படையாகத் தங்குதல் சாத்திய மன்றென்று, அவரை வஞ்சித்துக் கரிய அரக்கனாகி வாழ்கின்றதை ஒத்த விபீடணனைக் கண்டான்.*

அப்பால் மற்றொரு மாளிகையுள் பிரவேசித்தான். அங்கே பன்னிரண்டு கைகளும் ஆறு முகங்களும் உள்ள குமாரக் கடவுள் ஐந்து முகங்களையும் பத்துக் கைகளையும் மறைத்து வந்தானோ வென்றெண்ணும்படி அழகும் வீரமும் அமைந்த இந்திரசித்தைக் கண்டான். கண்டவன், 'இவனை வெல்ல இலக்குமணனும் இராமனும் நெடுநாள் அமர் செய்ய நேரும்; இவனைப் போர்த் துணையாகப் பெற்ற இராவணன் மூன்றுலகங்களையும் வென்றது அரிய செயலன்று' என்று கருதி, அவனைவிட்டு நீங்கி, ஏனைய இராவண குமாரர், இராக்கத சேனைவீரர், மந்திரிமார் முதலியோர் மாளிகைகளை யெல்லாம் பார்த்துச் சீதையைத் தேடிச் சென்றான்.]

## நடுராத்திரி வருணனை

[ அப்போது, அர்த்தராத்திரியாகக், குடியர் கள்ளுண்ணு தோய்ந்தனர்; கம்மாளர் முதலியோர் தத்தம் கைத் தொழில் விட்டொழிந்தனர்; ஆடல் பாடல்கள் அடங்கின; விட்ட நெய் வற்றி விளக்குகள் அவிந்தன; தூங்காத யோகியரும் பித்தரும் தூங்கினர்; என்றால், ஏனையோ ரெல்லோரும் உறங்கின ரென்று கூறுவானேன்? ]

## இராவணன் பிரிவால் வருந்தும் பல சாதி மனைவியர்களை அநுமான் பார்த்தல்

[ இராவணன் மாளிகை சந்திரனாக, அச் சந்திரனைச் சூழ்ந்த தாரகைகள் போல விளங்கிய அவனுடைய மனைவிமார் மாளிகைகளை அநுமான் அணுகினான். அவர் பல சாதி மாதரினின்றும் தெரிந்தெடுத்து மணந்துகொள்ளப் பெற்றவர்.

அவருள்ளே, இயக்க மனைவியர் சிலர், இராவணன் மீது பதித்த மனத்தினராய்க், காதல் மீதூர மூச்சடங்கி, இமைப் பொழிந்து, அசைவின்றிச் சித்திரங்களை ஒத்திருந்தனர்.

வேறு சிலர், மன்மதன் எதிர்த்து வருவானென்று அவனைக் காண அஞ்சியோ, தூங்கினால் கனவில் இராவணனைத் தழுவலா மென்று கருதியோ, கண் மூடி உண்மையில் தூங்காமல் தோற்றத்தில் தூங்குகின்றார்கள்.

மற்றும் சிலர், இராவணனைச் சித்திரத்திலாயினும் காணக் கருதி அவன் வடிவைச் சித்திரிக்க முயன்று, அவன் அழகு சித்திரத்தில் அமையாதென்று தியங்குகின்றார்கள்.

இன்னுஞ் சிலர், தாம் தாம் வளர்க்கும் கிளியை நோக்கி, 'என்னுயிரை (இராவணனை) அழைத்து வருகின்றா யில்லை; யான் படுந் துன்பத்தைப் போய்ச் சொல்லுகின்றா யில்லை; எனக் கான தொன்றும் செய்வா யல்லை!' என்று குறை கூறுகின்றார்கள்.

பின்னும் சிலர், மேரு மலையை வில்லாக வளைத்த மகாதேவ னோடு அவனிருந்த கயிலாய மலையைத் தூக்கி யெடுத்த தோள் களிற் பூசிய சந்தனம் அவனைக் கூடியிருந்தபோது தம் தனங் களில் தோயப்பெற்று, அவன் பிரிந்த நாள் முதல் குளியாமையால் அழியாமல் விளங்குதலை நோக்கிப் பிரிவாற்றாமைத் துன்பத்தை ஒருவாற்றால் மறந்து குதுகலிக்கின்றார்கள்.

இவ்வாறாகவுள்ள, இராவணனது இயக்க மனைவியர் மாளிகை களைக் கடந்து அவனது குல மனைவியராகிய இராக்கத மாதர் வாழும் மாளிகைகளை அனுமான் அடைந்தான். ]

25. எரிசுடர் மணியின் செங்கே ழிளவெயி லிடைவி டாது
விரியிருள் பருகி நாளும் விளக்கின்றி விளங்கு மாடத்
தரிவையர் குழுவு நீங்க வாசையுந் தாமு மேயாய்
ஒருசிறை யிருந்து போன வுள்ளத்தோ டூடு வாரும்

கொண்டுகூட்டு: எரி சுடர் மணியின் செங்கேழ் இள வெயில் இடைவிடாது விரி இருள் பருகி நாளும் விளக்கு இன்றி விளங்கும் மாடத்து, அரிவையர் குழுவும் நீங்க, ஆசையும் தாமுமே ஆய் ஒரு சிறை இருந்து போன உள்ளத்தோடு ஊடுவாரையும் (கண்டான்).

பொருள்: (சுவர்களிற் பதிக்கப்பட்டிருக்கிற) மாணிக்கங் களின் சிவந்த நிறத்தையுடைய இளஞ்சூரிய (ஒளி போன்ற) ஒளி இருளை விழுங்கிப் போக்கிவிடுதலால் எந்நாளும் விளக்கு (வேண் டிய அவசியம்) இல்லாமல் தாமே சுயம்பிரகாசமாய் விளங்கா நின்ற மாளிகைகளிலே, (தோழியர் பணிப் பெண்களாகிய) மகளிர் கூட்டமும் (மற்றவர் கூட்டங்கள் நீங்கியபின் தூங்குதற்கு) நீங்க,

(இராவணன்மேல் வைத்த தணியாத) காதலும் தாழுமே தனி யாகி ஒதுங்கிய ஒரு புறத்தில் தூங்காமல் இருந்து, (அவன் பாற்) போன நெஞ்சோடு ('பரிந்து அவர் நல்கார் என்று ஏங்கிப் பிரிந்தவர்–பின் செல்வாய் பேதை என் நெஞ்சு!' என்றும், 'அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும் எவன் நெஞ்சே!– நீ எமக்கு ஆகாதது?' என்றும்) ஊடுவாரையும் அனுமான் கண்டு சென்

எரிசுடர் - நெருப்பு.—சீ. அ. எரி சுடர் மணி - நெருப்புப் போன்ற (மிக்க சிவப்புடன் மிகு) பிரகாசம் உடைய மாணிக்கம்; சுவாலிக்கின்ற ஒளி யையுடைய மாணிக்கம் எனலுமாம். கேழ் - நிறம். பருகல் - விழுங்குதல் —பத்துப் பா. சிறை - இடம்; பக்கம்.

கல்யாணஞ்செய்யக்கூடாத தவப்பெண்ணென்று தான் கருதி யிருந்த சகுந்தலை, தவக்கோலம் பூண்டிருந்தாலும், அக் கோலம் யாத்திரைக் காவி போலத் தற்காலக் கோலமாய் நிலையானதன் றென்றும், அவள் மணஞ்செய் தற் குரியளென்றும் அவள் காதலன் துஷ்யந்தனுக்குத் தெரியவந்தபோது, அவன் தன் னெஞ்சை நோக்கி, 'நெஞ்சே! நீ தீண்டக்கூடாத தீக்கங்கென்று பயந்தது மகிழ்கூர்ந்து மார்புற அணியும் மாணிக்கமானது' என்று னென்ற கருத்துப்படக் காளிதாசர் கூறியதை, இங்கே கம்பர் மாணிக்கத்தை நெருப் புப்போன்ற தென்றது, நினைவுகூரச் செய்கின்றது.

பாட பேதம்: குழுவை நீக்கி.  (உரு)

[ அவ் அரக்க மனைவியர், கரிய மலைபோலக் கறுத்த பருத்த உடலும், அம் மலைமீது எரியும் தீப்போலச் சிவந்த கூந்தலும், அத் தீமேற் புகைபோல அக் கூந்தல்மேல் அதன் இயற்கை மணத்தை நாடிச் சுழலும் வண்டும் விளங்க வீற்றிருந்தார்கள்.

கரிய வானம் தேகமாகச், செவ்வானம் சிவந்த கூந்தலாகப், பிறைச் சந்திரன் நெற்றியாக, நட்சத்திர சாலம் விரக வெம்மை தணிய அணிந்த முத்துமாலையாகக், கொடி மின்னல் இடையாக அவ் அரக்கியர் அந்திக்காலத்து ஆகாயத்தை ஒத்து விளங்கினார் கள்.

இராவணன் சீதை காதலால் தம்மைப் பிரிந்த விரகவேதனை யால் தூக்கம் வரப்பெறாத அவ் அரக்க மனைவியருள்ளே,—சிலர்,

தம் விரகத்தை மறப்பிக்கும் பொழுதுபோக்காக, அவன் வித்தியாதர வேந்தர் நாகராசர் முதலியோரை வென்று பறித்துத் தமக்குக் கொடுத்திருந்த கிரீடங்கள் முதலிய ஆபரணங்களைப் பந்தயமாக வைத்துச் சூதாடுகின்றார்கள்; வேறு சிலர் சித்த மாதர் பாட, நாக கன்னியர் முழவக் தட்டத், தேவ மாதரை நர்த்தனம் செய்யச் செய்து பார்த்திருக்கின்றார்கள்; பின்னும் சிலர் வீணை இசையும் தம் குரல் ஓசையும் வெவ்வேறு பிரித்தறியாதவாறு, வேற்றுமையின்றி ஒற்றுமையாக, இராவணனது புகழைப் பாடுகின்றார்கள்; இன்னும் சிலர், கள்ளுண்டு துகில் சோர்தல் உணராது, கண்கள் சுழலக், குண்டலங்கள் தாண்டவம் புரியத், தோழியரோடு கைகோத்துக் குரவைக் கூத் தாடுகின்றார்கள்.

இவ்வாறான இராவணன் குல மனைவியர் வீதியைக் கடந்து வித்தியாதர மனைவியர் வீதியை அனுமான் அடைந்தான். ]

இராவணனுடைய வித்தியாதர மனைவியர் நிலை

[ அவ் வித்தியாதர மனைவியருள் சிலர் நடுநிசி வரையும் நித்திரை வராதிருந்தவர்க்கு, நித்திரை வரும்படி பிரதிதினமும் வழக்கமாகப் பாடும் பாடகர் வந்து இனிதாகப் பாட, அவ் இனிய பாடல் அவர் செவியுள்ளே பாம்புபோல நுழைந்து விரக வேதனையை மிகுவிக்க வருந்துகின்றார்கள். வேறு சிலர், 'தேவ கண்டகனை இராவணன் மீது உண்மையான அன்புடையார் இவர்' என்று அத் தேவ ரினத்தைச் சேர்ந்தவனாகிய, இயல்பாகக் குளிர்ச்சியுடைய சந்திரன், கோபத்தீக் கொளுந்திச் சுடுதல்போலச் சந்திர கிரணங்கள் தனங்களில் விழுந்து வெதுப்பத் துடிக்கின்றார்கள். ]

இராவணன் பட்டத்தரசி மண்டோதரியை அனுமான் பார்த்தல்

[ அந்த வித்தியாதர மின்னார் வீதியை விட்டு நீங்கி இராவணன் அரண்மனையைச் சமீபித்த அனுமான் அவன் பட்டமகிஷி மண்டோதரி மாளிகையைக் கண்டான்.

'இந்த மாளிகை இராவணன் மனைவியர் மாளிகைக ளெல்லாவற்றினும் சிறந்திருக்கின்றது; இதிலேதான் அவன் சீதையை வைத்திருக்கின்றானோ?' என்று அனுமான் ஐயுற்றான்.

கரும்பையும் கசப்பிக்கும் கனிமொழியாரான தேவமாதர்கள் கால்வருடியும், சாமரை இரட்டியும், செவிக்கினிமையாக யாழ் வாசித்தும், நாசிக்கு உவப்பாகக் கற்பக மலரை எதிரேந்தியும் பணி விடை செய்யச், சூழ உள்ள இரத்தின தீபங்கள் சோபை குன்றும்படி தன் மேனியொளி சொலிக்கத், தூங்குகின்ற மண்டோதரியை அனுமான் கண்டு, தன் உள்ளத்துள்ளே அவள் சீதையோ வென்று ஐயங்கொண்டு, அதனால் அந்த உள்ளத்தோடு உயிரையும் உயிரோடு உடலையும் சுடும்படியான துன்பமுற்றுக், 'கற்பு நீங்கிய இவள் சீதையாயின், இராமனுக்குச் சீதையைத் தேடிக் கொடுத்தலே பெரும்பயனென்றறிந்த யான் அதனை யிழந்தேனுவேன்; இராமன் புகழும் யானும் இவ் இலங்கையும் எல்லா இராக்கதரும் இன்றே இறந்தொழிவோம்!' என்று கருதினான். பின்பு 'இவளிடத்துச் சீதையின் இலக்கணங்கள் சில காணப்படினும் இவள் அவை முழுதும் உடையாளல்லள். அவள் மானுட வடிவினள். இவள் அதற்கு மாறுபட்ட வடிவினள். இராமனைக் காதலித்த ஏந்திழையாரெவரும் இரதிகேள்வனையும் ஏறிட்டுப் பாரார். சந்தேகித்தது தவறு' என்று எண்ணினான். ]

### இராவணனைப் பார்த்தல்

[ பின்பு மண்டோதரியின் மாளிகையை நீங்கி இராவணன் மாளிகையை அடைந்தான். அப்போது இராவணனுக்குக் கேடு விளைவதற்கு முற்குறிகளாகப் பற்பல உற்பாதங்கள் நிகழ்ந்தன. அனுமான் அவைகளைக் கண்டு, 'அந்தோ! இப்பெரு நகரத்தின் செல்வம் அழியும். எவராயினும், அவர் செய்த பாவ புண்ணிய பலங்களை அநுபவித்தல் திண்ணம். இராவணன் நல்வினைப் பயனாக வாழ்வு வந்தது போலத் தீவினைப் பயனாகக் கேடு நேரும் காலம் கிட்டியது' என்றெண்ணினான்.

மிகவும் விசாலமான வெள்ளிய மெல்லிய மலர்ப்பள்ளியில் இரத்தினாபரணங்கள் விளங்க இராவணன் சயனித்திருத்தல், வெண் பாற்கடல்மேல் இரத்தினங்கள் காணப்படும் கருங்கடல் கிடந்தாற் போன்றிருந்தது.

உதயகிரியிலே பால சூரியன் விளங்குதல் போலப் பத்துத் தலைகளில் ஒவ்வொன்றிலும் இரத்தின கிரீடம் விளங்கினது.

அவ் விளக்கத்தோடு ஏனைய இரத்தினாபரணங்களின் விளக்கமும் சேர்ந்து பெரும் பிரகாசம் செய்தலால் இரவென்னும் பொருள் இறந்தொழிய, நரசிங்கமூர்த்தி பல கைகளும் தலைகளும் பரப்பி மேருமலையிற் பள்ளிகொண்டிருந்தாற் போலத், தன் சுவர்ண மாளிகையிலே இராவணன் படுத்திருந்தான்.

தேவமாதர் இருபக்கமும் வரிசையாக நின்று சாமரைகள் சுழற்ற உண்டாகிய இளங்காற்று, அவனது பள்ளியறையில் தொங்கும் கற்பக மலர் மாலைகளின் தேன் துளிகளை அவன் மேனி மேற் சிதறி வீசுந்தோறும் சீதையை நினைந்து பெருமூச் செறிந்து உயிர் தேய்ந்துகொண்டிருந்தான்.

அவன் திக்குவிசயம் செய்த காலத்தில் அட்டதிக் கசங்களும் எதிர்த்து மார்பிற் பாய, அவற்றின் கொம்புகள் புகுந்து முறிந்து பதிந்த பழம்புண் வடுக்களினிடையே மன்மத பாணங்கள் பாய்ந்த புதுப்புண்கள் இருந்தன.

விரக வெப்பம் தணியப் பூசிய செஞ்சந்தனத்தில் தென்றல் வீசுதல், சிவந்த உலைத் தீயை எழுப்பும் துருத்திக் காற்றுப் போன்று காமத் தீயைக் கதித்தெழச் செய்ய, மனம் முதலிய அந்தக்கரணங்கள் சீதைபாற் சென்றதனால், அவன் நெஞ்சு பாம்பு நீங்கிய பாழ்ங் குகை போலப் பாழ்பட்டிருந்தது. ]

கொண்டபே ரூக்க மூளத் திசைதோறுங் குறித்து மேனாள்
மண்டிய செருவில் வீரத் தோள்களால் வாரி வாரி
உண்டது தெவிட்டிப் பேழ்வாய்க் கடைகடோ றொழுகிப் பாயும்
அண்டர்தம் புகழிற் றோன்றும் வெள்ளெயிற் றமைதி யானை

கொண்டுகூட்டு: கொண்ட பேர் ஊக்கம் மூள, (அதனால்) மேல்நாள் திசை தொறும் குறித்து மண்டிய செருவில், வீரத் தோள்களால் வாரி வாரி உண்டது தெவிட்டிப் பேழ்வாய்க் கடைகள்தோறும் ஒழுகிப் பாயும் அண்டர் தம் புகழின் தோன்றும் வெள் எயிற்று அமைதியானை(க் கண்டான்).

பொருள்: (இயற்கையாகப் பிறவியில்) கொண்டிருந்த பெருந் தைரியம் (செயற்கையாகத் தவஞ்செய்து பெற்ற வரபலத்தினால்) விருத்தியாக, அதனால் முன் காலத்தில் திசைகள் தோறும் (உள்ள வீரர்களை வெல்லக்) கருதிச் சென்று தாக்கிய

யுத்தங்களில், (இருபது) வீரக் கைகளாலும் அள்ளி யள்ளி(ப் பத்து வாய்களால்) உண்டது (வயிறு நிறைந்து மேலெழுந்து, வாயும்) நிறைந்து, (இருபது) கடைவாய்கள் தோறும் ஒழுகி வழி கின்ற தேவர் புகழ் போலத் தோன்றும் வீரப்பற்கள் அமைந் திருந்தவனை அனுமான் கண்டான்.

மண்டிய - தாக்கிய.—சீ. அ.; அடர்த்துச் செய்த.—புற நா. தாள - கை.—சிந்தா. பேழ் - பெருமை : பேழ் வாய் - பெரிய வாய்.

'கீர்த்தியை வெண்ணிற முடையதென்று கூறும் கவிமரபும், ஒருவனது புகழை மற்றொருவன் வென்றொழித்தனனென்ற பொருளில் அதனை அவன் வாயிற் போட்டுக்கொண்டானென்று கூறும் உலக வழக்கும் இவ் வருணனைக்கு மூலம்' *....தோள் வலியாற் புகழைக் கவர்ந்துகொண்டமை, கைகளால் வாரியுண்டதெனப்பட்டது. (உசு)

[ மனம் சீதையாகிய திருமகள்பாற் செல்லுதலாலும் அந்தச் சீதை காதலால் உறக்கமின்றி அறிதுயிலாகப் பொய்த் தூக்கம் தூங்குதலாலும் திருமாலென்னும்படி இராவணன் பள்ளி கொண் டிருந்தான்.

பரந்த கருங்கடலிலே, உயர்ந்த உதயகிரியிலே பேரொளி யுடன் தோன்றும் சூரியன்போல, அவனுடைய பெரிய கரிய உடலிலே வளர்ந்த மார்பிலே இரத்தின மாலை விளங்கினது. ]

**27.** தோடுழுதண் டார்வண்டுந் திசையானை
மதந்துதைந்த வண்டுஞ் சுற்றி
மாடுழுத நறுங்கலவை வயக்களிற்றின்
சிந்துரத்தை மாறு கொள்ளக்
கோடுழுத மார்பானைக் கோலையுழுத
வடிவேலின் கொற்ற மஞ்சித்
தாடொழுத பகைவேந்தர் முடியுழுத
தழும்பிருந்த சரணத் தானை

கொண்டுகூட்டு: (தன் மார்பின்) தண் தார் தோடு உழு வண்டும் திசை யானை மதம் துதைந்த வண்டும் சுற்றி, மாடு உழுத கலவை, வயக் களிற்றின் சிந்துரத்தை மாறு கொள்ள, (அவ் யானையின்) கோடு உழுத

* வை. மு. கோ.

மார்பானைக், கொலை உழுத வடிவேலின் கொற்றத்தை அஞ்சித், தாள் தொழுத பகைவேந்தர் முடி உழுத தழும்பு இருந்த சரணத்தானை(க் கண்டான்).

பொருள்: தான் மார்பில் அணிந்த பூ மாலையின் (மலர்களில் உள்ள தேனை உண்ண அம் மலர்களின்) இதழ்களை உழக்கிய வண்டுகளும் (தன் திக்குவிசயப் போரில் அவ்வத் திக்கில் தன்னை எதிர்த்துத் தாக்கிய) திசை யானைகளின் மத நீரில் மொய்த்த வண்டுகளும் சூழ்ந்து, பக்கங்களில் உழக்கப்பட்ட கலவைச் சந்தனம், அது இருந்த மார்பை யானை நெற்றிச் சிந்தூரத் துக்குக் கொடுத்து, அந்தச் சிந்தூரம் இருந்த இடத்தை அது கொடுத்த மார்பிடத்துக்கு மாறாகக் கொள்ள, அந்த யானைகளின் கொம்புகள் பாய்ந்து உழக்கிய மார்பையுடையானும், (தன்னை யெதிர்த்தா ரெவரையும் தவறாது) கொலை செய்ய அவர்களை உழக்கிய கூர்வேலின் (துணையால் தான் அடைந்துள்ள) செயத்தையும் நினைந்து பயந்து தன்னைத் தொழுத பகை அரசர் கிரீடங்கள் அழுந்தியதனால் உண்டாகிய தழும்புகள் தங்கிய தாள்களையுடையானுமான இராவணனை அனுமான் கண்டான்.

தோடு - பூ இதழ். உழுதல் - உழக்குதல் - கலக்குதல் - நிலை குலையச் செய்தல். தார் - மாலை. துதைதல் - நெருங்குதல் - மொய்த்தல். மாடு - பக்கம். நறுமை - வாசனை. கலவை - கலவைச் சந்தனம். வயம் - வலி. மாறுகொள்ள - மாறாகக்கொள்ள - பரிவருத்தனை பண்ண. கோடு - (யானைக்) கொம்பு: (யானைக் கொம்புகள் உண்மையில் கொம்புகளா யில்லாமல் வளர்ந்த பற்களா யிருப்பதும் அதனால் தந்தமென்று வழங்குவதும் அறியத் தக்கவை.) கொலை உழுத - கொலை (செய்யப் பாய்ந்து) கிளறிய. வடி - கூர்மை. கொற்றம் - வெற்றி. பின்னிரண்டடிகளில் 'உழுத' என்பது 'உழுதலைச் செய்த' என நேரான பொருள் பயவாமல் 'பாய்ந்த' 'அழுந்திய' என்ற தாற்பரியப் பொருள்கள் பயந்து நிற்றல் காண்க. ஒருவகை வனப்புத் தோன்றும்படி இப் பாட்டில் 'உழுத' என்பது பலமுறை பிரயோகிக்கப்பட்டிருத்தலும் காண்க.

திசை யானைகள் இராவணனை எதிர்த்து முட்டியபோது அவன் மார்பின் மாலையில் இருந்த வண்டுகளும் யானைகளின் மத நீரை உண்டு கொண்டிருந்த வண்டுகளும் கலந்தன. கலந்தவை அவன் மார்பில் அணிந்திருந்த வாசக் கலவைச் சந்தனத்தில் மொய்ப்பனவாயின. அப்படி மொய்த்தவை, யானை மத்தகத்தால் தாக்குண்டு மூடப்பட்ட மத்திய பாகத்துச்

*சந்தனத்தை அணுகமாட்டாதனவாய் அதன் சுற்றுப் பக்கங்களில் மொய்த்தமை குறிக்கச் 'சுற்றி மாடு உழுத' என்றார்.* (உஎ)

அனுமான், இராவணனைக் கொல்ல முயன்று பின்வாங்கல்

[ *அனுமான், பத்துத் தலைகளாலும் இருபது கைகளாலும் அவனை இராவணனென்று தெரிந்தான். தெரிந்தவன் மனத்தில் அவனைக் கொல்லும்படி கோபந் தோன்றுமுன், கண்கள் அக்கினி கக்கின, (பெரியோரைக் காண்போர் அவரைத் தொழ வேண்டுமென்ற நினைவு மனத்தில் தோன்றுமுன் கைகள் கும்பிடுதல் போல.)* ]

**28.** தோளாற்ற லென்னுகு மேனிற்குஞ் சொல்லென்னும்
வாளாற்று கண்ணாளை வஞ்சித்தான் மணி முடியென்
தாளாற்ற லாலிடித்துத் தலைபத்துந் தகர்த்தேன்றன்
ஆளாற்றல் காட்டேனே லடியேனாய் முடியேனே

கொண்டுகூட்டு : *'(இவனைக் கொல்லேனேல் என்) தோள் ஆற்றல் என் ஆகும்? மேல் நிற்கும் சொல் என் ஆம்? வாள் ஆற்று கண்ணாளை வஞ்சித்தான் மணிமுடி என் தாள் ஆற்றலால் இடித்துப், பத்துத் தலையும் தகர்த்து, என் ஆள் *ஆற்றல் காட்டேனேல் (இராமனுக்கு) அடியேனாய் முடியேன்.*

பொருள் : *'(இவனைக் கொல்லாது விட்டுச் செல்வேனானால், என்னுடைய) தோள் வலியால் யாது பயனாம்? (என்னைப்பற்றி) இனி நிலை நிற்கும் சொல் எத்தன்மையதாம்? (பழிப்பானதாம்.) (இராமனுக்கு உரிமையான) சீதையை (அவனை எதிர்த்து வென்று கைப்பற்றாமல்) வஞ்சனையால் கவர்தல் செய்த இவனுடைய இரத்தின கிரீடங்களை என் காலால் உதைத்துப் பொடிபடச் செய்து பத்துத் தலைகளையும் உடைத்து யான் இராமனுக்கு அடிமைத் தொழில் செய்தலைக் காட்டேனானால் அவனுக்கு அடியேனாகேன்.*

*தோள் ஆற்றல் - தோட் பலம். வாள் ஆற்று - வாளை ஒத்திருக்கின்ற; ஆற்றல் - ஒத்திருத்தல். "செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றல் அரிது."' ஆள் - அடிமை. ஆற்றல் - செய்தல். ஆள் ஆற்றல் - அடிமை(த் தொழில்) செய்தல்; ஆண் (ஆண் மகன்) ஆற்றலாகிய*

ஆண்மையுமாம். 'முடிதல் - கருதிய பொருள் தரல். உ-ம். "அவை தாம் முடிந்தாலும் பீழை தரும்"'.—குறள்—கூ௫அ.

'(இவனது) புயங்களின் வலிமை யாது பயன்படும்! நெடுங்காலம் அழி வின்றி நிற்பதான இவனது புகழ்தான் யாது பயன்படும்!' என்பது முந்திய உரை.

பாட பேதம்: காட்டேனல். (உஅ)

[ 'என் எசமானனுக்குத் துரோகம் செய்தவன் என் கண் ணெதிர்ப்பட்ட பின்பும் பிழைத்திருக்கவிட்டால், என் அடிமை உண்மையானதாகாது. இவனை ஒழித்து இவ் வூரையும் தொலைப் பேன். பின்பு எனக்கு எத் தீங்கு நேரினும் நேருக' என்று அனு மான் நினைத்தான். ]

என்றூக்கி யெயிறுகடித் திருகரனும் பிசைந்தெழுந்து
நின்றூக்கி யுணர்ந்துரைப்பா னேமியோன் பணியன்றால்
ஒன்றூக்கி யொன்றிழைத்த லுணர்வுடைமைக் குரித்தன்றால்
பின்றூக்கி னிதுசாலப் பிழையாகு மெனப் பெயர்ந்தான்

கொண்டுகூட்டு: என்று (- எண்ணி) ஊக்கி எயிறு கடித்து, இரு கரனும் பிசைந்து எழுந்து நின்று, ஊக்கி உணர்ந்து, உரைப்பானாய், '(இவ னைக் கொல்லல்) நேமியோன் பணி அன்று; (அன்றியும்) ஒன்று ஊக்கி ஒன்று இழைத்தல் உணர்வு உடைமைக்கு உரித்து அன்று. பின் தூக்கின் இது சாலப் பிழை ஆகும்' எனப் பெயர்ந்தான்.

பொருள்: (மேற் கூறியவாறு) எண்ணி(ப் போர் செய்ய) உற்சாகங்கொண்டு, (கோபத்தால்) பற்களைக் கடித்துக், கைகளைப் பிசைந்து, (பிறர் காணாமைப் பொருட்டுக் குறுக்கியிருந்த மேனி யைப் பெருக்கி) உயர்ந்து, (செய்ய உன்னிய போரைச் செய்யாமல் சிறிது பொறுத்து) நின்று, (முன்னினும்) அதிகமாக மனம் முயன்று ஆலோசித்து(த் தனக்குள்ளே) சொல்லிக்கொள்வானாய், '(இவனைக் கொல்லுதல் இராமன் இட்ட கட்டளை யன்று; (அல்லா மலும், சீதையைத் தேடிக் கண்டுபிடித்தலாகிய) ஒரு காரியத்தில் முயன்று (இராவண வதமாகிய) வேறொரு காரியத்தைச் செய்தல் அறிவுடைமைக் குரிய செயலு மன்று. பின் வரும் பயனை ஆராய்ந் தால், இச் செயல், மிகவும் குற்றமுடையதாகும்' என்று (இராவ ணனைக் கொல்லும் முயற்சியினின்று) பின்வாங்கினான்.

முதலாவது ஊக்குதல் உற்சாக முறுதலையும் இரண்டாவதும் மூன்மு வதும் முயலுதலையும் குறித்தன. நேமி - சக்கரம். நேமியோன், சக்க ரத்தை யுடையோனை திருமாலின் அவதாரமான இராமனை உணர்த்தியது. தூக்குதல் - ஆராய்தல். 'ஊக்கமுடையான்' என்ற குறளில் வரும் பேர்தல் போலப், பெயர்தல் பின்வாங்குதலைக் குறித்தது. (உக)

[ 'நல்லொழுக்க முள்ளா ரெல்லாரும் எவ்வளவு வல்லமை படைத்திருந்தாலும் எக்காரியத்தையும் சீர்தூக்காது செய்யார். இப்போது போர் செய்ய எழுந்த பெருங் கோபம் பிறர் அறியப் படாமல் என்னுள்ளே அடங்கிடுக. இரகுவீரனது மனைவியைச் சிறை வைத்தவனை ஒரு புன் குரங்கு கொன்ற தென்றால், அது, அவ் வீரசிகாமணியின் வில்லாண்மைக்குப் பழியாம்' என்று நினைந்து அனுமான் அடங்கினான். ]

அனுமான் சீதையைக் காணமையால் ஏங்கல்

[ இவன் 'சயனத்தினிய மணி' என்னும் பெண்மணி யொருத்தியும் தன்னொடு சயனிக்காமல், தனியே தூங்குவானாய், ஒரு தலைக் காமவெப்பம் கனற்றப்பட்டு வருந்துதலால், சீதை கற்பு நிலையில் உள்ளாளென்று அனுமான் அநுமானித்தான்.

பின்பு, 'சீதையை யெங்குங் காணவில்லையே!' யென்று வருந்தி, 'அவளை இராவணன் கொன்றானோ, தின்றானோ, இலங் கைக் கப்பால் எங்காயினும் ஒளித்தானோ? யாதுந் தெரிகிலேன். இனித் திரும்பிப் போய் என் சொல்வேன்? என் துன்பம் யான் செத்தாலன்றித் தீராது. இராமன், யான் சீதையைக் கண்டு வருவேனென்றிருப்பான்; சுக்கிரீவன், அவளைக் கொண்டு வருவே னென்றிருப்பான்; அவர்கள் அவ்வாறிருக்க, என் செயலோ பய னின்றி யிருக்கின்றது.

'அங்கதனாதியர், சீதையைக் கண்டுபிடித்தற்குச் சுக்கிரீவன் குறித்த தவணை கடந்ததனால், "இறந்தொழிவோ" மென்றபோது, "தவணை தவறினும் சீதையைக் கண்டு திரும்புவோமாயின், அவன் கோபியா" னென்று அவர்களுக்குக் கூறிவந்த யான் எண் ணியதை முடிக்காமையால் என்னுயிரை முடிக்கா தொழியேன். அதன் முன் செய்யக்கூடியது யாதாயினு முளதோ என ஆராய்வே னாக. இந்தப் பெரிய இலங்கை நகரில் உள்ள எண்ணிறந்தா ரெல் லாரையும் விடாமற் பார்த்த யான் சீதை யொருத்தியை மட்டும்

கண்டிலேன். கருங் கடலைக் கடந்த யான் கவலைக் கடலைக் கடக்க மாட்டாமல் அதில் ஆழ்ந்து ஆவி அழிந் தொழிவேனோ! இராவணனைப் பிடித்து இரத்தங் கக்க அடித்துச் சீதையைக் காட்டச் செய்து காணேனோ! இராவணனுக்கு விரோதிகளாகிய தேவரைச் சீதை யெங்கிருக்கின்றா ளென்று வினவித் தெரிவே மென்றால், அவன் உயிருள்ளளவும் சொல்லத் துணியார். அசுரர் முதலிய அவனைச் சார்ந்தோரும் சொல்லார். வேறு எவ்வாறு தெரிவேன்? கழுகரசனாகிய சம்பாதி, "இராவணன் சீதையை இலங்கையிற் சிறை வைத்திருக்கிறான். அதோ! அவளைக் காண்கின்றேன்" என்றது பொய்யாய்விட்டதே!' என்றெண்ணினான்.

பின்பு, 'அரக்கர் இருக்கும் இடங்கள் அனைத்தையும் பார்த்து விட்டோம். சோலைகளையும் பார்ப்போ' மென்று இராவணன் மாளிகையை விட்டுப் புறப்பட்ட அனுமான் ஒரு சோலையைக் கண்டான். ]

## 3. காட்சிப் படலம்

[அனுமான் சீதையைக் காணுதலைக் கூறுவது]

### சிறையில் இருந்த சீதை நிலைமை

**30.** வன்ம ருங்குல்வா ளரக்கியர் நெருக்கவங் கிருந்தார்
கன்ம ருங்கெழுந் தென்றுமோர் துளிவரக் காணா
நன்ம ருந்துபோ னலனற வுணங்கிய நங்கை
மென்ம ருங்குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள்

கொண்டுகூட்டு: வல் மருங்குல் வாள் அரக்கியர் (சீதையை) நெருக்க, அங்கு இருந்தார். கல் மருங்கு எழுந்து, என்றும் ஓர் துளிவரக் காணா நல் மருந்து போல், நலன் அற உணங்கிய நங்கை, மெல் மருங்குல் போல், வேறு உள அங்கமும் மெலிந்தாள்.

பொருள்: வாள் (முதலிய ஆயுதங்கள்) ஏந்திய அரக்கியர்கள், (இராவணனுக்கு இணங்கும்படி சீதையைப் பயமுறுத்திப்) பலவந்தம் பண்ணும்பொருட்டு, அந்த அசோக வனத்தில் அவளைச் சூழ்ந்து இருந்தார்கள். (மண்போலத் தன்பால் விழுந்த

நீரை நெடும்பொழுது தங்கச் செய்யும் தன்மையும் வேர் ஊன்று தற்கு இடங்கொடுக்கும் இளக்கமும் இல்லாத) கடினமான கல்லிலே (விதை விழுந்து அரிதாகப் பெய்த மழை நீரால்) முளைத்து, (முளைத்த காலந்தொட்டு) எப்பொழுதேனும் (மழையாயினும் மனிதராயினும் பெய்த) நீர் சிறிதும் அடையப் பெறாத (சஞ்சீவி) மருந்து (மூலிகை) போல, அழகு சிதைய வாடிய சீதை, தனது இயற்கையாகச் சிறந்த இடைபோல், ஏனைய (கை கால் முதலிய) அவயவங்களும் (இராமனது பிரிவாற்றாமையால் உடம்பைப் பேணாமையால் செயற்கையாக) இளைத்திருந்தாள்.

வாள் - மற்ற ஆயுதங்களுக்கு உபலக்கணம். நலன், நலம் என்பதன் விகாரம். நலம் - அழகு. உணங்கிய - வாடிய. '...மருங்குலில்...இருந்த மெலிவு...மற்றை அவயவங்களிலும் பரவலாயிற்றென ஒரு சமத்காரம் தோன்றக் கூறியவாறு' காண்க.

உவமேயத்தில் 'அரக்கியர் நெருக்கிய' சீதை என்றதற்குப் பொருத்தமாக உவமானத்தில் 'வெயில் வெதுப்பிய' மருந்து என வருவித்துக் கொள்க. இந்த உவமான உவமேயங்களின் ஒற்றுமைத் தன்மைகள் ஊன்றி நோக்குந்தோறும் அதிகம் அதிகமாக அறியப்பட்டு ஆனந்தம் அளிப்பனவாக அமைந்திருக்கின்றன. (௩௦)

**31.** துயிலெ னக்கண்க ளிமைத்தலு முகிழ்த்தலுந் துறந்தாள்
வெயிலி டைத்தந்த விளக்கென வொளியிலா மெய்யாள்
மயிலி யற்குயின் மழலையாண் மானிளம் பேடை
அயிலெ யிற்றுவெம் புலிக்குழாத் தகப்பட்ட தன்னாள்

**கொண்டுகூட்டு:** மயிலியலையும் குயில் மழலையையுமுடையாள், துயில் எனக், கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் துறந்தாள். வெயிலிடைத் தந்த விளக்கு என ஒளி இலா மெய்யாள். (அவள்,) இளம் பேடை மான், அயில் எயிற்று வெம் புலிக் குழாத்து அகப்பட்டது அன்னாள்.

பொருள் : சீதை, (விழித்திருப்பார்க்கியல்பான கண் மூடுதல் திறத்தலன்றித்) தூங்குதற்கென்று, கண்களை மூடுதலும் (தூங்கி விழித்தற் கென்று கண்களைத்) திறத்தலும் செய்யாமல் விட்டாள். வெயிலில் ஏற்றிவைத்த விளக்குப் போலப் பிரகாசமில்லாத மேனியுடையாளா யிருந்தாள். (கோர தந்தங்களோடு

கூடிய கொடிய இராக்கத மாதர் பலர் மத்தியிலே, வேறு மனித வனிதையர் ஒருவருமின்றித் தனியளாயிருந்த அவள்,) ஓர் இளம் பெண் மான் (அதனைத் தின்னுதற் கென்று வாய் திறந்து காட்டு கின்ற) கூரிய பற்களையுடைய கொடிய புலிக் கூட்டத்தில் அகப் பட்டதை ஒத்திருந்தாள்.

இமைத்தல் - கண்ணிமைகளை மூடித் திறத்தல்; பின் முழ்கித்த லென் றதனால், திறத்தலை மட்டும் குறித்தது. முகிழ்த்தல் - குவிதல்; இங்கே மூடு தலைக் குறித்தது. பொருள் செய்தற்குப் பொருத்தமாக முகிழ்த்தலும் இமைத்தலுமென மாற்றுக. மயில் இயல் - மயிலின் சாயல் போலும் சாயல். குயில் மழலை - குயிலின் குரல் போலும் குதலைச் சொல்.

'துயிலென' என்பதற்குக், கண்டோர் இது தூக்கமென்று சொல்லும்படி யென்று பொருள் கூறுதலும் பொருந்தும்.

பருவம் நிரம்பிய பல ஆண் மான்கள் ஒரு புலியிடத்து அகப்படினும் வருந்தும். அவ்வாறாக, ஒரு தனி இளம் பெண் மான் பல புலிகளின் வாய்ப் பட்டால் படும் பாடு பாவிக்கக் கூடிய தன்றிப் பகரக்கூடிய தன்று. அப்படிப் பட்ட வருத்தத்தைச் சீதை அடைந்திருந்தாளென்று மிக்க இரக்கமுண்டா கக் கூறினர். அகப்பட்டது என்ற ஒருமை வினையால் மான் தனியான தென்பது பெறவைத்தார். (௩௧)

**32.** விழுதல் விம்முதன் மெய்யுற வெதும்புதல் வெருவல்
எழுத லேங்குத லிரங்குத லிராமனை யெண்ணித்
தொழுதல் சோருத றுளங்குத றுயருழந் துயிர்த்தல்
அழுத லன்றிமற் றயலொன்றுஞ் செய்குவ தறியாள்

கொண்டுகூட்டு: (சீதை) இராமனை எண்ணித் தொழுதல், விழுதல், விம்முதல், மெய் உற வெதும்புதல், வெருவல், எழுதல், ஏங்குதல், இரங்குதல், சோருதல், துளங்குதல், துயர் உழந்து உயிர்த்தல், அழுதல் அன்றி, மற்று அயல் ஒன்றும் செய்குவது அறியாள்.

பொருள்: சீதை இராமனை நினைந்து (அவன் இருந்த திசை நோக்கிக்) கும்பிடுதலும், (கும்பிட்டபடியே) கீழே விழுத லும், பொருமுதலும், மேனி மிக வெதும்புதலும், பயமடைதலும், (விழுந்து கிடந்த நிலைமையினின்று) எழுந்திருத்தலும், (வாய் விட்டு) அரற்றுதலும், (கவலையுற்று) வருந்துதலும், தளர்தலும், நடுங்குதலும், துன்பத்தில் அழுந்திப் பெருமூச் செறிதலும் (இச் செயல்க ளெல்லாம் நிகழும்பொழுது இடைவிடாமற்) கண்ணீர்

விடுதலும் அல்லாமல் (துன்பத்தைத் தணிக்கத் தக்க செயல்) வேறு யாதொன்றும் தெரியாதிருந்தாள்.

உற - மிக. ஏங்குதல் - (வாய் விட்டு) அரற்றுதல். இரங்கல் - (கவலையால்) வருந்தல்: சிந்தாமணி 302-ம் பாட்டுரையில் 'இரங்கியெனக் கவலைகூறி, ஏங்கியென அரற்றுக்கூறி' என வருதல் காண்க. 'தொழுதகையுள்ளும் படை ஒடுங்கும்' என்ற குறளிற்போல, இங்கே 'தொழுதல்' கை தொழலைக் குறித்தது; ஏங்குதல் முன் கூறப்பட்டதனால், 'அழுதல்' கண்ணீர் விடுதலை உணர்த்தியது.

சாதாரண துக்கமுற்றோர் கண்ணீர் விட்டழுவர். அசாதாரண துக்கமுற்றோர்பால் கண்ணீர் உண்டாகுதல், வாய்விட்டரற்றல் முதலிய செயல்கள், அவரது மிக்க துக்கம் காரணமாக, நிகழா. கண்ணீர் ஒழுகல், அழுகை முதலியன துக்கத்தைக் குறைப்பன. இவ் வுண்மையைப் போரில் சிறந்த ஒரு வீரன் மனைவியின் துக்கத்தைப்பற்றி ஆங்கிலத்தில் தேன்னிசன் என்ற கவி செப்பியிருப்பதனால் தெரியலாம். அது வருமாறு:

தன் கணவன் போரில் மடிந்தானென்று கேட்ட ஒருத்தி, கண்ணீர் அரும்பாது அழாது சித்திரம்போற் செயலற்றிருந்தாள். அதுகண்ட அயல் நின்ற மாதர், அவள் இந் நிலையில் இன்னும் சிறிதுபோதிருந்தால் இறந்து விடுவாளென்று அவளை அழும்படி பலவாறு முயன்றும் பயன்படவில்லை. அப்போது, தொட்டிலிற் கிடந்த அவள் குழந்தையை ஒருத்தி எடுத்து வந்து அவள் மடியில் வைத்தாள். வைக்கவே, மாலை மாலையாகக் கண்ணீர் வடிதலுற்றது. உடனே, குழந்தையைக் கொண்டுவந்தவள், 'இனிச் சாகாள். வெறுத்து விட்டுவிடத் துணிந்த உயிரைக் குழந்தைக்காக நிறுத்திவைத்தாள்!' என்றாள்.

இவ்வாறாகக் கூறிய தென்னிசக் கவிஞரது துக்க வருணனையும், இராமன், தன்னைக் காட்டுக்கு வந்து கண்ட பரதனை நோக்கித், 'தசரதர் தைரியமா யிருக்கிறாரோ?' என, அவன் 'உமது பிரிவே பிணியாக, என் தாய் வரமே எமனாக, இறந்தார்' என்றவுடனே, இராமன் கீழே விழுந்து மூச்சவிந்து மூர்ச்சித்தான் என்று கம்பர் கிளைகண்டு நீங்கு படலத்திற் கூறியுள்ள துக்க வருணனையும் ஒப்பு நோக்கத் தக்கன. (௩௨)

**33.** தழைத்த பொன்முலைத் தடங்கடந் தருவிபோய்த் தாழப்
புழைத்த போலநீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்
இழைக்கு நுண்ணிய மருங்குலா ளிணைநெடுங் கண்கள்
மழைக்க ணென்பது காரணக் குறியென வகுத்தாள்

கொண்டுகூட்டு : *கண்ணீர் அருவி(யாகத்) தழைத்த பொன்மலைத் தடம் கடந்து (கடலிலே) போய்த் தாழ, இழைக்கும் நுண்ணிய மருங்குலாள் இணை நெடுங் கண்கள், புழைத்த போல நீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால், (அந்தக் கண்களை) 'மழைக் கண்' என்பது காரணக்குறி என வகுத்தாள்.*

பொருள் : *கண்ணீர் அருவியாக மூலை மலை(மேல் வீழ்ந்து) தாண்டி(க் கடலிலே) போய் விழும்படி, சீதை கண்கள் பொத்த லுடையன போலக் கண்ணீரை இடைவிடாமற் பொழிகின்ற மிகுதியினால், இவள், (தன் கண்கள்) 'மழைக் கண்' என்று கூறப்படுவது காரணப் பெயரென்று (அப் பெயர் வந்த) வகை தெரிவித்தாள்.*

*தழைத்த பொன் - (ஒளி) தழைத்த பொன் ; பொன் நிறமுடைய தேமலைக் குறித்தது. தடம் - மலை. புழை - துவாரம். புழைத்த - துவாரமுடையன. நிரந்தரம் - எப்போதும். பொலிவு - மிகுதி. இழை - நூல். இழைக்கும் நுண்ணிய - நூலைக்காட்டிலும் சிறுத்த. மருங்குல் - இடை. இணை நெடும் கண்கள் - (வேறு உபமானங்கள் ஒவ்வாதனவாய் ஒன்றுக் கொன்று) உவமானமான நீண்ட கண்கள். மழை - மேகம்; குளிர்ச்சி. காரணக் குறி - காரணப் பெயர். வகுத்தல் - வகை சொல்லல்.*

*'கண்கள் நீர் (கண்ணீர்) அருவி(யாகப்) போய்த் தாழப் பொழிகின்ற' எனக் கூட்டுக. **

*'மழைபோலக் குளிர்ந்திருத்தலால் மகளிரிற் சேர்ந்த சீதாபிராட்டியின் கண்கட்கும் வந்த மழைக்கணென்ற பெயர்க்குக் கண்ணீர் மழை பொழிவதனால் வந்த பெயரென்று வேறொரு வகையாகக் காரணங் காட்டியது,* பிறிநிலை நவிற்சி அணி *யாகும்; ஒரு காரணத்தால் வந்த பெயர்க்கு வேறொரு காரணப் பொருள் கற்பித்துக் கூறுவது இதன் இலக்கணம்.'* †

*அடுத்த பாட்டில் 'கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள்' என்பதுபற்றி இப்பாட்டில் முதலடிக்குப் பொருள் கூறுங்கால் 'தாழ' என்பதன்முன் 'கடல்' வருவிக்கப்பட்டது.* (ருரு)

**34.** அரிய மஞ்சின னஞ்சன முதலிவை யதிகங்
கரிய காண்டலுங் கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள்
உரிய காதலி னொருவரோ டொருவரை யுலகில்
பிரிவெ னுந்துய ருருவுகொண் டாலன பிணியாள்

---

* *கண்கள்* (3-ம் அடி), *நீர்* (2-ம் அடி), *அருவி போய்த்தாழப்* (1-ம் அடி), *பொழிகின்ற* (2-ம் அடி). † வை. மு. கோ.

கொண்டுகூட்டு: அரிய மஞ்சினோடு அஞ்சனம் (ஆகிய) இவை முதல் அதிகம் கரிய காண்டலும் (இராமன் நினைவால்) கண் நீர் கடல் புகக், கலுழ் வாள் (ஆகிய சீதை,) உலகில் உரிய காதலின் (இருவர்,) ஒருவரோடு ஒருவரைப் பிரிவு எனும் துயர் உருவு கொண்டால் அன்ன பிணியாள்.

பொருள்: மேகமும் மையும் (ஆகிய) இவை முதலான மிகுதியாகக் கருமையுடைய பொருள்களைக் கண்ட மாத்திரத்தில் (அந்த நிறமுடைய இராமன் நினைவு வர, அதனோடு அவன் பிரிவின் நினைவும் கூடவர, வருந்திக்) கண்ணீர் கடலிற் பிரவேசிக்கும்படி (மிகுதியாக) அழுபவளாகிய சீதை, (காதலர் ஒருவர்பால் ஒருவர் வைத்தற்கு) உரிய காதலையுடைய (தலைவனும் தலைவியுமாகிய இருவர்) ஒருவரை ஒருவர் பிரிதலாகிய துன்பமே வடிவெடுத்தாற்போன்ற துன்பமுடையவளாயிருந்தாள்.

மஞ்சு - மேகம். அதிகம் கரிய - அதிகமாகக் கருமையுடையன (ஆகிய பொருள்கள்). காண்டலும் - கண்டவுடனே. காதலின் - காதலையுடைய. பிணி - (பிரிவாற்றுமைத்) துன்பம்.

'சீதாபிராட்டி தன்னைக் கண்டவர் "இவள் பிரிவுத்துயர் கொண்டு வருந்துகின்றாள்" என்று உணருமாறு தோன்றுகின்றாளென்பது பின்னிரண்டடியின் கருத்து'. * கவி பின் இரண்டடிகளில் பெரிய மலை சிறிய கண்ணாடியில் தோன்றுதல்போல மிக விரிவான கருத்தைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் புலப்படச் செய்திருத்தல் பாராட்டத்தக்கது.

இராமன் காட்டிற்குப் புறப்படும்போது சீதையை நோக்கி, 'நீ வீட்டில் இரு, உன் மெல்லிய பாதம் பாலைவனச் சூட்டைப் பொறுக்கமாட்டா' என்ற போது அவள் 'நின்–பிரிவி னும்சுடு மோபெருங் காடென்றாள்' என்றது இங்கே நினைவுகூரத்தக்கது.

பிரிவாகிய அருவப் பொருளின் தன்மையைச் சீதையாகிய உருவப் பொருள்களின் தன்மையோடு வியப்பும் நயப்பும் தோன்ற உவமித்திருக்கும் கவிசாதுரியம் கருத்துட் பதித்துக் களிக்கத்தக்கது.

பாட பேதம்: பிரிவ ருந்துயர். (௩௪)

35. துப்பி னாற்செய்த கையொடு கால்பெற்ற துளிமஞ்
சொப்பி னன்றனை நினைதொறு நெடுங்கண்க ளுகுத்த
அப்பி னனைநீர் தருந்துய ருயிர்ப்புடை யாக்கை
வெப்பி னாற்புலர்ந் தொருநிலை யுறுதமென் றுகிலாள்

* வை. மு. கோ.

கொண்டுகூட்டு: துப்பினால் செய்த கையொடு கால் பெற்ற (மழை) துளி(க்கும்) மஞ்சு (உண்டாயின் அதனை) ஒப்பினான்தனை நினைதொறும் நெடுங் கண்கள் உகுத்த அப்பினால் நனைந்து, அருந் துயர் உயிர்ப்பு உடை யாக்கை வெப்பினால் புலர்ந்து, ஒரு நிலை உறாத மெல் துகிலாள் (சீதை).

பொருள்: பவளத்தினாற் செய்யப்பட்ட கைகளும் கால்களும் பெற்ற (சூல் முதிர்ந்து கறுத்து மழை) துளிக்கப்போகின்ற மேகம் (ஒன்று உண்டானால், அதனைக் கரிய நிறத்தினால்) ஒத்தவனாகிய இராமனை நினைக்குந்தோறும் (அவன் பிரிவு கருதித் துன்புற்று) நீண்ட கண்கள் சிந்தின நீரினால் நனைதலையுற்றும், அரிய துன்பத்தையும் (அதனால் உண்டாகிய) பெருமூச்சினையும் உடைய உடம்பின் வெப்பத்தினால் உலர்தலையுற்றும், (நனைந்த சேலையென்று மில்லாமல் காய்ந்த சேலையென்று மில்லாமல்) ஒரு படியா யில்லாத மெல்லிய சேலையை உடையவளா யிருந்தாள் சீதை.

துப்பு - பவளம். மஞ்சு - மேகம். ஒப்புதல் - ஒத்தல்.—ச. அ. 'ஒப்பினான்' என்பதற்கு 'ஒப்பினையுடையான்' என்ற பொருளும் பொருந்தும். உகுத்த - சிந்திய. அப்பு - நீர். உயிர்ப்பு - பெருமூச்சு.

ஈர ஆடை காய்தற்கு வெயிலேயன்றிக் காற்றும் உதவுதல்போலச் சீதையின் கண்ணீரால் நனைந்த சேலை காய்தற்கு அவளுடைய உடல் வெப்பே யன்றிப் பெருமூச்சுக் காற்றும் காரணமா யிருந்ததென்று கொள்ள 'உயிர்ப்பு உடை யாக்கை' யென்றார்.

'கைகொடு' என்ற பாடம் பல அச்சுப் பிரதிகளிற் காணப்படுவது: 'கையொடு' என்ற பாடம் திருவாளர் திருநெல்வேலிக் கவிராய ஈசுர மூர்த்தியா பிள்ளையவர்கள் ஏட்டுச் சுவடியி லுள்ளது.

பாட பேதம்: கைகொடு. (௩௫)

36. கமையி னுடிரு முகத்தயல் கதுப்புறக் கவ்விச்
சுமையு டைக்கற்றை நிலத்திடைக் கிடந்தது மதியை
அமைய வாயிற்பெய் துமிழ்கின்ற வயிலெயிற் றரவின்
குமையு றத்திரண் டொருசடை யாகிய குழலாள்

கொண்டுகூட்டு: சுமை உடைக் கற்றை, கமையினாள் (-சீதை) திரு முகத்து அயல் (உள்ள) கதுப்பு உறக் கவ்வி, நிலத்திடைக் கிடந்த(தும்), தூ மதியை அமைய வாயில் பெய்து உமிழ்கின்ற அயில் எயிற்று அரவின் குமை உற திரண்டு ஒரு சடை ஆகிய(துமான) குழலாள்.

பொருள் : ('அளகபாரம்' என்று சொல்லப்படுதற் கேற்பப்) பாரத்தையுடைய மயிர்த்தொகுதி, முகத்தின் பக்கங்களில் (உள்ள) கன்னங்களை நன்றாகப் பற்றி, (மிக்க நீட்சியால்) நிலத்தில் வீழ்ந்து படிந்ததாயும், சந்திரனை வாயின் உட்கொண்டு (திரும்ப வெளிப் படக்) கக்குகின்ற (இராகு வென்னும் கரும்) பாம்புபோல் (இராமன் பிரிவினால் பேணப்படாமல் மயிர்களெல்லாம் சேர்ந்து ஒன்றாய்)த் திரண்டு ஒரு சடையாகியதுமான கூந்தலையுடையாளா யிருந் தாள் சீதை.

கமை - பொறுமை. கமையினாள் - பொறுமையுடையவள் (சீதை). கதுப்பு - கன்னம். கற்றை - மயிர்த்தொகுதி. தூ - சுத்தம்; வெண்மை. அமைய - அடங்க. அயில் எயிறு அரவின் - கூர்மையான பற்களையுடைய பாம்புபோல. குமையுற - (அழகு அல்லது முந்திய நிலைமை) அழிய. 'கற்றை கதுப்புறக் கவ்வி நிலத்திடைக் கிடந்த(தும்) அரவிற் றிரண்டொரு சடையாகிய(தும் ஆன) குழலாள்' எனக் கூட்டுக.

தன்னை வெட்டுவாரையும் தாங்கும் பூமியைப் பொறுமை யுடை யாருக்கு உவமானமாகக் கூறுதல் மரபு. சீதை பூமிதேவியின் அம்சமாய்ப் பொறுமை மிகுதியுள்ளாளென்பது விளங்க அவளைக் 'கமையினாள்' என்றார். முன் மிதிலைக் காட்சிப் படலத்திலும் சீதையை 'உமையாளொக்கும்' என்ற பாட்டில் 'கமையாள்' என்றது இங்கே நினைவுகூரத்தக்கது.

கூந்தலை 'அளகபாரம்' என்பதுபற்றிக் கூந்தலின் மயிர்த் தொகுதி யைச 'சுமையுடைக் கற்றை' என்றார். அக் கற்றை இருந்துகொண்டிருந்த * சீதையின் உடல் நீளத்தினும் அதிக நீளமாய், நிலத்தில் வியாபித்துக் கிடந் தமை விளங்க, 'நிலத்திடைக் கிடந்த' என்றார். மீண்டும் அக் கற்றை அழகு மிகும்படி பின்னிடப்பட்டுச் சடையாகாமல், பேணாமற் புறக்கணித்தமை காரணமாக அழுக்குப்பிடித்து அடையாய் உரோமங்கள் ஒன்றோடொன்று சேர்ந்து இறுகிச் சடையானதென்பது குறிக்கக் 'குமையுறத் திரண்டொரு சடையாகிய' என்றார். அச்சடை பின்னப்பெற்ற தன்றென்பது குறிக்க 'ஆக்கப்பட்ட' என்னாது 'ஆகிய' என்றதும் கவனிக்கத்தக்கது.

'கற்றை, நிலத்திடைக் கிடந்த'தும் 'சடை ஆகிய'துமான 'குழலாள்' என்னாது, 'நிலத்திடைக் கிடந்த தூமதி' எனக்கொண்டு இல் பொரு ளுவமையாக 'நிலத்திடைப் பொருந்தியதொரு களங்கமில்லாத பூர்ண சந்திரன்—சீதையின் திருமுகம்' என்பது முந்திய உரை.

சீதையின் தலைக்குமேல் உள்ள மயிர்ப்பகுதி இராகு வென்னும் கரும் பாம்பின் விரிந்த வட்டமான படத்துக்கும், தலையின்கீழே பின்புறத்தே

* உட்கார்ந்துகொண்டிருந்த.

உள்ள சடையான மயிர்ப்பகுதி அப் பாம்பின் உடலுக்கும், சீதையின் முகம் அப் பாம்பு விழுங்கலுற்று மீண்டு கக்கப்பட்டுக்கொண்டிருக்கும் முழு மதிக்கும் மிகவும் பொருத்தமாக உவமிக்கப்பட்டிருக்கின்றன. இராகு விழுங்குவது பிறைச் சந்திரனு யில்லாமல் முகத்துக்கு உவமானமான முழு மதியா யுள்ள தென்பதும், இராகுவின் நிறம் கூந்தல் நிறம் போலக் கருமை யென்பதும், பாம்புப் படம் தலைமீதுள்ள கூந்தற் பகுதிபோல விரிந்த தென்பதும், பாம்பின் உடம்பும் சடையும் நீண்டவைகளாயும் தலையடுத்த பகுதி பருத்துப் பிந்திய பகுதி படிப்படியாகச் சிறுத்தவைகளாயும் இருப்பதும் கொண்டு, உவமான உவமேயப் பொருள்களின் வடிவ ஒற்றுமை வருண ஒற்றுமை மிகுதியைக் கண்டுகொள்க.

இந்த உவமான உவமேயப் பொருள்கள், ஒப்பிட்டு நோக்கப்படுந் தோறும் ஒன்றேடொன்று சிறந்து பொருந்தல் மிகுந்து விளங்கி, உவமை நயம் ஓர்ந்து உணர்ந்து உவக்கும் இயல்பினூர் உள்ளத்துள் ஊன்றி நின்று உன்னுந்தோறும் உன்னுந்தோறும் உவகை ஊறி உவட்டெடுக்கச் செய்தலால், சிவஞான முனிவர் அமுதாம்பிகை பிள்ளைத் தமிழில், 'சீர்கொண்ட' என்று தொடங்கும் பாட்டில் 'பேர்கொண்ட மேனிலச் சோபான மிசையேறு பேதைமார் முகம் நோக்கி நம் பேரரசு கொள்ளவரு மதிபோலும் இது வெனுப் பெரிதும்ஏக் குற்றவர்கள்தம் கார்கொண்ட பின்னற் கரும்பாந்தள் கண்டுளம் கவலாது களிகூர்ந்துதண் கலைமதியம் வைகுபொழில் சூழ் குளத்தூர்' என்றூர் போலும்.

இப்பாட்டுக் கம்பரது கற்பனை வன்மையைக் காட்டும் பாட்டுக்களுள் ஒன்றென்பது கூறுமலே விளங்கும். (௩௬)

**37.** ஆவி யந்துகில் புனைவதோன் றன்றிவே றறியாள்
தூவி யன்னமென் புனலிடைத் தோய்கிலா மெய்யாள்
தேவு தெண்கட லமிழ்துகொண் டனங்கவேள் செய்த
ஓவி யம்புகை யுண்டதே யொக்கின்ற வுருவாள்

**கொண்டுகூட்டு:** ஆவி அம் துகில் புனைவது ஒன்று அன்றி வேறு அறியாள்; தூவி அன்னம்; மெல் புனல் இடைத் தோய்கிலா மெய்யாள்; அனங்கவேள் தெள் கடல் (பிறந்த) தேவு (மயமான) அமிழ்து கொண்டு செய்த ஓவியம் புகை உண்டதை ஒக்கின்ற உருவாள்.

**பொருள்:** சேலை, உடுக்கப்பட்டிருந்தது ஒன்றன்றி, வேறு (சேலை) ஒன்றையும் அறியாள்; குளியாத உடம்பினை யுடையாள்; மன்மதன் அமிழ்தத்தை (வருணப் பொருளாக)க் கொண்டு

சித்திரித்த சித்திரம் புகையேறப்பட்டதை ஒத்திருக்கின்ற வடிவுடையாளாக இருந்தாள் சீதை.

ஆவி - நீராவி ; புகை. —**த. அ.** ஆவி அம்துகில் - புகை அல்லது நீராவி முதலிய ஆவிபோல மெல்லிய சேலை. புனைதல் - அணிதல். தூவி அன்னம் - சிறகுடைய அன்னம் (போன்றவள்). தோய்தல் - குளித்தல். தேவு - தெய்வத்தன்மை. தெள் கடல் அமிழ்து - தெளிவான பாற்கடலில் பிறந்த அமிழ்தம். அனங்க வேள் - மன்மதன். ஓவியம் - சித்திரம்.

'இல்லாதவள்' என்பது நன்கு புலப்பட 'அறியாள்' என நயம்பட உரைத்தார்.

முதல் அடி, தரித்திருக்கும் உயிரொன்றே போலத் தரித்திருக்கும் உடையும் ஒன்றேயா யிருந்தது என்ற கருத்தும் உள்ளதாகக் கொள்ளலாம். இக் கருத்துக் கொள்ளுங்கால் 'ஆவி'க்குப் பொருள் 'உயிர்'. சீதையும் அன்னமும், முறையே, மாற்றுச் சேலையும் மாற்றுத் தூவியும் இல்லாத தன்மையில் ஒற்றுமையும், நீரில் தோயாமையும் தோய்தலும் உள்ள தன்மையில் வேற்றுமையும் உடைமை இரண்டாம் அடியின் குறிப்புப் பொருளாகக் கொள்ளலாம். இறுதி அடி, இப்படலத்தின் 4-ம் பாட்டில் 'வெயிலி டைத்தந்த விளக்கென ஒளி இலா மெய்யாள்' என்றதையும் 68-ம் பாட்டில் 'மாசுண்ட மணி'யும் 'வெங்கதிர்த் தேசுண்ட திங்களும்' என்றவைகளையும் நினைவுக்குக் கொண்டுவருகின்றது. (௫எ)

### இராமனை நினைந்து சீதை வருந்தல்

[ சீதை, 'மாய மானின் பின் சென்ற என் நாயகனை இளையவன் கண்டிலன்போலும். கண்டானாயினும், இருவரும் இராவணன் என்னைக் கவர்ந்தமையை அறியார் போலும்; அறிந்தாராயினும், அவன் கடல் நடுவில் உள்ள இலங்கையில் என்னைக் கொண்டுவந்து வைத்திருத்தலைத் தெரியார்போலும்; தெரியாரேல், அவர்கள் என்னை மீட்ப தெங்ஙனம்?' என்று எண்ணி வருந்தி, வாய்திறந்த புண்ணிலே தீ எரிந்து நுழைந்தாற்போலத் துன்புற்றாள்: 'இராவணன் என்னைக் கவர்ந்து செல்லும்போது கண்டு எதிர்த்துப் போர்செய்து அக்கொடியவனது வாளால் வெட்டுப்பட்டுக் குற்றுயிரோடு கிடந்த சடாயு இறந்தான்போலும். அவன் இறந்த பின் என் நிலைமையைத் தெரிவிக்க மாட்டுவார் யாருளர்?

ஒருவருமிலர்; ஆதலால், அவர்கள் என்னை இப் பிறப்பிற் காணுத லியலாது' என்றெண்ணிப் புண்ணில் திரும்பித் திரும்பித் தீ நுழைந்தாற் போல மறித்தும் வருத்தமுற்றாள் : 'அவர்கள் என் னிருப்பிடத்தை அறிந்தாராயினும் மனிதரைத் தின்னும் அரக்கர் தின்றிருப்பரென்று என்னைத் தேடாது கைவிட்டார்களோ, தாய ரும் தம்பியரும் திரும்பிவந்து அயோத்திக் கழைத்துப் போயி னரோ, அப்படியாயின் என் கதி யாதாம்?' என்றும், 'என் நாயகன் உண்ணும்போது பரிமாறுதற்கும் விருந்தினர் வந்தபோது உப சரித்தற்கும் என்னையின்றி என்செய்வானோ?' என்றும், 'வஞ்சனை யும் மாயமும் வல்ல அரக்கர் போர்செய்ய வந்தாரோ? அப்போரில் சூது அறியாத என் நாயகனுக்கு யாது நேர்ந்ததோ?' என்றும் புதியன புதியனவாகத் துன்ப எண்ணங்கள் தோன்ற, 'மற்ற நோய்களுக்கு மருந்துண்டு, யான் உற்ற நோய்க்கு மருந்தில்லை' என்று எவரும் எந்நாளும் அடையாத துன்பத்தை அடைந்து, நாவறண்டு மனம் மருண்டு அறிவு சோர்ந்து ஆவி பதைபதைக்க, இப்போது பகல் இப்போது இராத்திரி என்ற வேறுபாடறியாதவ ளாய், இருந்த இடம் செல்லரிக்க அதைவிட்டு எழாதவளா யிருந்தாள். ]

38. மெய்த்தி ருப்பத மேவென்ற போதினும்
இத்தி ருத்துறந் தேகென்ற போதினும்
சித்தி ரத்தி னலர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருந்த முகத்தினை யுன்னுவாள்

கொண்டுகூட்டு : (தசரதன், 'நீ என்) மெய்த்திருப் பதத்தினை மேவு' என்ற போதினும், (கைகேயி,) 'இத்திருவைத் துறந்து ஏகு' என்ற போதி னும், சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரையை ஒத்து இருந்த (இராமன்) முகத்தினை(ச் சீதை) உன்னுவாள்.

பொருள் : (தசரதன், இராமனை நோக்கி, 'நீ எனது இராச் சியச்) செல்வப் பதவியை ஏற்றுக்கொள்வாயாக' என்ற சமயத் திலும், (கைகேயி) 'இந்தச் செல்வத்தைக் கைவிட்டுக் (காட்டுக் குச்) செல்வாயாக' என்ற சமயத்திலும், சித்திரத்திலே தோன் றும் செந்தாமரை மலர்போல(ப் பொலிவு மிகுதலும் குறைதலு மின்றி) இருந்த இராமன் முகத்தை நினைவுகூர்வாளானாள் சீதை.

மெய்த்திரு வென்றது, தசரதனது செல்வத்தை நோக்க, மற்ற வேந்தர்களின் செல்வம் பொய்யா மென்னும்படி, அவன் செல்வம் சிறந்த தென்பதைக் குறித்தது. அலர்தல் - தோன்றுதல்.—பரிபா.

இன்பம் வந்ததென்று இறையளவும் இறுமாந்துவிடாமலும், துன்பம் வந்ததென்று சொற்பமும் சோர்ந்துவிடாமலும் உள்ள, அரிய துறவிகள் பாலும் அரிதாகக் காணப்படுகின்ற, இராமனது அருமையினும் அருமையான மனநிலைமையை நினைந்து அப்படிப்பட்ட நாயகனைப் பிரிய நேர்ந்ததே யென்று சீதை வருந்தினு ளென்பது கருத்து. (௩அ)

[ இவ்வாறாக, இராமன் காட்டுக்குப் புறப்படும்போது,—அவனிடத்துக் காணப்பட்ட அருங்குணத்தையும்: அதன் முன்பு,—தன் மணத்துக்குப் பணயமாக வளைக்கும்படி வைத்திருந்த பெரு வில்லை முறித்த பேராண்மையையும்; மணவினை நிகழும்போது தன் காலைக் கையால் எடுத்து அம்மிமீது வைத்த அருமைச் செய்தியையும்; இருபத்தொரு முறை பூமியைச் சூழ்ந்து சென்று அங்கங்கிருந்த அரசர் குலத்தை அழித்த பரசுராமன் 'வளைக்க வல்லையேல் வளை' யெனக் கொடுத்த வில்லை வளைத்து, அவன் அகந்தை அடங்கி ஒடுங்கி வணங்கப் புரிந்த வலிமையையும்: இராமன் காட்டுக்குச் சென்ற பின்பு,— ]

**39.** ஆழ நீர்க்கங்கை யம்பி கடாவிய
ஏழை வேடனுக் கெம்பிநின் றம்பிநீ
தோழன் மங்கை கொழுந்தி யெனச்சொன
வாழி நண்பினை யுன்னி மயங்குவாள்

கொண்டுகூட்டு: ஆழ நீர்க் கங்கையில் அம்பி கடாவிய ஏழை வேடனுக்கு, 'எம்பி நின் தம்பி; நீ தோழன்; மங்கை கொழுந்தி' எனச் சொன்ன நண்பினை உன்னி மயங்குவாள்.

பொருள்: (இராமன் சக்கரவர்த்தி திருமகனாயிருந்தும், அந்த மிக்குயர்ந்த நிலைமையைக் கருதாமல், தன்னோடொப்பிட்டால் மிக்க) ஏழையாகவுள்ள குகனை நோக்கி, 'என் தம்பி உன் தம்பி; நான் உன் தோழன், சீதை உன் கொழுந்தி' என்று (உரிமை பாராட்டிச்) சொன்ன (உயர்ந்த) சிநேக குணத்தையும் நினைவுகூர்ந்து மயங்கலானாள் சீதை.

ஆழநீர்க் கங்கை - ஆழமான நீரையுடைய கங்கையாறு. அம்பி - தோணி. கடாவுதல் - செலுத்துதல். எம்பி - என் தம்பி. வாழி, அசை.

அரசரெல்லாரையும் வென்ற பரசுராமனைத் தன் ஆண்மையினால் பெருமையறச் செய்தவனே, தன் கேண்மையினால், எளிய குகனைப் பெருமையுறச் செய்தா னென்றதனால், இராமன் வன்புடையார்க்கு வன்பும் அன்புடையார்க்கு அன்பும் செய்தமை மிக அழகாகக் கூறப்பட்டிருக்கின்றது.

இராமன், குகனிடத்துத் தனக்கு அன்பு அதிகப்பட்ட முறையே இயல்பாகவும் படிப்படியாகவும் அவனை உரிமைப் பாட்டில் உயர்த்துவானாய், அவனை நோக்கி 'என் தம்பி உன் தம்பி, நான் உன் தோழன்' என்று கூறி, அம்மட்டில் அமையாமல், மிகக் கிட்டின உறவினனை நோக்கிக் கூறுமாறு 'என் மனைவி உன் கொழுந்தி' என்றானென்று இராமன் நட்புரிமை பாராட்டுந் திறத்தில் ஒப்புயர்வில்லாதவ னென்பதை விளக்கிய நயம் மிகச் சிறந்தது.

' "ஆழி நண்பினை உன்னி அழுங்குவாள்" என்னும் பாடத்துக்குக் கடல் போலும் பெரிய நட்பை நினைத்து வருந்தத் தலைப்பட்டா ளென்று உரைக்க.' *

பாட பேதம்: ஆழி நண்பினை யுன்னி யழுங்குவாள். (௩௧)

## திரிசடை சீதையைத் தேற்றுதல்

[ மேற்கூறியவாறு சீதை வருந்திக்கொண்டிருக்கும்போது, நடு இராத்திரி ஆக, அவளைச் சூழ்ந்து காவல் செய்த அரக்கியரனைவரும் உறக்கமுற்றனர்: அப்போது, சீதை, திரிசடையை நோக்கி 'நீ ஒருத்தியே நல்லவள். என் தோழியாவாய். எனக்கு இடப் பக்கத்துள்ள கண் முதலிய உறுப்புக்கள் துடிக்கின்றன. இவைகள் இவ்வாறே என் கல்யாணத்துக்கு முன்னும் துடித்தன. இதனால் எனக்கு யாது நேருமென்று நீ ஆராய்ந்து சொல்வாயாக' என்றாள். திரிசடை, 'இக்குறி நீ உன் நாயகனை அடையும் குறி. ஒரு பொன்னிற வண்டு உன் காதில் ஊதிப் போனது. அது உன் நாயகன் தூதுவன் வரப்போவதை உணர்த்தியதாம். பல துன்னிமித்தங்கள் தோன்றுகின்றன. இவை இராவணனும் இராக்கதரும் இறந்தொழிதலைக் குறிப்பனவாம். இப்போது யான் கண்ட கனவைக் கேட்பாயாக. இரண்டு சிங்கங்கள் ஒரு குன்றிலிருந்த பல புலிக் கூட்டங்களைத் திரட்டிக் கூட்டிக்கொண்டு இலங்கைக்கு வந்து இராக்கதர்களைக் கொன்றுவிட்டுத் திரும்பிச் சென்றன.

* வை. மு. கோ.

இங்கு வந்து தங்கியிருந்த மயிலும் கூடச்சென்றது.* ஒரு பெண், பல சுடர்த் தட்டு விளக்கு ஒன்றை ஏந்தி இராவணன் மாளிகையினின்று புறப்பட்டுச் சென்று விபீடணன் மாளிகையுட் புகுந்தாள்.† அப்படிப் புகுந்த சமயத்தில் நீ என்னைத் துயிலெழுப்பினாய்' எனச், சீதை, 'நீ திரும்பவும் தூங்கிக் கனவைக் குறையும் காண்!' என்றாள்.‡ ]

### அனுமான் சீதையைப் பார்த்தல்

[ அப்போது அங்கே அனுமான் வந்தான். கோர விகார குரூபிகளான கொடிய அரக்கிமார்கள், 'பொல்லாத தூக்கம், தூங்காமற் சீதையைக் காவல் செய்யும்படி இராவணன் இட்டிருந்த கட்டளையைக் கடக்கும்படி செய்தது' என்று கூறித், தூக்கத்தில் நழுவவிட்ட ஆயுதங்களை எடுத்துக்கொண்டு எழுந்தார்கள். 'இவர்கள் பெண்ணென்று பேர் படைத்துப் பெண் தன்மைக்கு மாறாக ஆயுதம் தாங்கிச் சேனைபோலத் திரண்டிருப்பதன் காரணம் யாது?' என்று அனுமான் அவர்கள் இருந்த இடத்தைக் கூர்ந்து நோக்கினான். நோக்கவே, அங்கே, மேகக்கூட்டங்களி னுள்ளிருந்து அவைகளைப் பிளந்துகொண்டு வெளிப்படுகின்ற மின்னைபோல, அந்தக் கரிய இராக்கதப் பெண்கூட்டத் துள்ளிருந்து சீதை விளங்கக் கண்டான். கண்டவுடன் 'இப் பெண் மணி, தன் கண்ணீர்த் தடாகத்திடையே அன்னம் போலவும், என் மனக் காரிரும்பை ஈடுபடுமாறு இழுத்துக் கவரும் செங்காந்தம் போலவும் தோன்றுகின்றாள். இவளே சீதை. இராமன் கூறிய இலக்கணங்களெல்லாம் இவளிடத்தில் இருக்
இவள் கற்பு ஒரு சிறிதும் கலங்கியதன்று. பஞ்சாக்கினி மத்தியில் நின்று ஐம்புலன்களையும் அடக்கி, உண்ணும் உணவையும் குடிக்கும் நீரையும் ஒழித்து, வருந்தி நோற்பவர்களுடைய அருந்தவம், கற்புடைய மாதர் மனத்தவத்தோடு ஒப்பிடத்தக்க சிறப்புடையதாகச் சொல்லவும்படுமோ!' என்று களி கூர்ந்து, 'இராமன்

*. இது, இராம லக்குமணர்கள் வானர சேனையுடன் வந்து, இராக்கதரைக் கொன்று, சீதையைச் சிறைமீட்டிச் செல்வதைக் குறித்தது.

† இது, பல போகங்களையும் அளிக்கும் இராச்சிய லக்குமி இராவணனை நீங்கி விபீடணனைச் சேர்வதைச் சுட்டியது.

‡ இது, நாடக நிகழ்ச்சிபோலக் கவி சாதுரியமாகக் கூறியது.

உயிரை இராவணன் ஒருவரும் அறியாமல் ஒளித்து வைத்திருக்கும் விதத்தை என்னென்பேன்! இராமன் உயிராகிய சீதை இலக்குமியே! இராமன் திருமாலே! கற்பினுக் கருங்கலமாகிய சீதைக்குத் தந்தையாகப் பெற்ற சனகனைப் புகழ்வேனோ! கணவனாகப்பெற்ற இராமனைப் புகழ்வேனோ! அடிமையாகப் பெற்ற என்னைப் புகழ்வேனோ! யாரைப் புகழ்வேன்! உலகத்திலே சீதை பிறந்ததனால், பெண்பிறப்பும் பெண்களுக்குரிய நாணம் முதலிய நற்குணங்களும் மிக்க சிறப்பை அடைந்தன. இவள் இவ்வாறு கற்பினைக் காத்திருக்கும் காட்சியைக் கண்ணாரக் காணும் பாக்கியத்தை இராமன் பெற்றிலனே!' என்று அனுமான் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது, அந்த அசோகவனத்திலே, இராவணன் தோன்றுவானாயினன். ]

## 4. நிந்தனைப் படலம்

[ இராவணன் காதல் வார்த்தைகள் கூற, சீதை அவனைத் துரும்பாகக்கொண்டு கடிந்து நிந்தித்ததைக் கூறுவது ]

### இரவில் இராவணன் சீதை யிருந்த அசோக வனத்துக்கு வருதல்

**40.** சிகரவண் குடுமி நெடுவரை யெவையு
மொருவழி திரண்டன சிவண
மகரிகை வயிர குண்டல மலம்புந்
திண்டிறற் றோள்புடை வயங்கச்
சகரவே லையினீர் தழுவிய கதிரிற்
றலைதோறுந் தலைதோறுந் தயங்கும்
வகையபன் மகுட மிளவெயி லெறிப்பக்
கங்குலும் பகல்பட வந்தான்

**கொண்டுகூட்டு:** *சிகரம் வள் குடுமி நெடுவரை எவையும் ஒரு வழி திரண்டன சிவண, மகரிகை வயிர குண்டலம் அலம்பும் திண் திறல் (உடைய) தோள்கள் புடை வயங்க, சகரர் வேலையின் நீர் தழுவிய கதிரின் தலைதொறும் தலைதொறும் தயங்கும் வகைய பல் மகுடங்கள் இள வெயில் எறிப்ப(தால்) கங்குலும் பகல்பட, (இராவணன்) வந்தான்.*

பொருள் : மலைகளெல்லாம் ஓரிடத்துத் திரண்டனபோல இருபது தோள்கள் விளங்க, (கருமையான) கடலைச் சேர்ந்த (உதய) சூரியர்போல(க் கரிய) தலைதோறும் விளங்கும் கிரீடங்கள் இளவெயில் போன்ற ஒளி வீசுதலினால் இராத்திரி பகல் போலத் தோன்ற, இராவணன் வந்தான்.

சிகர வண் குடுமி - சிகரமென்ற வளமான உச்சி. நெடு வரை - உயர்ந்த மலை: நெடுமை நீளமன்றி உயர்வையும் பெருமையையுங் குறிக்கும். எவையும் - எல்லாம். ஒரு வழி - ஓரிடத்தில். சிவண - போல. மகரிகை வயிரகுண்டலம் - வயிரமிழைத்த மகர குண்டலங்கள். அலம்புதல் - அசைதல். திண் திறல் - திண்ணிய வலி - மிகுந்த பலம். புடை வயங்க - (இரண்டு) பக்கமும் விளங்க. சகரவேலை - சகரரால் தோண்டப்பட்ட சமுத்திரம். கதிரின் - சூரியன்போல. தபங்கும் - பிரகாசிக்கும். வகைய - (பத்து) வகை ( - விதம்) உடைய. பத்துக் கிரீடங்கள் பல கிரீடங்க ளெனப்பட்டன. படல் - தோன்றுதல்.—புறப். வெண். மாலை.

இராவணனது கரிய பெரிய தேகமாகிய கடலின்மீதே பத்துத் தலைகளாகிய உதயகிரிகளின் மேலே, துவாதசாதித்தருள் இருவரொழிய எஞ்சிய பத்துச் சூரியர்போலப் பத்துக் கிரீடங்கள் பிரகாசித்தன வென்றும், அச் சூரியப் பிரகாசத்தால் இரவொழியப் பகல் தோன்றுதல் போலக் கிரீட ஒளியால் நடுஇராத்திரி இருள் நீங்கிப் பகல்போலாயிற்றென்றும், அதிசயம் விளையக் கூறிய நயம் கொண்டாடற்குரியது.

'ஒன்றுத உலக மூன்றும் உணர்கின்ற ஒருவன்' என்னும் இராவணனின் மகோன்னத நிலை இதுமுதல் பத்தொன்பது பாட்டுக்களில் வருணிக்கப் படுகின்றது. பின்னர்ச் சீதை அவனை ஒரு பொருளாய்க் கருதாது 'துரும்பு' ஆகக் கொண்டு இழித்துக் கூறுவதற்கு இந்தக் கெம்பீரத் தோற்றம் முரணுக விளங்குகின்றது காண்க. (சo)

[ ஊர்வசி உடைவாளேந்தித் தொடர, மேனகை வெற்றிலை மடித்துக் கொடுத்துக்கொண்டு வர, மற்றைத் தேவ மாதர்கள் புடைசூழத், தீபமேந்தி எண்ணிறந்த மடந்தையர் செல்ல, அம் மாதர் பூண்டிருந்த இரத்தினாபரணங்கள் தீப ஒளியோடு சேர்ந்து இருளை விழுங்க, அவர்க ளணிந்திருந்த பூமாலை, பச்சைக் கருப்பூரம், கலவைச் சாந்து முதலிய பரிமள திரவியங்கள் பல திசைகளிலும் பரிமளிக்க, அன்னங்கள் ஒலித்துக்கொண்டு நடத்தல் போலக் காற்சிலம்பு ஒலிக்க அந்த மடந்தையர் படர்ந்து நடந்தனர். ]

**41.** அந்தரம் புகுந்த துண்டேன முனிவுற்
றருந்துயி னீங்கினு னாண்டைச்
சந்திர வதனத் தருந்ததி யிருந்த
தண்ணறுஞ் சோலையின் றனையோ
மந்திரம் யாதோ யாரோடும் போமோ
வென்றுமா மனமறுக் குறலால்
இந்திரன் முதலோ ரிமைப்பிலா நாட்ட
முகிழ்த்தன ருயிர்ப்பவிந் திருப்ப

கொண்டுகூட்டு: '(இராவணன்) *அந்தரம் புகுந்தது உண்டு என முனிவு உற்று, அருந் துயில் நீங்கினன்; (அவன் கருதிச் செல்வது) ஆண்டைச் சந்திர வதனத்து அருந்ததி இருந்த தண் நறும் சோலையையோ? (அவன்) மந்திரம் யாதோ? (அவன் கோபம்) யாரொடு போமோ?' என்று மா மனம் மறுக்கு உறலால் இந்திரன் முதலோர் இமைப்பு இலா நாட்டம் முகிழ்த்தனராய் உயிர்ப்பு அவிந்து இருப்ப (அவன் வந்தான்).*

பொருள்: '*(இராவணன், யாதோ இதுவரை நேராத) மாறுபாடு நேர்ந்திருக்கிறதென் றெண்ணிக் கோபங்கொண்டு, தூக்கம் நீங்கியிருக்கிறான்; (அவன் குறித்துச் செல்வது) சீதை யிருக்கும் சோலையையோ? (வேறெவ்விடத்தையோ?) அவன் ஆலோசனை (யில் உள்ளது) யாதோ? (அவன் கோபம்) யா(ருயி)ரோடு முடியுமோ?' என்றெண்ணி மனம் மறுகுதலுற்றதனால், இந்திராதி தேவர்கள் (அவன் கோபத்துக்குத் தாந்தாம் இலக்கா யிருக்கலாமென்று பயமடைந்து அதனால் இயல்பாக எப்போதும்) இமையாத கண்கள் (இமைத்து) மூடப்பெற்றவராய் (ஓயாது இயங்கும) மூச்சு (இயங்காமல்) அடங்கினவராயிருக்கும்படி இராவணன் வந்தான்.*

*அந்தரம் - வேறுபாடு. ஆண்டை - அங்கு. வதனம் - முகம். அருந்ததி - அருந்ததி போலும் கற்புடையாளாகிய சீதை. தண் - குளிர்ச்சியான. நறும் - வாசனையான. சோலை இன் தனை - சோலையை: இன், தன் சாரியைகள். மந்திரம் - ஆலோசனை. முகிழ்த்தல் - மூடல். உயிர்ப்பு - மூச்சு.*

பாட பேதம்: *சோலையிற் றூனே.* (*சக*)

**42.** நீனிறக் குன்றி னெடிதினிற் றாழ்ந்த
நீத்தவெள் ளருவியி னிமிர்ந்த
பானிறப் பட்டின் மாலையுத் தரியம்
பண்புறப் பசும்பொனா ரத்தின்
மானிற மணிக ளிடையுறப் பிறழ்ந்து
வருகதி ரிளவெயில் பொருவச்
சூனிறக் கொண்மூக் கிழித்திடை துடிக்கு
மின்னென மார்பினூ றுளங்க

கொண்டுகூட்டு: *நீல் நிறக் குன்றின் (நின்று) நெடிதினில் தாழ்ந்த நீத்தம் வெள் அருவியின், நிமிர்ந்த பால் நிறப் பட்டின் மாலை(யாத் தரித்த) உத்தரியம் பண்பு உற, பசும் பொன் ஆரத்தின் மால் நிற மணிகள் இடை உற, (அவை பொன்னுடன்) பிறழ்ந்து வரு கதிர் இள வெயில் பொருவச், சூல் நிறக் கொண்மூக் கிழித்து (அதன்) இடை துடிக்கும் மின் என, மார்பில் நூல் துளங்க (அவன் வந்தான்).*

பொருள்: *நீல நிறமுடைய மலையினின்று நீளமாக இறங்கு கின்ற வெள்ளை அருவிபோல, நீண்ட பாலின் நிறம் படைத்த (வெண்) பட்டு மேலாடை (அவனுடைய கரிய பெரிய தோள் களில்) அணியப்பெற்று (அவ்வருவியின்) அழகை உற, (அவன் மார்பில் அணிந்த) பொன் மாலையிலே, பேரொளியுடைய இரத் தினங்கள் இடையே (கோக்கப்பட்டு) உற, (அந்த இரத்தி னங்கள் பொன்னுடன்) பிரகாசித்து உண்டாம் ஒளி இளவெயில் போலக், கரு(க்கொண்டு கரு) நிறம் படைத்த மேகத்தைக் கிழித் துக் கொண்டு (வெளிப்பட்டு அம் மேகத்தின்) நடுவிலே துடிக் கின்ற மின்போல, அவனுடைய (கரிய) மார்பிலே (அணிந்துள்ள) பூணூலானது அசைய அவன் வந்தான்.*

*நீல் - நீலம். நீத்தம் - வெள்ளம். நிமிர்ந்த - நீண்ட.*—புறப் பொ. வெண். மாலை. *மாலை - ஒழுங்கு. உத்தரியம் - மேலாடை - அங்க வஸ்திரம். பண்பு - அழகு*—தி. அ. *மால் - பெருமை. நிறம் - ஒளி. பிறழ்ந்து - பிரகாசித்து. வரு கதிர் - உண்டாகும் ஒளி. பொருவ - ஒப்ப. கொண்மூ - மேகம். இடை - நடு. துளங்க - அசைய.* (சஉ)

[ *அவன் அரையில் அணிந்திருந்த பொன்னுடை மலையை வளைந்த மஞ்சள் வெயில்போல விளங்கக், கற்பகக் கொம்புகள்*

பூத்தாற்போல இருபது கைகளிலும் செம்பொன் மோதிரங்கள் திகழ, அரக்கியர் இயக்கியர் அரம்பைய ராதியோர் கூட்டம் மலையைச் சார்ந்த மயிற்கூட்டம் போல அவனைச் சூழ்ந்துவர, வாத்திய முழக்கமும் வாய்ப்பாட்டோசையும் பேதமின்றி இனிது கலந்தொலிக்கும் இன்னிசையானது விடம் கக்கும் நாகங்கள் அமிழ்தம் உமிழும்படி செய்ய, 'மேகம் வரக்கண் டுளங்களித்து விரிக்குந் தோகை மயிலாட'ல் போலக் கார்நிறம் படைத்த அவனைக் கண்டு களித்து மயில்போன்ற நடன மாதர் நடித்துச் செல்ல, அவன் தேகத்தில் மன்மத பாணங்கள் துளைத்த புண்களிலே காய்ச்சிய வேல் புகுந்தாற் போலச் சந்திர கிரணங்கள் நுழைய, அப் புண்களிலே உருக்கிய செம்புத் துளிகள்போலச் செந்தேன் துளிகளைத் தென்றற்காற்று மலர்களிலிருந்து வாரிக் கொண்டுவந்து தெறிக்கப், பூமாலை முதலிய நறுமணப் பொருள்கள், ஆடல்பாடல், நிலவு, தென்றல் ஆகிய காமோத்தீபகமானவைகளால் விரக வேதனை மிகுதியாக வளர வந்தான்.

வேண்டுவார் யாவரேனும் எதிர்ப்படுவரேல், அவர்க்கு ஈதற்குப் பூமாலை, சந்தனம், களபம், பொன்னணிகள், இரத்தினாபரணங்கள், பொற்காசுகள் முதலியவற்றை ஏந்தி ஏந்திழையார் எண்ணிறந்தோர் பின் தொடர்ந்துவரக், கரிய மலைமீது வெள்ளிய பாற்கடல் அலை வீசிப் பரந்தாற்போல இருபது தோள்களின் மேல் உலாவும்படி வெண்சாமரைகளை மெல்லியலார் பலர் வீசிவரக், கருங்கடல்மேல் விளங்கும் களங்கமற்ற பூரண சந்திரன் போல வெண்கொற்றக் குடை பிடிக்கப்பட்டு வரத், தாடகையினும் பலம் மிகுந்த தையலார் பலர் பலபல ஆயுதங்களைத் தாங்கிப் புடை சூழ்ந்துவரச், சீதை யிருந்த இடந் தெரிந்திருந்தும் காம பரவசத்தால் திசைப்புறத் தெழுந்து சென்று சீதையைத் தேடி யலைந்த பலதலைப் பாம்புபோலப் பல இடங் களினுஞ் சென்று தேடி யலைந்து வந்தான். ]

## அனுமான் சீதைக்கு அருகே சென்று மறைவாயிருத்தல்

[ அப்போது அவனைக் கண்ட அனுமான், கூர்ந்து நோக்கி, அவனுடைய வஞ்சனையும் செய்கையும் அவற்றால் விளையும் விளைவும் அவ்விடத்தே விளங்குமென்றெண்ணிச், சீதை யிருந்த விடத்துக்குச் சமீபத்திலே சென்று மறைவா யிருந்தான். ]

இராவணன் வருகையைக் கண்டு சீதை அஞ்சுதல்

**43.** ஆயிடை யரக்க னரம்பையர் குழுவு
 மல்லவும் வேறய லகல
மேயினன் பெண்ணின் விளக்கெனுந் தகையா
 ளிருந்துழி யாண்டவள் வெருவிப்
போயின வுயிர ளாமென நடுங்கிப்
 பொறிவரி யெறுழ்வலிப் புகைக்கட்
காய்சின வுழுவை தின்னிய வந்த
 கலையிளம் பிணையெனக் கரைந்தாள்

கொண்டுகூட்டு: *ஆயிடை, அரக்கன், அரம்பையர் குழுவும் அல்லவும் வேறு அயல் அகலப், பெண்ணின் விளக்கு எனும் தகையாள் இருந்துழி மேயினன். ஆண்டு, அவள், வெருவி, உயிர்போயினளாம் என நடுங்கிப், பொறி வரியும், எறுழ் வலியும், காய்சினம் புகைக் கண்ணும் உடைய உழுவை, (தன்னைத்) தின்னிய வந்த கலைஇளம் பிணை எனக், கரைந்தாள்.*

பொருள்: *அப்போது, இராவணன், (தன்னுடன் வந்த) தேவமாதர் கூட்டங்களும், (இயக்கியர் முதலிய மற்றைப் பெண்கள் கூட்டங்களும், அவை) அல்லாத(வைகளான, சீதையைக் காவல் செய்திருந்த, அரக்க மடவார்) கூட்டங்களும் (அவனைவிட்டு) வேறாகிப் பக்கங்களிலே (விலகித் தூரமாக) நீங்கத், (தனியளாய்ச்) சீதை யிருந்த இடத்தை அடைந்தான். (அடையவே,) அவள், அஞ்சி, உயிர்போகின்றவள் போல நடுங்கி, (தன்னைத்) தின்னுதற்குப் புலி (நெருங்கி) வரப்பெற்ற மான் போல (உடல் ஒடுங்கி) மெலிவுற்றாள்.*

*ஆயிடை - அவ்வேளையில். குழு - கூட்டம். அல்லவும் - அல்லாதனவும் - அல்லாத கூட்டங்களும். வேறு அயல் அகல - வேறாக(ப் பிரிந்து) பக்கங்களிலே (தூரமாக விலகிப்போய்) நீங்க. மேயினன் - மேவினன் - சேர்ந்தான். பெண்ணின் விளக்கு - பெண்ணாகிய விளக்கு - பெண்களுள்ளே (அழகு மிகுந்து) விளங்குகின்றவள். இன், சாரியை. மிதிலைக் காட்சிப் படலம் ௭௦-ம் பாட்டில் பாம்பாகிய மணித்தாம்பு என்பது "பாம்பின் மணித்தாம்பு" எனப்பட்டது போலப் பெண்ணாகிய விளக்கென்பது இங்கே பெண்ணின் விளக்கு எனப்பட்டது. தகை - அழகு. இருந்துழி - இருந்த உழி - இருந்த இடம். ஆண்டு - அங்கே. பொறி - வரி —சிந்தா.*

பொறி, வரி, என்ற இரண்டு சொற்களும் மீ, மிசை போல ஒருபொருள் குறித்தவை. பொறி வரி போல எறுழ் வலி, இரண்டும் ஒருபொருள் குறித் தவை. காய் சினம் - கோபிக்கின்ற கோபம். சொல் வளங் குறித்த ஒரு வகை நயம் தோன்றப் பொறிவரி எறுழ்வலி காய்சினம் என அடுக்கிக் கூறினர். புகை - கோபத் தீயின் புகை. உழுவை - புலி. தின்னிய - தின்ன. கலே - குலேகின்ற. பிணை - பெண் மான். (சுங)

அப்போது இருவர் நிலைமையையும் அனுமான் பார்த்தல்

44. கூசி யாவி குலேவுறு வாளையும்
ஆசை யாலுயி ராசழி வாளையும்
காசில் கண்ணிணை சான்றெனக் கண்டனன்
ஊச லாடி யுளையு முளத்தினன்

கொண்டுகூட்டு: கூசி ஆவி குலேவு உறுவாளையும் ஆசையால் உயிர் ஆசு அழிவாளையும் (அனுமான்) காசுஇல் (தன்) கண் இணை சான்று எனக் கண்டனன். (காணவே), ஊசல் ஆடி உளையும் உளத்தினன் (ஆனன்).

பொருள்: (உயிரினுஞ் சிறந்த கற்புக்கு ஆபத்து வருமோ வென்று) பயப்பட்டு (உடலேயன்றி) உயிரும் நடுங்குகின்ற சீதா தேவியையும், காமத்தால் விரைவாக உயிர் அழிகின்ற இராவண ளையும் அனுமான், தன் இரண்டு கண்களும் சாட்சியாக நேரே கண்டான். (காணவே, அவள் இணங்கா ளாதலால் கொன்று விடுவானே வென்ற சந்தேகத்தினல்) ஊஞ்சல் போல ஆடி வருந்துகின்ற மனத்தினன் ஆனன்.

கூசி, இங்கே நாணி யென்று பொருள்படாமல் பயப்பட்டு என்று பொருள்பட்டு நின்றது. கூச்சம் - அச்சம்: கூசுதல் - பயப்படல்.—ச. அ. ஆசு - விரைவு. ஆசின் - விரைவாக. — பெருங்கதை. காசு - குற்றம். சான்று - சாட்சி. உளையும் - வருந்தும்.

ஊசலாடி யென்றது சீதையின் கற்பைச் சந்தேகித்தன்று: 'காசுண்ட கூர்தலாள் கற்புங் காவலும் - ஏசுண்ட தில்லையால்: அறத்துக் கீறுண்டோ!' என்று முன் (காட்சிப் படலம் 68-ம் பாட்டில்) அனுமான் தெளிந்து கூறி யதுகொண்டு தெரிந்து கொள்க. (சுச)

இராவணன் சீதையை இணங்கும்படி வேண்டுதல்

45. இன்றி றந்தன நாளை யிறந்தன
என்றி றந்தருந் தன்மை யிதாலெனைக்
கொன்றி றந்தபின் கூடுதி யோகுழை
சென்றி றங்கி மறந்தரு செங்கணாய்

**கொண்டுகூட்டு :** 'குழை (அளவு) சென்று இறங்கி மறம் தரு செங் கண்ணாய்! இன்று இறந்தன; நாளை இறந்தன; என் திறத்தில் (நீ) தரும் தன்மை இது ஆ(கையா)ல், (நீ) என்னைக் கொன்று (நான்) இறந்தபின் கூடுதியோ?

**பொருள் :** '(இன்றைத்தினம் நீ இசைவாய், இன்றைத் தினம் நீ இசைவாய் என்று யான் எண்ணியிருந்த பல) இன்றைத் தினங்கள் (என் எண்ணம் முற்றுப் பெருமல் வீணே) கழிந்தன; (அவ்வாறே, நாளைத்தினம் இணங்குவாய், நாளைத்தினம் இணங்கு வாய் என்று யான் எதிர்பார்த்திருந்த பல) நாளைத்தினங்களும் (பயன் தராமல்) ஒழிந்தன; * ஐயோ! என் விஷயத்தில் நீ அருளும் இயல்பு இவ்வாரு யிருக்கின்றபடியால், (உன் காதல் காரணமாக நான் சாகும்படி) நீ என்னைக் கொன்று நான் இறந்து பட்டபின்புதான், நீ என்னைக் கூடுவாயோ? (உன் இரக்கமின்மை யிருந்தவாறு என்னே!)

குழை - காது. குழை சென்று இறங்கி மறம் தரு செங்கண்ணாய் - காது (வரையும்) சென்று பாய்ந்து (கண்ட காளையர் காமுற்றுத் துன்பம் அடையும்படி) கொடுமை செய்கின்ற சிவந்த கண்களை யுடையாளே! (சரு)

46. உலக மொன்ருே டிரண்டோருங் கோம்புமேன்
அலகில் செல்வத் தரசிய லாணையில்
திலக மேயுன் றிறத்தனங் கன்றரும்
கலக மல்ல தெளிமையுங் காண்டியோ

**கொண்டுகூட்டு :** 'திலகமே! ஒன்ருெடு இரண்டு உலகங்களையும் ஒருங்கு ஓம்பும் என் அலகுஇல் செல்வத்து அரசில் இயல்கின்ற ஆணையில், அனங்கன் உன் திறத்துத் தரும் கலகம் அல்லது (வேறு) எளிமையும் காண்டியோ?

* முதலடிக்கு, 'இன்றை வரையிலும் நாள்கள் கழிந்தன; இனியும் அவ்வாறே கழிவதா யிருக்கின்றன' என்பது முந்திய உரை.

பொருள் : 'மூன்று உலகங்களையும் ஒரு சேர முழுதும் அரசாட்சி செய்கின்ற என்னுடைய அளவிலாத ஐசுவரியமுடைய இராசாங்கத்திலே (தடையில்லாமல்) செல்லுகின்ற ஆக்கினை யிலே, (இதுவரை என் எதிர் நிற்கும் வலியில்லாதிருந்த) மன் மதன் உன் அழகு வலியினால் செய்கின்ற போர்க் கலகம் (காரண மாக நான் எளிமைப்படுதல்) அல்லாமல், வேறு எந்த எளிமைப் பாட்டையும் காண்கின்றாயோ?

ஒன்றொடிரண்டு - மூன்று. ஒருங்கு - ஒரு சேர. ஓம்பும் - காவல் செய்யும். அலகு இல் - அளவு இல்லாத. திலகமே - திலகம் போலச் சிறந்தவளே! உன் திறத்து - உன் விஷயத்தில், உன் வலியினால்.

இங்கே, 'சீதையே, "உன்திறத் தனங்கன் தரும் கலகம்"' என்றது போலப் பொழிலிறுத்த படலம் 40-ல் 'சந்திரனே, "சீதை துயக்கினா லென்னைச் சுட்டாய்"' என வருதல் காண்க. (சுசு)

**47.** பூந்தண் வார்குழற் பொற்கொழுந் தேபுகழ்
ஏந்து செல்வ மிகழ்ந்தனை யின்னுயிர்க்
காந்தன் மாண்டிலன் காடு கடந்துபோய்
வாழ்ந்த வாழ்வது மானுடர் வாழ்வன்றோ

கொண்டுகூட்டு : 'பூந்தண் வார்குழல் பொன் கொழுந்தே! (என்) புகழ் ஏந்து செல்வத்தை இகழ்ந்தனை. (உன்) இன் உயிர்க் காந்தன் மாண் டிலன் (ஆய்க்) காடு கடந்துபோய் வாழும் வாழ்வு மானுடர் வாழ்வு அன்றோ!

பொருள் : 'என்னுடைய உயர்ந்த செல்வத்தை (அவ மதித்து வேண்டாமென்று) தள்ளிவிட்டாயே. (அச் செல்வத்தை யாருக்காகத் தள்ளிவிட்டாயோ, அந்த) உனது இனிய பிராண நாயகன் (மிருகங்களாலோ, அரக்கராலோ கொல்லப்பட்டு இறந்து விடுவான்;) இறவாதவனாய் (உயிர் தப்பிப் பிழைத்து, நீண்ட பதி னான்கு வருட வனவாசம் முடிந்து, கடத்தற்கரிய) காட்டைக் கடந்துபோய், (அயோத்தியை அடைந்து முடிசூடி அரசனாகி வாழ்ந்தாலும், அவனோடு நீ) வாழப்போகிற வாழ்வு (கேவலம் அற்பமான) மனித வாழ்வுதானே!

*பூந்தண் வார் குழற் பொற் கொழுந்து - அழகிய குளிர்ந்த நீண்ட கூந்தலையுடைய பொன்னின் கொழுந்து போன்றவளே. ஏந்துதல் - உயர்தல். இகழ்தல் - அவமதித்தல் ; தள்ளுதல்.—சு. அ. காந்தன் - கணவன். 'வாழும் வாழ்' வென்பது செய்யுளாதலால் 'வாழ்ந்த வாழ்' வெனப்பட்டது : காலவழுவமைதி.* (சஎ)

48. நோற்கின் றார்களு நுண்பொரு ணுண்ணிதின்
பார்க்கின் றாரும் பெறும்பயன் பார்த்தியேல்
வார்க்குன் றாமுலை யென்சொன் மவுலியால்
ஏற்கின் றாரொ டுடனுறை யின்பமால்

**கொண்டுகூட்டு :** *'வார் (அணிந்த) குன்று ஆம் முலை! நோற்கின்றாரும் நுண் பொருள் நுண்ணிதின் பாக்கின்றாரும் பெறும் பயனை (நீ) பார்த்தியேல், என் சொல்லை மவுலியால் ஏற்கின்றாரொடு உடன் உறை இன்பம் (அன்றி வேறில்லை).*

பொருள் : *'கச்சு (அணிந்த மலைகள் உளவேல், அந்த) மலைகள் போலும் தனங்களையுடையவளே! (யோகிகளாய்த்) தவஞ்செய்வோரும், (ஞானிகளாய் ஞான நூல்களிற் கூறப்படும்) சூக்குமமான தத்துவப் பொருள்களைக் கூர்மையாக ஆராய்வோரும் அடையும் பலன்களை (நீ கவனஞ்செலுத்திக்) காண்பாயானல், (அந்தப் பலன்கள்) என் கட்டளைகளைத் தலையால் ஏற்றுச் செய்கின்ற (பிரமேந்திராதி தே)வர் (உறையும் உலகங்களில் அவர்)களுடன் வசிக்கும் இன்பமே (யன்றி வேறில்லை யென்று தெரிவாய். நீ இணங்கினல், அப்படிப்பட்ட என் பெருஞ் செல்வத்தை அநுபவிப்பவளாவாய்).*

*நோற்றல் - தவஞ் செய்தல். பார்த்தியேல் - பார்ப்பாயானல். வார் - கச்சு. ஆம் - போலும். வார்க் குன்று, இல்பொரு ளுவமை. மவுலி - முடி ; முடி சூடிய தலையை யுணர்த்தியது.* (சஅ)

49. பொருளும் யாழும் விளரியும் பூவையும்
மருள நாளு மழலை வழங்குவாய்
தெருளு நான்முகன் செய்ததுன் சிந்தையின்
அருளு மின்மருங் குமரி தாக்கியோ

கொண்டுகூட்டு : 'பொருளும், யாழும், விளரியும், பூவையும் மருள நாளும் மழலை வழங்குவாய்! தெருளும் நான்முகன் (உன்னைச்) செய்தது, உன் சிந்தையின் அருளும், (உடம்பின்) மின் மருங்கும் அரிது ஆக்கியோ?

பொருள் : 'பிரமன் உன்னைப் படைத்தது, உன் மனத்தில் இரக்கமும், உடம்பில் இடையும் இல்லையாகச் செய்துதானோ?

பொருள் - பிள்ளை: 'தம்பொருள் என்ப தம்மக்கள்.'—குறள். விளரி - இரங்கினோர் பாடும் பண். —சிலப். பூவை - நாகணவாய்ப் புள். மருள - மயங்க. நாளும் - எப்பொழுதும். மழலை - இளஞ்சொல்; (குழந்தைகளின்) நிரம்பா மென்சொல். தெருளும் - தெளியும். அருள் - இரக்கம். மின் மருங்கு - மின் போலும் இடை. அரிது, இன்மை குறித்தது. முதலிரண் டடிப் பொருள், 'குழந்தைகளின் குரல், யாழின் இசை, விளரிப் பண்ணொலி, நாகணவாய்ப் பறவைத் தொனி ஆகிய இவைகள் மயங்க (இவை யெல்லா வற்றிலும் இனிமையான) குதலைச் சொற்களை(ப் பிள்ளைப் பருவத்திற்போல) எல்லாப் பருவத்திலும் மொழிகின்றவளே!' என்பது.

'மருளும்' என்ற பாடத்துக்கு, 'நாளும் மருளும் மழலை' யென்றாவது, 'மருளும் மழலை நாளும்' என்றாவது கூட்டிப் பொருள் கொள்க.

'உனக்கு இரக்கமில்லை யாதலால், எனக்கு இரங்கி யருள்கின்றாயில்லை. உன்னைப் படைத்தவன் உன் உடம்பில் மற்றெல்லா உறுப்புக்களையும் படைத்து இடையை மட்டும் படைக்க மறந்ததுபோல, உன் மனத்தில் மற் றெல்லா நற்குணங்களையும் படைத்து இரக்கத்தை மட்டும் படைக்க மறந்து விட்டானோ?' என்னும் நயமுடைய பொருள் பின்னிரண்டடியில் அமைந் துள்ளது.

பாட பேதம் : மருளும். (சக)

[ '(காலம் என்னும் அளவுகாரன் சூரியன் என்னும் நாழி யால் அளக்க) ஆயுள் நாள்கள் தினமும் சிறிது சிறிதாகக் கழிந் தொழிந்து போகின்றன. அவை சென்றன சென்றனவன்றி, ஒன்றும் திரும்புவதில்லை. அப்படிப்பட்ட ஆயுள் நாளிலே, இன் பத்தை அநுபவித்தற்குரிய யௌவன பருவத்திலே அநுபவியா மல் எப் பருவத்தில் அநுபவிக்கப்போகின்றாய்? கிழப் பருவத் திலோ? நீ இணங்காயானால், என் உயிர்க்கு இறுதி நேரும். அது நேரினும் நேருக. அதைப் பொருட்படுத்தி அதற்கு வருந்து கின்றேனில்லை. பின் எதற்கு வருந்துகின்றே னெனில், யான் இறந்தபின் உன் இளமையையும் அழகையும் அநுபவிக்கத் தக்கா ரில்லையே யென்று வருந்துகின்றேன். ]

**50.** பெண்மை யும்மழ கும்பிற ழாமனத்
திண்மை யும்முதல் யாவையுஞ் செய்யவாய்க்
கண்மை யும்பொருந் திக்கரு ணைப்படர்
வண்மை யென்கொல் சனகரின் மாண்டவா

**கொண்டுகூட்டு :** '*பெண்மையும் அழகும் பிறழா மனத் திண்மையும் (இவை) முதல் (ஆன) யாவையும் செய்யவாய் (இருக்கவும்), கண்மையும் கருணை பொருந்திப் படர் வண்மையும் சனக (வமிசத்தா)ரில் மாண்ட ஆறு என்கொல் ?*

பொருள் : '*(சனகன் குலத்திற் பிறந்ததற் கேற்ற) பெண் தன்மையும், (அதற்கேற்ற) அழகும், (இவ்விரண்டுக்கும் ஏற்றதாய்) வேறுபடாத மன உறுதிப்பாடும், இவை முதலாக எல்லா நன்மைகளும் செம்மையானவையாக உனக்கு இருக்கவும், தாட்சிணியமும் அருள் பொருந்தி (அதனால்) நிகழும் உதார குணமும் சனக வமிசத்தாரிடத்தில் (இதுவரையும் இருந்தவை இப்போது) ஒழிந்துபோனவாறு யாது காரணமோ?*

*கண், கண்மை, கண்ணோட்டம், தாட்சிணியம், நாகரிகம் என்பன ஒரு பொருள் மொழிகள். கண்ணோட்டம் ' தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை' என்பர் பரிமேலழகர். கருணை, கிருபை, அருள், இரக்கம் என்பனவும் ஒரு பொருள் மொழிகள். பழகினேர் பால் செலுத்தப்படுவது தாட்சிணியம். பழகினருளப்பட இரங்குதற் குரியார் யாவர் மாட்டும் செலுத்தப்படுவது இரக்கம். வண்மை - ஈகை. மாண்டவாறு, மாண்டவா என ஈறு தொக்கு நின்றது.*

*' (எல்லாராலும்) விரும்பத்தக்க தாட்சிணியத்தை(த் தமக்கு உடைமையாக) வேண்டுவோர், (தம்மொடு பழகியவர் தமக்கு உண்ணக் கொடுக்கும் உணவிலே, அவர்) நஞ்சை இட(த் தாம் கண்ணுர)க் கண்டிருந்தும் (அப் பழகியவர் வெறுத்தலுக்குக் காரணமான மறுத்தலைச் செய்யமாட்டாராய், அந்த நஞ்சிடப்பட்ட உணவை) உண்டு, (பின்னும் சாகுமளவும் அவரொடு நட்பாய்ப்) பொருந்தியிருப்ப' ரென்று பொருள்படும்*

> *பெயக் கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க*
> *நாகரிகம் வேண்டு பவர்*

*என்ற குறளில் தாட்சிணிய முதிர்ச்சியின் பயனும், ஒரு புறவின் பொருட்டுத் தன் உடம்பின் மாமிச முழுதும் அரிந்து கொடுத்த சிபிச் சக்கரவர்த்தி*

கதையில் இரக்க முதிர்ச்சியின் பயனும் அறியப்படும். இந்தக் கருத்துக் களை உட்கொண்டு கம்பர், இராவணன் சீதையை நோக்கிப், 'பழகின எனது வேண்டுகோளை மறுக்க மாட்டாத தாட்சிணியங் காரணமாகவாவது, யான் உன் காதலால் இறந்து படுவேனென்று இரங்கும் இரக்கம் காரண மாகவாவது நீ இணங்குகின்றாயில்லை யாதலால், மற்றெல்லா நற்குணங் களோடு தாட்சிணியம் இரக்கமென்ற இவ்விரண்டு குணங்களும் உள்ள சனக வமிசத்தில் அவையெல்லாம் இருப்பவும் இவை யிரண்டுமட்டும் இல்லா தொழிந்து போனதற்குக் காரணம் யாதோ?' என்றா னென்றா ரென்க. (௫௦)

**51.** வீட்டுங் காலத் தலறிய மெய்க்குரல்
கேட்டுங் காண்டற் கிருத்திகோல் கிள்ளைநீ
நாட்டுங் காணெடு நல்லறத் தின்பயன்
ஊட்டுங் காலத் திகழ்வ துறுங்கொலோ

கொண்டுகூட்டு: '*கிள்ளை! (இயமன், உன் காதலால் என்னை) வீட்டும் காலத்து அலறிய மெய்க்குரல் கேட்டு நீ (என் மரண வேதனை) காண்டற்கு இருத்திகொல்? நாட்டும்கால், நெடு நல் அறத்தின் பயனை (விதி) ஊட்டும் காலத்து (அதனை) இகழ்வது உறும்கொலோ?*

பொருள்: '*(யான் திக்குவிசயஞ் செய்தபோது எனக்குத் தோற்ற இயமன், உன் காதல் காரணமாக, என்னை) வதைக்குங் காலத்தில் நான் வருந்தி வாய்விட்டு அலறும் கூக்குரலைக் கேட்டு (என் மரண வேதனையை)ப் பார்ப்பதற்கு இருக்கின்றாயோ? (இல்லையேல், இணங்குவாயன்றே. உண்மையைக் கூறி நிலை)நாட்டு மிடத்தில், (யான் உன் அடிமையாய், என் இராச்சியம் உன்னை அடைவதாகிய) மிகச் சிறந்த புண்ணிய பலனை விதி அநுபவிக் கும்படி செய்யப் புகும்போது அதனை வேண்டா என்று வெறுத் துத் தள்ளுவது தகுமோ?*

*வீட்டல் - கொல்லல். மெய்க் குரல் - (நடிப்பாக வன்றி) உண்மை யாக (வருத்தப்பட்டுக்) கூவும் கூக்குரல். கேட்டும் என்பதில் உம்மை இசைநிறை. நெடுமை, மிகுதி குறித்தது. ஊட்டும் என்பதன் முன் 'விதி' சொல்லெச்சமாக வருவித்துப் பொருள் கூறப்பட்டது, 'கற்றதனாலாய' என்னும் குறளிற் 'கற்றதனால்' என்பதன் முன் 'நூல்' வருவித்துப் பொருள் கூறப்பட்டது போல. உறும் - பொருந்தும். கொல், அசைநிலை. ஓ, வினா இடைச் சொல்: எதிர்மறைப் பொருள் குறித்தது.*

' "நான் உன்னைக் கொணர்தற்கு முன்னமே, உனது கணவனாகிய இராமன் மாண்டுபோனான்; அவன் இறக்கும்போது, "'ஹா ஸீதே! லக்ஷ்மணா!''' என்று கூறியதையும் நீ காதாரக் கேட்டிருக்கின்றாய்; அப்படியிருக்க, அப்பொழுது நீ கேட்ட குரலைப் பொய்க் குரலென்று கருதி, இராமனைக் கூடவேண்டு மென்று கருதுகின்றாயே! இஃது என்ன பேதைமை! உனது நல்விதி என்னை உன்னிடத்துக் கூட்டியிருக்க, அந்த நற்பயனை அவமதித்து நீ என்னை உபேட்சிப்பது தகுதியோ?" என்று இராவணன் கூறினனென்க' என்பது முந்திய உரை. இவ்வுரை இப் படலம் 69-70-ம் பாட்டுக்களில், 'மனிதர் தம்மை அடுகிலேன் அவரை ஈண்டுக் – கூவி நின் றேவல் கொள்வேன்', 'இருவரை ஒருகையாலே பற்றினன் கொணரும் தன்மை காணுதி' என இராம லக்குமணர் உயிரோடிருப்பவராக இராவணன் சீதையை நோக்கிக் கூறும் கூற்றுக்களோடு பொருந்தவில்லை. (ருக)

[ 'நீ இணங்கினால், யான் உயிர் தரித்திருப்பேன்; என் செல்வமும் நிலைத்திருக்கும்; இணங்காயேல், இறப்பேன்; இறக்கவே, என் செல்வம் விரைவில் அழிந்துவிடும். சீதை வந்து இராவணன் செல்வம் ஓங்கி வளர்ந்த தென்னும் புகழைப் போக்கி நீங்கி யழிந்த தென்னும் பழியைக் கொள்வாயோ? ]

**52.** தேவர் தேவியர் சேவடி கைதொழும்
தாவின் மூவுல கின்றனி நாயகம்
மேவு கின்றது நன்கண் விலக்கினை
யாவ ரேழையர் நின்னி னிலங்கிழாய்

கொண்டுகூட்டு: 'இலங்கு இழாய்! தேவர் (அவர்) தேவியர் (உன்) சே அடி கைதொழும் தா இல் மூ உலகின் தனி நாயகம் நன்கண் மேவுகின்றதை விலக்கினை! நின்னின் ஏழையர் யாவர்?'

பொருள்: '(நீ கும்பிடும்) தேவரும் தேவ மாதரும் (உன்னைக்) கும்பிடும்படியான திரிலோகாதிபத்தியம் (அதனை உடைய என்னை ஆட்கொண்டாயானால் உன் னுடைமையாக) உன்னிடம் சேர்வதை (வேண்டாமென்று) விலக்கினாய்! உன்னினும் அறிவீனர் யார் உளர்?'

தேவியர் - தெய்வப் பெண்கள்; (தேவர்) மனைவிய ரென்றலுமாம். சே - சிவப்பு: சே அடி - சிவந்த பாதம். கைதொழல், ஒரு சொல்; கை கூப்பி வணங்கல் என்னும் பொருட்டு. 'தா' என்பது இங்கே குற்றம், கேடு,

பகை என்னும் பொருள்களை உணர்த்திநின்றது. தனிநாயகம் - (வேறொரு வருக்கும் பொதுவாக வன்றித்) தனியாக ஆளும் தலைமை. நுன்கண் - உன் னிடத்தில். ஏழையர் - அறிவிலார். இலங்கு இழை - விளங்கும் ஆபரணம் (உடையவள்). இழை, விளியால் இழாயென வாயிற்று.

பாட பேதம் : கைதொழத்: ஏவ ரேழையர். (டூஉ)

**53.** குடிமை மூன்றுல குஞ்செயுங் கொற்றத்தென்
அடிமை கோடி யருளுதி யாலென
முடியின் மீது முகிழ்த்துயர் கையினன்
படியின் மேல்விழுந் தான்பழி பார்க்கலான்

கொண்டுகூட்டு: பழி பார்க்கலான் (ஆய், இராவணன்), 'மூன்று உலகும் குடிமை செய்யும் கொற்றத்து என் அடிமை கோடி அருளுதி!' என முடியின்மீது முகிழ்த்து உயர் கையினனாய்ப் படியின்மேல் விழுந்தான்.

பொருள்: (பிறர் மனைவியரை விரும்புதலும் பெண்கள் காலில் விழுதலும்) பழி யென்று பாராதவனாய், (இராவணன்), 'மூன்றுலகத்தாரும் (எனக்குத் தாழ்ந்துநின்று ஏவல் கேட்கும்) குடிகளாகச் செய்த வெற்றியையுடைய என்னை அடிமையாகக் கொண்டருள்வாயாக!' என்று தலைமீது (கும்பிட்டுக்) குவிந்து உயர்ந்த கையினனாய்த் தரைமேல் (சாட்டாங்கமாக) விழுந்து

குடிமை - குடி: மை, பகுதிப் பொருள் விகுதி. கொள்வாய் என் னும் பொருள் உள்ள கொள்தி, கோடி யென விகாரமாயிற்று. அருளுதி - அருள்வாய். ஆல், அசை. என - என்று. முகிழ்த்தல் - குவிதல். படி - பூமி.

பாட பேதம் : படியின் மேற்படிந் தான்பழி பார்க்கிலான். (டூங)

### சீதை இராவணனைக் கடிந்து கூறல்

[ இராவணன் சொன்ன வசனங்கள் பழுக்கக் காய்ச்சிய இரும்பு நாராசங்கள் போலச் சீதாதேவி செவியுட் சென்று தீக்க, அவள் கடுங் கோபங்கொண்டு, அவனைத் துரும்பாக மதித்து, அவனை நோக்காமல், அவன் முன் கிடந்த ஒரு துரும்பை அவனாக முன்னிலைப்படுத்தித், தான் கூறும் வார்த்தைகளால் தன் உயிர்க்கு ஆபத்து நேரு மென்பதைப் பொருட்படுத்தாளாய்க் கூறுத லுற்றாள் :

'நீ சொன்ன சொற்கள் கற்புடைய மாதர்பாற் கூறத் தகாதன. யான் கூறும் கடுமொழிகள் இற்பிறந்த மாதருக் கேற்றவை யல்ல, ஆயினும் உன் மனம் மாறுபடும்பொருட்டு அவைகளைக் கூறக் கடவேனாய்க் கூறுகின்றேன்; கேள். மேரு மலையை ஊடுருவவேண்டு மென்றாலும், விண்ணைப் பிளந்து மேற்செல்லவேண்டு மென்றாலும், உலகங்க ளனைத்தையும் ஒரு மிக்க ஒழிக்கவேண்டு மென்றாலும் இராமனுடைய அம்புகள் எளிதிலே செய்யவல்லன. நீ இதனை அறிந்திருந்தும், அறிவில்லா யாதலால், தகாத வார்த்தைகள் சாற்றித் தலைகள் பத்தும் தகர்படக் கடவையாளுய். ]

54. அஞ்சினை யாத லானன் றாரிய னற்ற நோக்கி
வஞ்சனை மானொன் றேவி மாயையான் மறைத்து வந்தாய்
உய்ஞ்சனை போதி யாயின் விடுதியுன் குலத்துக் கெல்லாம்
நஞ்சினை யெதிர்ந்த போது நோக்குமே நினது நாட்டம்

கொண்டுகூட்டு: '(இராமனை நீ) அஞ்சினை ஆதலான், அன்று, வஞ்சனை மான் ஒன்றை ஏவி (விட்டு), ஆரியன் அற்றம் நோக்கி மாயையால் மறைத்து வந்தாய். உய்ந்தனை போதி ஆயின் விடுதி. உன் குலத்துக்கு எல்லாம் நஞ்சினை [- இராமனைப் (போரில்)] எதிர்ந்தபோது (அவனை) நினது நாட்டம் நோக்குமே!

பொருள்: '(நீ இராமனை எதிர்தற்கு) அஞ்சினை யாதலால், ஒரு மாய மானை (அவன் எதிரே செல்ல) ஏவிவிட்டு, (அதனைத் தொடர்ந்து அவன் சென்றாகை,) அவன் இல்லாத சமயம் பார்த்து உன் மாயை வித்தையால் (நீ யாரும் நம்பும் சந்நியாசியாகி அந்த மாறுவேடத்துள்ளே) மறைந்து (என்னை வஞ்சித்துக் கவர) வந்தாய். (இப்போதாயினும் உனக்கு நற்புத்தி தோன்றி நீ) பிழைத்துப் போவாயானால், (என்னை நாடும் இந்தத் தீய எண்ணத்தை) விட்டுவிடு. உன் குலத்தா ரெல்லாருக்கும் (மரண முண்டு பண்ணும்) நஞ்சுபோன்ற இராமனைப் போரில் எதிர்ந்த போது (நீ அவனை எதிர்த்துப் போர் செய்வது கிடக்க, பயத்தால் அவனை) உன் கண்கள் பார்க்கவேமாட்டா!

அஞ்சினை - பயந்தாய். ஆரியன் - பூசித்தற் குரியவன்; இராமனைக் குறித்தது. 'அற்றம் - இல்லாமற் போகு சமயம். (உ-ம்.) "அருந்தவன்

*தந்தையை அற்றம் நோக்கியே". இராமா. திருவவதார. 41.' வஞ்சனை - மாயை.—பிங்கல. உய்ஞ்சனை, உய்ந்தனை யென்பதன் மரூஉ. உய்ஞ்சனை, உய்ந்து (-பிழைத்து) என்ற பொருள்பட நிற்றலால் முற்றெச்சம். போதி - போவாய். விடுதி - விடுவாய். நோக்குமே யென்பதில் ஏகாரம் எதிர்மறை.*

*'விடுதி' யென்பதற்கு, '(என்னை இராமபிரானிடத்திற் கொண்டு போய்) விட்டிடு' என்றும், 'நஞ்சினை எதிர்ந்தபோது நோக்குமே நினது நாட்டம்' என்பதற்கு, 'உனது குலம் முழுதுக்கும் நஞ்சுபோன்ற என்னை எதிரில் வந்தபோது உனது கண்கொண்டு கூசாது பார்க்கக் கடவையோ? ......என்னை நேர் நின்று பார்த்தால் உன் குலத்துக்கே நாசம் விளையும்' என்றும் உரைகள் உள்ளன.* (௫௪)

[ *'கிழப் பறவையாகிய சடாயுவின் தாக்குதலையே தாங்க மாட்டாமல் சாய்ந்து தரையில் விழுந்த நீ, இராமனை யெதிர்த்துப் போர்செய்யும் தரமுடையையோ! உனது பத்துத் தலைகளும் இருபது தோள்களும் உயிரற்ற சித்திரத்திலுள்ளவை போலச் செயலற்றவைகளாய், அவன் அலட்சியமாக விளையாட்டாக எய்தற்கேற்ற குறியா மன்றிப், போரிலே பொருட்படுத்தி எய்தற்குத் தகுதியான இலக்காகா.* ]

**55.** தோற்றனை பறவைக் கன்று துள்ளுநீர் வெள்ளஞ் சென்னி
ஏற்றவன் வாளால் வென்று யன்றேனி னிறத்தி யன்றே
நோற்றநோன் புடைய வாணுள் வரமிவை நுனித்த வெல்லாம்
கூற்றினுக் கன்றே வீரன் சரத்திற்குங் குறித்த துண்டோ

**கொண்டுகூட்டு:** *'அன்று பறவைக்குத் தோற்றனை. துள்ளும் நீர் வெள்ளம் சென்னி ஏற்றவன் (- சிவன்) வாளால் (அப் பறவையை) வென்றாய்; அன்று எனின் அன்றே இறத்தி. (நீ) நோற்ற நோன்பும், (அதனால் பெற்று) உடைய வாழ்நாள் வரமும், இவை (போலப் பலவுமுடையனவாக நீ) நுனித்த எல்லாமும் (அழிக்கான் எனக்,) கூற்றினுக்கு(க் குறித்த வரம்பு) அன்றே? வீரன் சரத்திற்கும் (வரம்பு) குறித்தது உண்டோ?*

பொருள்: ' *(நீ சடாயு தாக்குதலால் மூர்ச்சித்து வீழ்ந்த) அக்காலத்தில் அந்தப் பறவை(யரசனு)க்குத் தோற்றுப்போனாய். (தேகபலத்தாற் செயிக்க முடியாத அவனை வரபலத்தால் வெல்லச் சூழ்ச்சி செய்து நீ சிவன்பால் வரமாகப் பெற்ற சந்திரகாசமென்னும்) வாளால் (அவனை வெட்டிக் கொன்று) வெற்றியுற்றாய்; இல்லையானால் அப்போது இறந்திருப்பாய். நீ செய்த தவமும், (அதனால்*

நீ பெற்று) உடைய (மூன்றரைக் கோடி) ஆயுள் நாளும், ஆகிய இவைகளும் (இவைகள் போல உனக்குப் பலமானவைகளாக நீ) கூர்ந்தாராய்ந்து கொள்ளப்பட்டிருப்பவை யாவும் (இவைகளின் எல்லை நாள் முடியுமுன் இவைகளைக் காலன் அழிக்காதிருக்கக் கடவனெனக்) காலனுக்கு(க் குறித்த வரம்புகள்) அல்லவா? இராம பாணத்துக்கும் (இன்ன காலத்தில்தான் அழிக்கலாமென ஒரு வரம்பு) குறிக்கப்பட்டதுண்டோ? *

துள்ளும் நீர் வெள்ளம் - குதித்துப் பாயும் (கங்கை) நீர்ப் பெருக்கு. அன்றெனின் - இல்லையானால். அன்று, ஏ அசைகள். 'அன்றே' என்ற தொடர் 'அல்லவா' என்று பொருள்கொள்ளும்படியும் நிற்கின்றது. நோற்றல் - தவஞ்செய்தல்; நோன்பு - தவம். நுனித்தல் - கூர்ந்தாராய்தல். —மணிமேகலை.

அரசனுக்குக் கீழ் உள்ள அதிகாரிகளின் கட்டளைகள் அவர்களுக்குக் கீழ்ப்பட்ட அதிகாரிகளைக் கட்டுப்படுத்துவன வன்றி அரசனைக் கட்டுப் படுத்தா. அவ்வாறே (இப் படலம் 49-ம் பாட்டில்),

> 'செங்கண்மால் நான்முகன் சிவனென் றேகொலோ
> எங்கள் நாயகனையும் நினைந்தது ?...'

எனச் சீதை கூறப்பெற்ற இராமனுக்குக் கீழான பிரமன் முதலியோர் அளித்த வரங்கள் இராமன் சரந் தொடுக்கும் வரையே நிலைப்பன வென்பது கருத்து. இக் கருத்து இதற்கடுத்த பாட்டில்,

> '.................. மலரயன் முதலோர் வார்த்தை
> விற்றொடை யிராமன் கோத்து விடுதலும் விலக்குண் டெல்லாம்
> இற்றுடைந் திறுதன் மெய்யே விளக்கின்முன் னிருளுண் டாமோ?'

என்று அநுவதிக்கப்பட்டிருத்தல் காண்க. (ருரு)

பெற்றுடை வாளு நாளும் பிறந்துடை யுரனும் பின்னும்
மற்றுடை யேவையுந் தந்த மலரயன் முதலோர் வார்த்தை
விற்றொடை யிராமன் கோத்து விடுதலும் விலக்குண் டெல்லாம்
இற்றுடைந் திறுதன் மெய்யே விளக்கின்முன் னிருளுண் டாமோ

* இப்பாட்டின் பின் இரண்டடிகளுக்கும் முந்திய உரை வருமாறு: 'செய்த தவத்தின் பயனாக (உனக்குக்) கிடைத்த (கோடிக்கணக்கான) ஆயுள் நாளும், பின்னும் வரபலங்களும் (ஆகிய) குறித்துக் கூறிய இவை யாவும் யமதேவனால் உனக்கு ஒரு துன்பமும் நேரிடாமலிருத்தற்கு அல்லவோ? (அந்த உனது வரங்கள் முழுதும்) இராமபிரானது அம்புகளாலும் யாதொரு தீங்கும் நேராமலிருப்பதைக் குறிப்பன வாகுமோ?' — வை. மு. கோ.

கொண்டுகூட்டு : '(நீ) பெற்று உடைய வாளும் நாளும், பிறந்து உடைய உரனும், மற்றுப் பின்னும் உடைய எவையும் (உனக்கு) மலர் அயன் முதலோர் தந்த வார்த்தை எல்லாம் இராமன் வில் தொடை கோத்து விடுதலும் விலக்குண்டு இற்று இடைந்து இறுதல் மெய்யே: விளக்கின் முன் இருள் உண்டாமோ ?

பொருள் : '(நீ சிவனிடம்) பெற்றுடைய சந்திர வாளும், மூன்றரைக் கோடி ஆண்டு அளவான ஆயுள் நாளும், (உன்னோடு கருவில் உதித்து நீ பிறக்கும்போது உன்னோடு கூடப்) பிறந்து உனக்கு உடையதான அபூர்வ தேக பலமும், (ஆகிய இவைகளும், இவைகள்) அல்லாமல் (இவைகளினின்றும்) வேறாக (நீ தவத்தால் பெற்று) உடைய பேறுகள் யாவையும் (உனக்குப் பரமன்) பிரமன் முதலோர் அருளிய வார்த்தையான வரங்கள் இராமன் வில்லில் அம்பைத் தொடுத்துவிட்டவுடனே (அவைகளுக் கேற்படுத்தப்பட்ட முடிவு காலம்) மாற்றப்பட்டுக் கெட்டு அழிந்து ஒழிந்துவிடுதல் நிச்சயமாகச் சத்தியம்: விளக்குக் கெதிரே இருள் நிற்குமோ? (நின்றால், இராமன் அம்பின்முன் மேற்கூறிய வரங்கள் முதலியவைகள் அழிவுறாமல் நிற்கும்).

பெற்றுஉடை, பிறந்துஉடை, மற்றுடை என்பவைகளில் 'உடைய', 'உடை' என ஈறுதொக்கு நின்றது. உரம் என்பதன் விகாரமாகிய உரன், பெலம் என்னும் பொருட்டு. பின்னும் - அன்றியும். பின்னும், இன்னும், அன்றியும், அல்லதூஉம், மற்றும், வேறும் என்பவை ஒருபொருட் பன்மொழிகள் : (காஞ்சிப் புராணம், வீராட்டகாசப் படலம் ௩௪, ௩௬-ம் பாட்டுக்களைப் பார்க்க). மலர் அயன் - தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன். வார்த்தை, வார்த்தையால் வழங்கிய வரங்களைக் குறிக்கும். 'மலர் அயன் முதலோர் வார்த்தை(யால்) தந்த எல்லாம்' என்று கூட்டிப் பொருள் கூறலாம். இது கடுங் கொண்டுகூட்டு. தொடை - அம்பு. வில் தொடை கோத்து - வில்லில் அம்பைத் தொடுத்து. விலக்குதல் - மாற்றுதல். — பிங்கல. உடைதல் - அழிதல்; தகர்தல். இறுதல் - கெடுதல்; அறுதல்; முடிதல். இற்று, உடைந்து, இறுதல் என்ற ஒத்த பொருளுடைய சொற்களின் தொகுதி அழிதலை வற்புறுத்தியதாம்.

இதன்பின் 60-ம் பாட்டில் இராவணனை நோக்கிச்,

> 'செங்கண்மால் நான்முகன் சிவனென் றேகொலோ
> எங்கள்நா யகனையும் நினைந்த தேழைநீ?'

என்று இராமன் மும்மூர்த்திகளுக்கு மேலானவ னென்பாள், (கீழதிகாரிகள் தீர்ப்புக்களை மேலதிகாரிகள் மாற்றவல்லரா யிருத்தல் போல,)

*பிரமன் முதலியோர் வரங்களை இராமன் மாற்றவல்லனா யிருத்தலால், 'அயன் முதலோர் வார்த்தை விற்றொடை இராமன் கோத்து விடுதலும் விலக்குண் டெல்லாம், இற்றுடைந் திறுதல் மெய்யே' என்றாள்.*

பாட பேதம் : *பெற்றுடை வரனும் : இற்றிடைந் திறுதல்.* (௫௬)

**57.** குன்றுநீ யெடுத்த நாடன் சேவடிக் கொழுந்தா லுன்னை
வென்றவன் புரங்கள் வேவத் தனிச்சரம் துரந்த மேரு
என்றுணைக் கணவ னாற்றற் குரனிலா திற்று வீழ்ந்த
அன்றெழுந் துயர்ந்த வோசை கேட்டிலை போலு மம்மா

கொண்டுகூட்டு : *'நீ குன்று எடுத்த நாள், தன் சே அடிக் கொழுந்தால் உன்னை வென்றவன், புரங்கள் வேவத், தனிச் சரம் துரந்த மேரு(ஆகிய வில்), என் துணைக் கணவன் ஆற்றற்கு உரன் இலாது இற்று வீழ்ந்த அன்று எழுந்து உயர்ந்த ஓசை கேட்டிலை போலும்! அம்மா!*

பொருள் : *'நீ கயிலாய மலையை (வேரோடு பேர்த்து) எடுத்த காலத்தில், தனது காற் பெருவிரலினால் உன்னை அழுத்தி வென்ற சிவன், திரிபுரங்கள் எரிந்துபோம்படி, அம்பு தொடுத்து விட்ட மேரு மலையாகிய வில், என் உயிர்த் துணையான என் நாயகனது வலிமைக்கு (எதிராகத் தாங்கும்) வலிமையில்லாமல் ஒடிந்து விழுந்த தற்சமயத்தில் உண்டாகிய (உலகமெல்லாம் கேட்ட) பேரொலியை நீ (மாத்திரம்) கேட்கவில்லை போலும்!*

*நாள - காலம். சே அடி - சிவந்த பாதம். துரந்த - செலுத்திய. தனி சரம் - ஒப்பில்லாத அம்பு. துணை - ஆதரவு; உயிர்த்துணை, உற்ற துணை யெனக் கொள்ள நின்றது. ஆற்றல் - வலிமை. உரன் - வலிமை: உரம், உரன் என விகாரப்பட்டு நின்றது. இற்று - ஒடிந்து. கேட்டிலை - கேட்டாயில்லை. போலும், அம்மா அசைச் சொற்கள்: போலும், ஒப்பில் போலி; அம்மா, அதிசயக்குறிப்பு எனலுமாம்.*

*'திரிபுர சங்கார காலத்தில் மேருமலை சிவபெருமானுக்கு வில்லாக அமைந்ததனால், சீதா விவாக காலத்தில் கந்யாசுல்கமாக ஏற்பட்ட சிவ தநுசையும் அபேதமாக அம் மேருவாகவே கூறினாள்.'* *

*'அற்பமான ஒரு புழுவை நசுக்குதல் போல, ஒரு விரலால் உன்னை நசுக்கிய பரமசிவனுடைய பாரமான வில் என் நாயகன் வளைக்கப் பொறுக்காமல், ஒடிந்தபோது உண்டாகிய உரத்த ஓசை, உலகமெங்கும் ஒலித்தது.*

* *வை. மு. கோ.*

நீயும் கேட்டிருப்பாய். அவன் ஆற்றல் எங்கே! உன் ஆற்றல் எங்கே! அப்படியிருக்கவும், இப்போது உன் வீரத்தை நீயே மெச்சிய நெடுமொழியை நோக்கினால் அந்தப் பேரொலி உன் காதுக்குமட்டும் எட்டவில்லை போலும்!' என்பது கருத்து.

இப் பாட்டில் 'சேவடிக் கொழுந்து' என்ற அருமையான பிரயோகம் ஆராயத்தக்கது. கால் விரலை ஆனந்தபரவச மடையும்படி புலப்படுத்து கின்ற, கம்பசிருட்டியாகிய, 'சேவடிக் கொழுந்து' என்ற, யாம் முன்னூல் களுள் எந் நூலுள்ளும் கண்டிராத, புத்தம்புதிய, நனியினிய சொற்றொடர், கம்பரது அரிய பாவனை வன்மையையும் இன்சொற் றொடுக்கும் திறத்தை யும் ஏக காலத்தில் இனிது விளக்குகின்றது. 'குன்று' என்று ஆரம்பித்த அடிக்கு மோனை அமைக்க முயன்ற முயற்சியின் பயனாக, இந்த விழுமிய தொடர்மொழி, கம்பர் கருத்தில் உதித்த தென்பது, இதன் இறுதிச் சொ லாகிய 'கொழுந்து' மோனைத் தானத்தில் நிற்றலால் விளங்குகின்றது. கொழுந்து, கொம்பு கொடிகளின் முடிவில் தோன்றும் இளந் தளிர். அது போலப் பாதத்தின் முடிவில் விரல் இருத்தலைப் பாவனையிற்கொண்டு செந்தீ யொத்த சிவந்த திருமேனியுடைய சிவபரஞ்சோதியின் சிவந்த பாதத்தின் முடிவில் செந்தீக் கொழுந்து போலத் திகழும் செவ் விரலைச் சீதை 'சேவடிக் கொழுந்து' எனச் செப்பினா ளென்ற நயம் பாராட்டற்பாலது. வேத முடி வில் உள்ளவ னென்பது குறிக்கும் 'மறைக் கொழுந்து' என்ற பெயர், சிவ நாமங்களுள் ஒன்றாயிருத்தல், இங்கே நினைவுகூரத்தக்கது. (ருஎ)

**58.** மலையெடுத் தெண்டிசை காக்கு மாக்களை
நிலைகெடுத் தேனெனு மாற்ற நேருநீ
சிலையெடுத் திளையவ னிற்கச் சேர்ந்திலை
தலையெடுத் தின்னமு மகளிற் றாழ்தியோ

**கொண்டுகூட்டு :** ' "மலை எடுத்து எண் திசை காக்கும் மாக்களை நிலை கெடுத்தேன்!" என்னும் மாற்றம் நேரும் நீ, இளையவன் சிலை எடுத்து நிற்கச் சேர்ந்திலை. (நீ) இன்னமும் தலை எடுத்து மகளின் தாழ்தியோ?

**பொருள் :** ' "கயிலாய மலையைப் பேர்த்து எடுத்தேன், அஃதல்லாது இந்திரன் முதலிய அட்டதிக்குப் பாலகரை நிலை கெடச் செய்தேன்!" என்னும் வீர வார்த்தைகளை (இறுமாப்போடு ஆடம்பரமாக) வழங்குகின்ற நீ, இலக்குமணன் வில்லேந்தி (என்னைக் காத்து) நிற்க, (யான் இருந்தபோது, என்னைக் கவர) வந்தா யில்லை; (ஆண்மையின்றிப் பேடிபோல வஞ்சனை செய்து என்னைக் கவர்ந்தாய். இவ்வாறாக இழிவடைந்த) நீ, இன்னமும் (வீரன்

போலத் தலை நிமிர்த்துவாயானால், அதிக இழிவடைவா யென் பதை யறியாமல்) தலை நிமிர்த்து (ஆண்மகனான நீ) பெண்மகளி னும் (கேவலமாகத்) தாழ்வாயோ ?

*மாற்றம் - வார்த்தை. நேர்தல் - தருதல். சிலை - வில். மகளின் தாழ்தியோ - பெண்ணினும் கீழாவாயோ. 'எண்திசை காக்கும் மாக்களை' என்பதற்கு அஷ்ட திக்கஜங்களை என்றும் பொருள் கூறுவர்.*

*'தலையெடுத்து' என்ற வினையெச்சத்தைத் 'தாழ்தியோ' என்ற வினை முற்றைக்கொண்டு முடிவதாகக்கொண்டு மேற்படி உரை கூறப்பட்டது. அவ் வாறு கொள்ளாமல், அந்த வினையெச்சம் 'சேர்ந்திலை' யென்ற வினை முற்றைக் கொண்டு முடிவதாகக் கொண்டால், 'தலையெடுத்துச் சேர்ந்திலை' யென மாற்றிக்கொண்டு, 'இலக்குமணனை யெதிர்க்கத் தலை நிமிர்த்து வந்தா யில்லை; (அதனால் ஆண்மை யிழந்து பெண் போன்றாய்,) இன்னமும் (அதிக இழிவாக நடந்து) பெண்களினும் கீழாவாயோ?' என்று பொருள் கூறலாம்.*

*'மகளிர்த் தாழ்தியோ' என்ற பாடம் கொண்டார், 'பெண்கள் காலி னும் வீழக்கடவாயோ?' என்று பொருள் கூறினார். **

**பாட பேதம் :** *மகளிர்த் தாழ்தியோ.*　　(ருஅ)

**59.** ஏழைநின் னொளித்துறை யின்ன தாமென
வாழியெங் கோமக னறிய வந்தநாள்
ஆழியு மிலங்கையு மழியத் தாழுமோ
ஊழியுந் திரியுமுன் னுயிரோ டோயுமோ

**கொண்டுகூட்டு :** *'ஏழை ! நின் ஒளித்த உறை(யுள்) இன்னது ஆம் என எம் கோமகன் அறியவந்த நாள், (அவன் கோபம்) இலங்கையும் ஆழியும் அழியத் தாழுமோ ? உன் உயிரொடு ஓயுமோ ? ஊழியும் திரியும்.*

பொருள் : *'அறிவில்லாய் ! (நீ ஒளித்துக்கொண்டிருக்கும்) மறைவிடம் இதுவாமென்று எங்கள் கோமான் (ஆன இராமன்) தெரியவந்த காலத்தில் (உன்னை அழித்தற்கு உண்டாகும் அவன் கோபம், உனக்கு அரணான இந்த) இலங்கையும் (இதற்கு அரணாக இதனைச் சூழ்ந்துள்ள) கடலும் அழிய(ச் செய்து, அம்மட்டோடு) தணியுமோ ? (தணியாது; இலங்கையையும் இலங்கையை வளைந்த கடலையும் அழிப்பது உன்னை அழித்தற் பொருட்டாதலால் அவை களை அழித்துப், பின்பு உன்னை அழித்து,) உன் உயிர் போனதோடு*

---

* வை. மு. கோ.

(ஆயினும்) தீருமோ? (தீராது: அக் கோபத்தால்) ஊழியே மாறுத லுற்று (உலக முழுதுமே முடிந்து)விடும்.

ஏழை - அறிவிலான். ஒளித்துறை - ஒளிந்து உறையும் இடம் - மறை விடம். வாழி, அசை. — சிந்தர். கோமகன் - தலைவன். ஆழி - கடல். தாழ்தல் - தணிதல். ஊழி - உக முடிவு காலம். திரிதல் - மாறுதல். தாழும், ஓயும் என்ற வினைமுற்றுக்களுக்கு இராமன் கோபம் தோன்றா எழுவாய். அதுவே அடுத்த பாட்டில் வீயும் என்ற வினைமுற்றுக்கும் எழுவாய்.

'ஊழியும் திரியும்' என்றது, 'நெடுங்காலம் கழித்து வரற்பாலதாகிய ஊழி (தான் வரவேண்டிய காலம்) மாறி (முன்னதாகவே வந்து)விடும்; வந்துவிடவே, இலங்கையும் இலங்கை சூழ்ந்த கடலு மல்லாத ஏனைய நிலங் களும் கடல்களும் உள்பட உலக முழுவதும் அக் கோபத்தால் அழிந்துவிடு' மென்றபடி. இப் பாட்டில் இக் கருத்து இருப்பது இதற்கடுத்த பாட்டி னால் விளங்குதல் காண்க. *

பாட பேதம்: ஒளித்துறை இன்னிடத்தென: அறிந்து வந்த நாள்: ஊழியுந் தீயும். (டுகூ)

60. வெஞ்சின வரக்கரை விளித்து வீயுமோ
வஞ்சனை நீசெய வள்ளல் சீற்றத்தால்
எஞ்சலி லுலகெலா மெஞ்சு மெஞ்சுமென்
றஞ்சுகின் றேனிதற் கறனுஞ் சான்றரோ

கொண்டுகூட்டு: '(அவ் வெகுளி) வெம் சினம் (உடைய) அரக்கரை விளித்து வீயுமோ? நீ வஞ்சனை செய்ய வள்ளல் சீற்றத்தால் எஞ்சல் இல் உலகு எலாம் எஞ்சும்! எஞ்சும்! என்று அஞ்சுகின்றேன். இதற்கு அறனும் சான்று.

பொருள்: '(அந்தக் கோபம், உன்னைக் கொல்வதனோடு தீராமல் உன்னைச் சார்ந்த) இராக்கதரைக் கொன்று அம்மட் டோடு தீருமோ? (தீராது.) நீ ஒருத்தன் வஞ்சனை செய்துவிட (- கபடஞ் செய்து என்னைத் திருடிவிட,) அதனால் உண்டாகிய இராமபிரான் கோபத்தால் (இப்போது) குறைவில்லாதிருக்கின்ற உலகம் முழுதும் அழிந்துவிடுமே யென்று அஞ்சுகின்றேன்!

* 'ஊழியும் தீயும்' என்ற பாடங்கொண்டு மூன்றாமடிக்கு 'ஊழிக்காலத் துத் தோன்றுகின்ற காலாக்கினியையும் தீந்துபோம்படிச் செய்ய வல்ல, (மிக்க பராக்கிரமமுள்ள) உனது உயிரையும் வாங்கித்தான் அடங்குமோ?' என்பது முந்திய உரை.

*யான் இவ்வாறு அஞ்சுதல் உண்மை யென்பதற்கு (என் நெஞ்சன்றி)த் தருமதேவதையும் சாட்சியாகும்.*

*வெம் சினம் அரக்கர் - கொடிய கோபத்தையுடைய இராக்கதர். விளித்து - கொன்று. வீயும் - நீங்கும்; 'வீநீக்கம் பூப்புள்சாவாம்'. எஞ்சல் - குறைதல். எஞ்சும் - இறக்கும் - அழியும். எஞ்சும் எஞ்சும் என்ற அடுக்கு அழிவது திண்ணமெனத் துணிவு குறித்தது. அறன் என்றது அறக்கடவுளை. சான்று - சாட்சி. அரோ, ஈற்றசை.* (௬௦)

**61.** அங்கண்மா ஞாலமும் விசும்பு மஞ்சவாழ்
வெங்கணாய் புன்றொழில் விலக்க மேற்கொளாய்
செங்கண்மா லான்முகன் சிவனென் றேகொலோ
எங்கணா யகனையு நினைந்த தேழைநீ

கொண்டுகூட்டு: *'அம்கண் மாஞாலமும் விசும்பும் அஞ்ச வாழ் வெங்கணாய்! புன் தொழிலை விலக்க மேற்கொளாய். செங்கண் மால், நான்முகன், சிவன் என்றேகொலோ எங்கள் நாயகனையும் நினைந்தது! நீ ஏழை.'*

பொருள்: *'மண்ணுலகிலுள்ளோரும் விண்ணுலகிலுள்ளோரும் அஞ்சும்படி(யாக அவர்களுக்குத் துன்பம் செய்து கொண்டு) வாழ்கின்ற கொடியோனே! (நீ செய்கின்ற) இழி தொழிலை நீக்குதலைத் தொடங்குகின்றாயில்லை. (உன் அக்கிரமங்களை அடக்க இயலாமலிருக்கின்ற) திருமால், பிரமன், சிவன் (போன்ற சாமானியன்) என்றோ எங்கள் தலைவனான இராமனையும் எண்ணினாய்! நீ அறிவில்லாதவன் (ஆதலால் அவ்வாறு எண்ணினாய். திரிமூர்த்திகளுக்கும் மேலானவன் இராமனென்று தெரிந்து கொள்வாயாக).*

*அம் கண் மாஞாலம் - அழகிய இடமுடைய பெரிய பூமி. விசும்பு - விண்; விண்ணுலகத்தைக் குறித்தது. ஞாலமும் விசும்பும் ஆகுபெயராய் அவ்விடங்களில் வாழ்வாரை உணர்த்தின. வெங்கண் - கொடுமை. புன்மை - ஈனம். புன்தொழில் - ஈனமான செய்கை. மேற்கொள்ளல் - தலைப்படல் - தொடங்கல். மேற்கொளாய் என்பதற்கு மேற்கொள்வாயாக வென்றும் மேற்கொள்கின்றாயில்லை யென்றும் பொருள் கூறலாம்.*

*இராமன், பரம்பொருளின் கூறுகள் சிலவே யுடைய முத்தேவர்போலன்றி, அவர்களிடத்துள்ள கூறுக ளனைத்தும் ஒருசேர உள்ளவன் என்பது பின்னிரண்டடிக் கருத்து. இராமனுக்கு மும்மூர்த்திகளும் 'அளவி*

ஒப்பாவரே யன்றி.........தனித்தனி கிடைப்ப ரோதுணை '* என வருதல் காண்க. (சுக)

**62.** இருவரென் றிகழ்ந்தனை யென்னின் யாண்டெல்லை
ஒருவனன் றேயுல கழிக்கு மூழியான்
செருவருங் காலையென் மெய்ம்மை தேர்தியால்
பொருவருந் திருவிழந் தநாயம் பொன்றுவாய்

கொண்டுகூட்டு : 'இருவர் என்று இகழ்ந்தனை என்னின், உலகை யாண்டு எல்லையில் அழிக்கும் ஊழியான் ஒருவன் அன்றே? செரு வரும் காலை என் மெய்ம்மை தேர்தி. (அப்பொழுது) பொரு அரும் திரு இழந்து அநாயமாகப் பொன்றுவாய்.

பொருள் : '("யானோ அளவற்ற படைத்துணை யுடையேன். இராமனுக்குத் துணை இலக்குமணன் ஒருத்தனே. ஆக, இவர்கள்) இருவர்தானே !" யென்று அலட்சியஞ் செய்வாயானால், (யான் சொல்வதைக் கேள்; பிரமன் முதலிய தேவர்கள் அளவற்றோ ருடன் கூடிய) உலகத்தை உக முடிவில் சங்காரஞ்செய்யும் ஊழி முதல்வன் ஒருவனேயன்றோ? இனிப் போர் நிகழும்போது நான் உண்மையே உரைத்தே னென்பதை நீ தெளிவாகத் தெரிவாய். (போரில் தோல்வியடைந்து உனது) ஒப்பில்லாத செல்வத்தை யிழந்து போவதல்லாமல், அருமையான உயிரையும் அநியாயமாக இழந்துவிடுவாய்.

யாண்டு எல்லை - ஆண்டுகளின் எல்லை - (யுகங்களின்) ஆண்டுகளின் (முடிவாகிய) எல்லை - யுகாந்த காலம். ஊழி - யுகமுடிவு. ஊழியான் - ஊழி(யில் நிகழும் சர்வசங்காரத்து)க்கு உரியவன் - சங்கார கர்த்தா - சங்கரன். பொரு அரும் - ஒப்பில்லாத. திரு - செல்வம். அநாயமாக என்பது அநா யம் எனச் சுருக்கிக் கூறப்பட்டது. நாயம் அநாயம் என்பவை நியாயம் அநியாயம் என்பவற்றின் மரூஉ. பொன்றுதல் - சாதல்.

இங்கே 'அநியாயமாகச் சாவாய்' என்றது, 'நெறி வழுவாதிருந்தால் நெடுங் காலம் வாழ்வதற்குரிய நீ நெறி வழுவி அகால மரணம் அடையப் போகின்றயே!' என்ற பரிதாபத்தாற் கூறியது ; அக்கிரமஞ் செய்வதனாற் சாபவனது சாவு நியாய மன்றென்று கூறியதன்று. தீய வழியிற் செல்வானை 'அநியாயமாகக் கெட்டுப்போகிறானே!' என்று பரிதபித்துக் கூறும் உலக வழக்கு இங்கே கருதத்தக்கது.

---

* கிட்கிந்தா காண்டம், கலன்காண் படலம் — கசு.

கவலை நீங்கிக் களித்து வாழ்த்த, அவன், 'வணக்கம், விடை பெற்றுக்கொள்கின்றேன்' என்று கூறிச் சென்றான். ]

தீ அவிதல்

[ 'இனி நாமிருந்தால், அனுமான் துணையில்லாமையால், நம்மை அரக்கர் பிடித்து வருத்துவ' ரென்று அக்கினிதேவன் ஒளித்துப் போயொழிந்தா னென்னும்படி, இலங்கையை எரித்துக்கொண்டிருந்த தீ, அவிந்துபோயிற்று. ]

—ஸ்ரீ—

## 15. திருவடி தொழுத படலம் *

[ அனுமான் (இலங்கையினின்று திரும்பிவந்து) இராமன் பாதங்களில் பணிந்ததைக் கூறுவது ] †

---

### அனுமான், இலங்கையினின்று புறப்பட்டு, வழியில் மைநாக பருவத ராசனைக் கண்டு, மகேந்திர மலைக்கு வரக்கண்ட வானரர் மகிழ்ச்சி பாராட்டல்

[ சீதையிடம் விடைகொண்டு சென்ற அனுமான், இலங்கைக்குப் பக்கத்தேயுள்ள ஒரு குன்றின்மீது, சூரியன் உதய கிரியை அடைகுவது போல, அடைந்து, தன் இயற்கைப் பெரு வடிவுகொண்டு, விண்வழியே விரைந்து சென்று, மைநாக பருவத ராசனுக்கு, முன் இலங்கைக்குப் போகும்போது வாக்களித்திருந்தபடி அந்த மலையில் இறங்கி, விருந்தருந்தி, இலங்கையில் நிகழ்ந்த செய்திகளைக் கூறி, விடைபெற்றுப் புறப்பட்டுத், தான் திரும்பி வருகையை விரும்பி எதிர்பார்த்துக்கொண்டு தெற்கு நோக்கிய வண்ணமாய் மகேந்திர மலைமேலிருந்த அங்கதனாதியர் முன்பு வந்து குதித்தான். அவன் முகப் பொலிவினால், சென்ற காரியம் சித்தியான தென்று தெரிந்துகொண்ட வானர வீரர்கள்,

---

* இதற்கு மீட்சிப் படல மென்றும் பிரதி பேத முண்டு: மீட்சி - (அனுமான் இலங்கையினின்று) மீளுதல் - திரும்புதல்.

† இதன் பொருள், இராமனது திருவடிகளை அனுமான் தொழுத படல மென்று கூறுவதேயன்றித் 'திருவடி' என்னும் பெயருடைய அனுமான் இராமனைத் தொழுத படலமென்று கூறுவதும் உண்டு. கருடனைப் 'பெரிய திருவடி' யென்பதும் அனுமானைச் 'சிறிய திருவடி' யென்பதும் வைணவ சம்பிரதாயம்.

*தமக்கு இரை தேடிக் கொண்டுவர வெளியே போயிருந்த தாய்ப் பறவை வரக் கண்ட குஞ்சுகள் போல, அவன் வரக் கண்டு மகிழ் கூர்ந்தார்கள். அந்த மகிழ்ச்சி மேலீட்டால், சிலர் ஆடினார்கள், சிலர் பாடினார்கள், சிலர் ஆர்த்தார்கள் *, சிலர் அவனை விழுங்குவார் போலப் பார்த்தார்கள். சிலர் தூக்கிச் சுமந்தார்கள். சிலர் இனிய கனிகளையும் தேனையுந் தேடிக் கொண்டுவந்து எதிரே வைத்து, 'இவைகளை உண்டு இளைப்பாறுக. நீ வினைமுடித்து மீண்டுவந்தா யென்பது விளம்பாமலே விளங்குகின்றது. இப்போது உண்ணுக. உண்டபின் விவர முரைக்கலாம்' என்று உபசரித்தனர். சிலர் அவன் தலையிலும், முகத்திலும், தோளிலும், மார்பிலும், கையி லும், காலிலும் அம்பு முதலிய ஆயுதங்கள் செய்த காயங்களைக் கண்டு கசிந்துருகி உயிர்போவார் போன்று வருந்தினார்கள்.* ]

### அனுமான், அங்கதனுதியரை வணங்கி, அவர்க ளெல்லாரையும் சீதை வாழ்த்தினா ளென, அவர்கள் தென்திசை நோக்கித் தெண்டனிடல்

[ *அனுமான், முதலில், இளவரசனான அங்கதனையும், பின்பு, ஆண்டில் முதிர்ந்த சாம்பவானையும் வணங்கி, மற்றவர்களுக்கு உரிய மரியாதைகளை முறையாகச் செய்து, 'இங்கே உள்ளா ரெல்லாருக் கும் எம்பெருமாட்டி வாழ்த்துக் கூறினாள்' என்றான். எனவே, எல்லாரும் எழுந்து, சீதையிருந்த திக்குநோக்கித் தெண்டன்சமர்ப் பித்தார்கள். பின்பு, அவர்கள், 'நீ சென்றதுதொட்டு வந்தது வரையும் நடந்த செயல்களை ஒன்றும்விடாமல் உரைப்பாயாக' என, அனுமான் கூறுகின்றான் :* ]

### அனுமான், இலங்கை நிகழ்ச்சிகளில் தன் வீரச் செயல்களைக் கூறாது மற்றவைகளைக் கூறல்

ஆண்டகை தேவி யுள்ளத் தருந்தவ மமையச் சொல்லிப்
பூண்டபே ரடையா ளங்கைக் கொண்டதும் புகன்று போரில்
நீண்டவா ளரக்க ரோடு நிகழ்ந்தது நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான் றன்றன் வென்றியை விளம்ப வெள்கி

கொண்டுகூட்டு : *ஆண்தகை (- அனுமான்) தேவி உள்ளத்து அருந் தவம் அமையச் சொல்லிப், பூண்ட பேர் அடையாளம் கைக்கொண்டதும்*

---

* *ஆரவாரித்தார்கள்.*

புகன்று, தான் தன் வெற்றியை விளம்ப வெள்கி, நீண்ட வாள் அரக்க ரோடு போரில் நிகழ்ந்ததும், நெருப்புச் சிந்தி மீண்டதும் விளம்பான்.

பொருள் : அநுமான், சீதையின் கற்பொழுக்கத்தைச் செவ்வையாகச் சொல்லி, சூளாமணியாகிய அடையாளத்தைக் கைக்கொண்டதையும் சொல்லித், தன் வெற்றியைத் தான் சொல்ல நாணியதனால் இராக்கதரோடு நிகழ்ந்த (போரில், தான் வென்ற) தையும் இலங்கையில் நெருப்பிட்டதையும் சொல்லாதுவிட்டான்.

ஆண்டகை - வீரன்; பெருமையிற் சிறந்தோன்: ஆண் தகை (-தன்மை) என்னும் இரண்டு சொற்கள், ஒன்றுசேர்ந்து, ஆண்டகை யென ஒரு சொல் லாகி, ஆண்மை யென்னும் பொருளுடையதாய் ஆண்மையுடையானை உணர்த்தியது. ஆண்டகை தேவி யென்பதற்கு இராமன் மனைவி யெனப் பொருள் கொண்டால், முந்திய பாட்டில் உள்ள 'மருத்தின் மைந்தன்' (- வாயுவின்மகன் - அனுமான்) எழுவாயாம். பூண்ட - (சீதை) அணிந்த. வாள் - கொடுமை : வாளரக்கர் என்பதிற்போல, வாளரா என்பதிலும் வாள் கொடுமையை உணர்த்துதல் காண்க.

ஆடவர்க்குத் தவநெறி போல, மாதருக்குக் கற்புநெறி யிருத்தல்பற்றிச் சீதை கற்பைத் தவ மென்றான். அக் கற்பு, உடலைத் தூய்மையாக வைத் திருத்தலன்றி அதனினும் மிகமிக அருமையான, உள்ளத்தைத் தூய்மையாக வைத்திருத்தலும் உடைய தென்பது விளங்க 'உள்ளத்து அருந்தவம்' என்றான்.

உள்ளக்கற்பு அருமையினும் அருமையான தென்பது, 'எம்பெருமானே எனக்கு (ஒருவரன்று) ஐவர்கள் ஐம்புலன்கள் போலக் கணவரா யிருக்கவே யும் (அம்மட்டில் திருப்தி அடையாமல்) இன்னும் வேறொருவன் கணவ னாக வேண்டுமென்று என் மனம் உருகாநிற்கும். (ஆதலால் என்போலப்) பெண்ணாகப் பிறந்தவர்க ளெல்லாருக்கும், ஆடவரே யில்லாதிருந்தா லல்லா மல், நம்புதற்கில்லை' யென்று வசிட்டனது தருமபத்தினியான அருந்ததி யையே ஒத்த சிறந்த கற்புடையாளான திரௌபதி கிருட்டிணனை நோக்கிக் கூறினா ளென்னும் கருத்துடைய பாரதப் பாட்டினால் விளங்கும். அப் பாட்டு வருமாறு :

'ஐம்புலன் களும்போல் ஐவரும் பதிகள்
ஆகவும், இன்னும்வே றொருவன்
என்பெருங் கொழுநன் ஆவதற் குருகும்,
இறைவனே! எனதுபே ரிதயம்!
அம்புவி தனிற்பெண் பிறந்தவ ரெவர்க்கும்,
ஆடவர் இலாமையி னல்லால்,
நம்புதற் குளதோ?' என்றனள், வசிட்டன்
நல் அற மனைவியே அனையாள்

— பழம் பொருந்து சருக்கம் உக.

திரௌபதி கற்புடையளல்ல ளென்று கருதலாகாது. மாதர்கள் கற்புநெறியில் ஒழுகுதல் போலத் தவநெறியி லொழுகும் தவசிகள், தம் மனம் தம்மைத் தீயவழியிற் செல்லும்படி தூண்டும்போது அதற்கு உடன்படாமல், தம் மனத்தை அடக்கி ஆண்டு தம் தவத்தை நெறிபிறழாது கடைபோகக் காத்தல்போலத் திரௌபதி தன் மனத்தின்வழிச் செல்லா ளாய்க் கற்பைக் காத்தாளென்பது, அவள் கவிக்கூற்றாக 'வசிட்டன் நல்லற மனைவியே அனையா' ளெனப்பட்டதனாலும் 'யான் உருகுகின்றேன்' என்றாது 'என் மனம் உருகும்' என்றதனாலும் பெறப்படும். 'வேறொரு வன் என் கணவனாக உருகும் என் மனம்' என்ற திரௌபதி, 'பெண்ணா கப் பிறந்தவ ரெவரையும் நம்புதற்குளதோ?' என்னாது, 'பெண் பிறந்தவ ரெவர்க்கும் நம்புதற்குளதோ?' என்றதனால், (மேலே 'என் மனம்' என்றது கொண்டு 'நம்புதற்குளதோ' என்பதன்முன் அவர்கள் மனம் என்பது வருவித்தற்பாலதாய், அவள், 'என் மனம் எனக்கு நம்புதற் குரியதா யில்லாதது போலப், பெண்ணாகப் பிறந்தவ ரெல்லாருக்கும் அவர்கள் மனம் அவர்களுக்கு நம்புதற் குரியதா யில்லை' யென்றா ளென்பதும், அதனால், மாதர்கள் மனத்தை அடக்கிக் கற்பைக் காத்தல்வேண்டு மென்று குறிப்பித்தா ளென்பதும் பெறப்படும். இஃது, அகலிகை வெண்பாவி லுள்ள ஒரு பாட்டை நினைவுறுத்துகின்றது. அது வருமாறு:

> *நல்லார் உளத்தின்னும் நல்லா ரலார்உளத்தும்*
> *பொல்லா நினைவு புகல்இயல்பே;—நல்லார்,*
> *புகுந்தவுடன் அந்நினைவைப் போக்கிடுவர்; பொல்லார்,*
> *மிகுந்துறைய* விட்டிடுவர் வேட்டு†*

பாட பேதம்: *செய்த வென்றியை: வென்றியை உரைப்ப.* (கஙக)

**வானரர், 'நீ போர் செய்ததைப் புண்களும், வென்றதை மீண்டமையும், இலங்கையை எரித்ததைப் புகையும் சொல்லத் தெரிந்தோம்' எனல்**

பொருதமை புண்ணே சொல்ல வென்றமை போந்த தன்மை
உரைசெய வூர்தீயிட்ட தோங்கிரும் புகையே யோதக்
கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலே காட்டத்
தெரிதர வுணர்ந்தேம் பின்ன ரென்னினிச் செய்து மென்றார்

கொண்டுகூட்டு: '(நீ சொல்லாமலே) பொருதமை புண்ணே சொல்ல, வென்றமை (நீ) போந்த தன்மை உரை செய, (நீ) ஊர் தீ இட்டது ஓங்கு இரும் புகையே ஓதக், கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலே காட்டத், தெரிதர உணர்ந்தேம். பின்னர் இனி என் செய்தும்?' என்றார்.

* உறைய - தங்க. † வேட்டு - விரும்பி.

பொருள்: '(நீ இராக்கதரோடு போர் செய்து வென்றதை யும் இலங்கையை எரித்ததையும் கூறினையில்லை. ஆயினும்,) நீ சொல்லாமலே,—போர் செய்தா யென்பதை உன் உடம்பிலுள்ள புண்கள் புகலுதலாலும், செயமடைந்தா யென்பதை நீ திரும்பி(க் குதூகலமாக) வந்தது கூறுதலாலும், இலங்கையை யெரித்தா யென்பதை (எரிபட்ட இலங்கையினின்று)உயர்ந்தெழுந்த பெரும் புகை (தூரத்துள்ள எங்களுக்குத் தோன்றிச்) சொல்லியதனு லும், எதிரிகளது பெருமையைச் சீதாதேவி திரும்பி வராதது செப்புதலாலும் தெளிவாகத் தெரிந்துகொண்டோம். இனிமேல் யாது செய்யக்கடவேம்? (அதனை இசைப்பாயாக.)' என்று (வானர வீரர்) கூறினார்கள்.

பொருதல் - போர் செய்தல். போந்த - வந்த. இருமை - பெருமை. இரும் புகை - பெரும் புகை. கருதலர் - (உடன்பாடாக) எண்ணாதவர் - (எதி ரிடையாக எண்ணும்) பகைவர். மீண்டிலா - திரும்பாத. தெரிதர - தெரிய: தர, துணைவினை. செய்தும் - செய்வோம்.

புண்ணே, புகையே, செயலே என்பவற்றோடு இயைய, போந்தமை என்பதன்பின் ஏகாரம் வருவித்துக்கொள்க. அந்த ஏகாரம், செய்யுளாத லால் தொக்கது. நான்கு ஏகாரங்களும் பிரிநிலை; 'நீ சொல்லாமலே' என்ற பொருளை நயம்படக் குறித்தவை. பெருமை, கருதலர்களுடைய தொகை மிகுதியையும் வலிமை மிகுதியையும் உணர்த்திநின்றது. சொல்ல, உரை செய, ஓத என்பவற்றுக்குப் பின் அவற்றின் தொடர்பாக வந்த, (இயல்பாகக் காண்பிக்க என்னும் பொருளுடைய) காட்ட என்பதைச் (செயற்கையாகச்) சொல்ல என்று தெளிவாகப் பொருள்படும்படி பிரயோகித்துக், கவி மோனை யமைத்திருப்பது கவனிக்கத்தக்கது. வானரவீர ரெல்லாருக்குமாக, அவருள் ஒருவர் கூறியதை அவர்க ளெல்லாரும் கூறியதாகக் கூறியிருப்பது, சொல்லாமலே தெரியக்கூடியதாம்.

இந்தப் பாட்டு வாசாலக மென்னும் பேச்சுத்திறமையும் ஊகித்து உண ரும் வல்லமையும் ஒருங்கு அமையச்செய்த சமத்காரமான கவிகளுள் ஒன்றும். (கூஉ)

### வானரர் புறப்பட்டு மதுவனம் அடைந்து தேனுண்டு களித்து விளையாடல்

[ அநுமான், 'இராமபிரானுக்குச் சீதாதேவி சேமமாயிருப்ப தைச் சீக்கிரமாகத் தெரிவித்து அவனது கவலையை அகற்ற

வேண்டும்' என, எல்லாரும் ஒருமுகமாக எழுந்து புறப்பட்டுக் குறித்த இலக்குத் தப்பாமல் வேகமாகச் செல்லும் இராமபாணம் போல, விரைந்துசென்று, உச்சிநேரத்தில் கிட்கிந்தைக்குக் கிட்ட இருந்த மதுவனத்தை அடைந்தார்கள். அங்கே, வானரத் தலைவர்கள், அநுமானை நோக்கி, 'இலங்கைக்குச் சென்ற நீ சித்தி பெற்றுத் திரும்பவேண்டுமே யென்ற கவலையினால் நாங்கள் நெடு நாள் ஊணுறக்கமின்றி வருந்தியிருந்தோம். நீ சிறிதுகாலம் வாராது தாமதித்திருந்தாயானால் செத்தேபோகவிருந்த எங்களைச் சாவாமற் காத்தாய். அப்போது காத்ததுபோல, இப்போது யாங்கள் பசியால் இறவாமற் காப்பாயாக' என்றார்கள். அவன் அவர்களைக் கூட்டிக்கொண்டு அங்கதனிடம் சென்றான். எல்லாத் தலைவர்களும், அங்கதனைக் கைகூப்பித் தொழுது 'உன் சேனை தாகத்தால் தவிக்கின்றது. இந்த வனத்தில் உள்ள தேன் கூடுகளை அவர்களுக்கு அளிக்கவேண்டும்' என்று கூற, அதற்கு அவன் இசைந்தான்.

உடனே, வானரர்கள், தேன்கூடுகளினூடு, ஒருவருக்குமுன் ஒருவர் ஓடி, அக் கூடுகள் தொங்கும் கொம்புகளை ஒடித்து, தேனைத் தெவிட்ட உண்டு களிப்பாராயினர். ஒருவர் கைக்கொள்ள முயன்ற தேனை ஒருவர் கைக்கொண்டு ஓடுவர். ஒருவர் கையிலெடுத்து வாய்க்குக் கொண்டுபோகுந் தேனை ஒருவர் இடையே புகுந்து பிடுங்கிக்கொள்வர். ஒருவர்மேலொருவர் விழுவர், ஏறுவர். ஒருவரை யொருவர் தழுவுவர். இவ்வாறாக எல்லோரும் இனிது களித்து விளையாடிக்கொண்டிருந்தனர். ]

மதுவனத்துக் காவலாளர் தலைவன் ததிமுகனை
அங்கதன் இரத்தம் கக்கக் குத்திச் சுக்கிரீவனிடம் அனுப்புதல்

[ அப்போது, அந்த மதுவனத்துக் காவலாளர்கள் கண்டு சீறிச், 'சுக்கிரீவாக்ஞையை மீறி உங்கள் உயிருக்கு முடிவு தேடிக் கொண்டீர்கள்' என்று கூறித், தங்கள் தலைவன் ததிமுகனிடம் சென்று, 'நாம் காக்கும் மதுவனத்தில் அங்கதன் சேனை அவன் அனுமதிபெற்றுப் புகுந்து, எதிரிகளும் செய்யக் கூசும் அழிவைச் செய்து விட்டது' என்று தெரிவித்தார்கள். அவன், 'அப்பன்* பட்டபாடு மகனுக்குத்† தெரியாதுபோலும்!' என்று சொல்லித்

* அப்பன் - வாலி. † மகன் - அங்கதன்.

தனது படையுடன் மதுவனத்துள்ளே புகுந்தான். புகவே, அங்கே களித்துக்கொண்டிருந்த வானரர், கண்டு பயந்து, அங்கதனிடம் போய், அபயமிட்டு அடியில் விழுந்தார்கள். ததிமுகன், அங்கதனெதிரே சென்று, அவன்மீது ஒரு பாறையைப் பேர்த்தெடுத்து வீசியெறிய, அவன் அதனைப் புறங்கையால் விலக்கித் ததிமுகனைப் பிடித்து இரத்தங் கக்கக் குத்திச், 'சுக்கிரீவனிடம் போய்ச் சொல்' என்று சொல்லிப் போகவிட்டான். அங்கதன் சேனை வீரர், தங்கள் தலைவர்களுக்கு இனிய கனிகளும் தேனுங் கொண்டுவந்து கொடுத்து உண்பித்து உவகையோடிருந்தார்கள். இது நிற்க. ]

### தெற்குத் தவிர மற்றைத் திசைகளுக்குச் சென்றவர்கள் திரும்பிவந்து சீதையைக் காணவில்லை யென்று தெரிவித்தல்

[ சுக்கிரீவன், சீதையைத் தேடும்படி வானர சேனைகளை நாலு திசைகளுக்கும் அனுப்பியபின், கிட்கிந்தை மலையில் இராமனுக்குத் தேறுதல் வார்த்தைகள் கூறிக்கொண்டிருந்தான். தெற்குத்திசை தவிர மற்றைத் திசைகளுக்குச் சென்றவர்கள், திரும்பிவந்து, சீதையைக் காணவில்லை யென்று இராம சுக்கிரீவருக்குத் தெரிவித்தார்கள். ]

### சீதை பிரிந்த துன்பந் தாங்கமாட்டாமல் இராமன் பலமுறை செத்துப் பிழைப்பான் போலல்

**133.** கார்வரை யிருந்தவக் கதிரின் காதலன்
சீரிய சொற்களாற் றெருட்டச் செங்கணான்
ஆருயி ராயிர முடைய னாமெனச்
சோர்தொறுஞ் சோர்தொறு முயிர்த்துத் தோன்றினான்

**கொண்டுகூட்டு:** செங்கண்ணான் (- இராமன்) சோர்தொறும் சோர்தொறும், கார் வரை இருந்த அக் கதிரின் காதலன் சீரிய சொற்களால் தெருட்ட, ஆர் உயிர் ஆயிரம் உடையன் ஆம் என, உயிர்த்துத் தோன்றினான்.

**பொருள்:** இராமன் (சீதை பிரிவாற்றாமையால் உயிர் நீங்கினான் போல்) மயங்கி மூர்ச்சிக்குந்தோறும், சுக்கிரீவன் சிறந்த தேறுதல் வார்த்தைகளால் தெளிவிக்கப், (பார்த்தோர், அவன் பலமுறை உயிர்நீங்கி மீள்கின்றானாதலால்) பல உயிர்களுடையான் போலு மென்று சொல்லும்படி, உயிர்பெற்று எழுந்தான்.

*கார் - கருமை; மேகம். வரை - மலை. கதிர் - சூரியன். காதலன் - மகன். சீரிய - சிறந்த. தெருட்டல் - தெளிவித்தல். செங்க(ண்)ணன் - சிவந்த கண்களையுடையவன்; இராமன். ஆம் என - போலும் என்று சொல்லும்படி. சோர்தல் - மூர்ச்சித்தல். உயிர்த்தல் - உயிர்பெற்றெழுதல்.*

*இராமன் பலமுறை மயங்கித் தெளிந்ததைப் பலமுறை செத்துப் பிழைத்ததாகவும், இறந்த உயிர் திரும்பா தாதலால் அவன் பலமுறை யிறந்து பிழைத்தற்கு அவனுக்குப் பல உயிருண்டு போலு மென்பதாகவும் கூறிய நயம் கொண்டாடத்தக்கது.*

பாட பேதம் : *கார்வரை இருந்தனன்.* (கஙங)

## சீதையை அனுமான் காண்பா னெனும் நம்பிக்கையினல் இராமன் இறவாதிருத்தல்

**134.** தண்டலி னெடுந்திசை மூன்றுந் தாயினர்
கண்டிலர் மடந்தையை யென்னுங் கட்டுரை
உண்டுயி ரகத்தென வொறுக்க வும்முளன்
திண்டிற லனுமனை நினையுஞ் சிந்தையான்

கொண்டுகூட்டு : *தண்டல் இல் நெடும் திசை மூன்றும் தாயினர் மடந்தையைக் கண்டிலர் என்னும் கட்டுரை ஒறுக்கவும், (இராமன்) திண் திறல் அனுமனை நினையும் சிந்தையான்(ஆய்), அகத்து உயிர் உண்டு என உளன்.*

பொருள் : *(கிழக்கு, மேற்கு, வடக்கு ஆகிய) மூன்று திக்குக்களிலும் சென்ற வானரர் சீதையைக் காணவில்லையென்று சொன்ன சொல் வருத்தஞ்செய்யாநிற்கவும், இராமன், அனுமா(ன் சீதையைக் காணக்கூடியவ னென்று அவ)னை நினையும் மன முடையவனாய், (அந் நினைவினால் நம்பிக்கைகொண்டு உயிரை விடாதிருந்ததனால்) உயிர் (போய்விடவில்லை) உள்ளே யிருக்கிற தென்று (சொல்லும்படியான அம்மாத்திரையே உயிருடையானாக) இருக்கின்றான்.*

*தண்டுதல் - தடைப்படுதல். நெடுமை - பெருமை. தாயினர் - தாவினர் (விரைந்து சென்றன ரென்றபடி). மடந்தை - பெண் - சீதை. கட்டுரை - உறுதிச்சொல். ஒறுத்தல் - வருத்துதல். திண்மை - வலிமை. திறல் - வலிமை. திண்திறல் - மிக்க வலிமை. 'அகத்து (- உள்ளே) உயிர் உண்டு'*

எனற்பாலது, செய்யுளாதலால் ' உண்டு உயிர் அகத்து' என அடி தலைமாறி நின்றது. 'ஒறுக்கவும் உயிர் உண்டு (-உளது) என' என்று கூட்டாது 'உயிர் (-உயிரை) உண்டென (-உண்டாலென - உண்டாற்போல) ஒறுக்கவும்' என்று கூட்டலுமாம். (கூச)

## தென்றிசை சென்றோர் திரும்பாமை, மரணத்தாலோ, மற்றேதனுலோ என, இராமன் வினவல்

[ இராமன், துன்பம் மேலிடச் சுக்கிரீவனை நோக்கிச், 'சீதையைத் தேடச்செய்த முயற்சி பயன்படவில்லை. அவளைத் தேடித் தென்றிசைக்குச் சென்றவர்கள் திரும்பவில்லை. அவர்கள் திரும்புதற்குக் குறித்த கால எல்லை கடந்துவிட்டது. அவர்கள் செத்துப் போனுர்களோ? சாகவில்லையானுல், அவர்களுக்கு வேறு ஆபத்து யாது நேர்ந்ததோ? "அவள் மாண்டனள், மாண்ட வார்த்தையை மீண்டுபோய்க் கூறுதலினும் நாமும் மாண்டொழிதல் நன்று" என்று மாண்டார்களோ? இராக்கதரை எதிர்த்துப் பொருது இறந்து வீர சுவர்க்கமடைந்தார்களோ? இறவாராய்ச் சிறைப் படுத்தப்பட்டார்களோ? தவணை கழிந்தபின் திரும்பிப் போய்த் தண்டனையடைதலினும் தவஞ்செய்தல் சிறந்ததென்று தவஞ் செய்கின்றுர்களோ? அவர்கள் நிலைமையைச் சொல்லு' என்றுன். ]

## அங்கதனுதியர் மதுவனத்தை அழிக்கின்றனரெனத் ததிமுகன் சுக்கிரீவனிடம் சொல்லல்

[ அப்போது, ததிமுகன், தலையினின்று இரத்தம் வடிய வந்து, சுக்கிரீவன் காலில் விழுந்து, தொழுது எழுந்து, கூப்பிய கையனுய், 'மதுவனம் முழுதும் இன்றே அழிந்திடும்' என, 'அழிப்பார் யார்?' என, 'நீலனும், குமுதனும், சாமபவானும் சேனையோடு வந்து மதுவனத்தை அழித்தலைக் கண்டு தடுத்த நம் சேனையை, அங்கதன் அப்புறப்படுத்தி உன்னை இகழ்ந்து பேச, யான் பொறுக்காமல் ஒரு பாறையை எறிய, அதனை அவன் புறங்கையால் அகற்றிவிட்டு, என்னைப் பற்றி இரத்தங் கக்கக் குத்திச், "சுக்கிரீவனிடம் போய்ச் சொல்" என்று சொன்னுன்' என்றுன். ]

## சீதை, கற்புடையளாய்ச் சேமமா யிருக்கிற ளென்று சுக்கிரீவன் இராமனுக்குச் சொல்லுதல்

[ உடனே, சுக்கிரீவன், எழுந்துநின்று, இராமனைக் கும்பிட்டுக், 'கற்புடையளாய்ச் சேமமாய்ச் சீதாதேவி யிருக்கும் நற்செய்தியை அவர்கள் நடக்கை அறிவிக்கின்றது. தேவியைக் கண்டவர்கள் களிப்பினால் மதுவனத்தை அழித்துத் தேனைக் குடித்தார்கள்' என்றான். பின்பு, ததிமுகனை நோக்கி, 'உனக்கு ஓர் உறுதிச் சொல் உரைக்கின்றேன்: கேள். அங்கதன், அற்பத் தொழில் செய்பவனல்லன். தேவியைத் தேடிக் கண்டுபிடிப்பதாகிய செயற்கரிய செயலைச் சித்திபெறச் செய்தவர்கள் திறத்தில், நாம் அருமை பாராட்டக் கடவேம். அன்றியும், அங்கதன் அரசனாதலால், அவனோடு மாறுபடலாகாது. அவனைச் சரணடைவாயாக' என்றான். ]

## சுக்கிரீவன் ஆணைப்படி அங்கதனைத் ததிமுகன் சரணடைதல்

[ ததிமுகன், சுக்கிரீவனை வணங்கித், 'திருவுள்ளப்படி செய்கின்றேன்' என்று விடைபெற்றுச் சென்று மதுவனத்தை அடைந்தான். அவனைக் கண்ட அங்கதன், 'இன்னும் எதிர்ப்பானால், கொன்றிடுவேன்' என்று நினைந்தான். ததிமுகன் தூரத்தே வரும்போதே, 'தொண்டன்' என்று சொல்லித் தொழுது கொண்டு வந்து, 'வெட்டினாற்போல அடியேன் செய்த குற்றத்தை மன்னித்தருள்க' என்று அடியற்ற மரம்போல விழுந்து வணங்க, அங்கதன், குனிந்து, அவனை வாரியெடுத்து மார்புறத் தழுவி, 'நான் செய்த குற்றத்தைப் பொறுப்பாயாக' என்று உபசார வார்த்தை கூறினான். ]

## அனுமான், இராமனுக்குச் சீதை சேமம் தெரிவிக்கச் செல்லல்

[ 'இன்னும் இராமபிரான் துன்புறுவண்ணம் நீர் முன்னாகச் சென்று "சீதாதேவி சேமமா யிருக்கின்றாள்" என்று தெரிவிப்பீராக' என்று எல்லாரும் கூற அனுமான் போனான். ]

## அங்கதனாதியர் இராம சுக்கிரீவரைக் காணச் செல்லல்

[ ததிமுகன்மீது கொண்ட கோபந் தணிந்த அங்கதன், வெயிலின் தாபந் தணிந்த மாலை வேளையில், 'நாம் இராம சுக்கிரீவரைக் காணப் புறப்படுவோம்' என, எல்லாரும் போகலுற்றார்கள். ]

அனுமான் வருதலை இராமன் காணுதல்

[ இராமன், 'தென்றிசைநின்று திரும்பிய சேனைவீரர் "சீதையைக் கண்டோ" மென்பரோ, வேறு கூறுவரோ?' என்று சுக்கிரீவனை வினவிய அதே சமயத்தில், அனுமான், தெற்கே சூரியன் உதயமாவதுபோலத் தோன்றினன். அவனை இராமன் அன்புகூர நன்கு நோக்கினன். ]

அனுமான், இராமனை வணங்காமல்,
சீதை(யிருந்த திசை)யை நோக்கி வணங்குதல்

**135.** எய்தின னனுமனு மெய்தி யெந்தைதன்
மொய்கழ றொழுகிலன் முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன் கையினன்
வையகந் தழீஇ நெடி திறைஞ்சி வைகினன்

கொண்டுகூட்டு: அனுமன் (இராமனை) எய்தினன்; எய்தி எந்தை தன் மொய்கழல் தொழுகிலன் (ஆய்), முளரி நீங்கிய தைய (லிருந்த தென் எல்)லை நோக்கி (வணங்கி)ய தலையன் கையினன் (ஆய்), வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வைகினன்.

பொருள்: அனுமான், (இராமனிடம்) வந்துசேர்ந்து, இராமன் பாதங்களை வணங்கானய்ச், சீதை(யிருந்த திசை)யை நோக்கி (வணங்கி)ய தலையும் கையும் உடையவனய்ப், பூமிபடிய விழுந்து நெடுஞ்சாண்கிடையாய் வணங்கிக்கிடந்தான்.

எய்தல் - அடைதல். எந்தை - என் தந்தை: கவிக்கூற்ருய் இராம னைக் குறித்தது. மொய் - வலி. கழல் - கால். மொய்க் கழ லெனற்பாலது எதுகை நோக்கி மொய்கழ லென நின்றது. முளரி - தாமரை. தழீஇ - தழுவி. வையகம் தழீஇ - பூமியிற் படிய விழுந்து. நெடிது இறைஞ்சு தல் - சாட்டாங்கமாக நமஸ்கரித்தல். வைகுதல் - தங்குதல்; வணங்கிய வன் உடனே எழுந்திடாமல் சிறிதுநேரம் வணங்கியபடியே கிடந்தா னென் பது குறித்தது.

நான்கு திசைகளுள் வடக்கொழிந்த முத்திசைகளில் எத்திசைமுக மாகவோ வீற்றிருந்து, அனுமான் தெற்கேயிருந்து வருகையை எதிர் பார்த்து, அத்திசையை நோக்கியவண்ணமா யிருந்த இராமனைக் காணவந்த அனுமான், கண்டபோது, அவனைப் பிரிந்திருந்த சீதையை நினைந்து, அந் நினைவின் ஆவேசத்தினல், அவன் காலில் விழுந்து வணங்குவதை மறந்து,

அவள்பால் வைத்த பத்தி மேலிடப் பரவசமாகி, 'இராமனுக்கு முதுகு காட்டுகிறேம்' மென்ற எண்ணமில்லாமல், வடக்குமுகமாக வந்தவன் தெற்கு முகமாகத் திரும்பித் தலைவணங்கிக் கைகூப்பி, 'இறைவனான இராமனுக்கு எதிரே கால்நீட்டும் அத்தியந்த அபராதஞ் செய்கிறேம்' மென்ற பிரஞ்ஞை சிறிது மின்றிச், சீதாத்தியானபரனாய்ப், பூமியில் அடியற்ற மரம்போல விழுந்து சாஷ்டாங்கமாக வணங்கிக் கிடந்தான் என்பது கருத்து. அனுமான் இராமனை வணங்காமல் சீதையை அவளிருந்த திசைநோக்கி வணங்கியது, அவள் கற்பு நீங்காமல் சேமமாயிருக்கிறு ளென்பதைச் சொல்லினால் உணர்த்துமுன் குறிப்பினு லுணர்த்தக் கருதி யென்று கூறுவா ருளர். அவன் அவ்வாறு கருதவில்லையாயினும், கருதினற்போலவே, அவனது அவசச் செயல்கள் சீதையின் கற்பையும் சேமத்தையும் தெரிவித்தமை தெளிவாம்.

எல்லாம் அறியவல்ல இராமன், அனுமான் தனக்கு நேரே கால் நீட்டித் தன் பத்தினியை வணங்குவது தன்னை நேராக வணங்குதலினும் சிறந்ததென்றும் அனுமானது உடம்பின் அபசாரச் செயல் அவனது உள்ளத்தின் உபசாரச் செயலைச் சிறப்பித்த தென்றும் ஊகித்துணர்ந்தா னென்பது ஆராய்ந்து அறியத்தக்கது. அந்மேதாவியான அனுமான், தான், அறியாமல் இராமனுக்குச் செய்த அபசாரம், இராமபத்தி காரணமாக ஏற்பட்ட சீதாபத்தி மேலீட்டால் நிகழ்ந்ததென் றுணர்ந்தபோது, தான் வேறு சீதை வேறென் றெண்ணுத இராமன் சீதைக்குச் செய்த வணக்கம் தனக்குச் செய்ததெனக் கொண்டா னென்று தெரிந்தா னென்பதும் உய்த்துணரத் தக்கது. அதனுல், அனுமான், சீதையை வணங்கியெழுந்த பின், இராமனுக்குச் செய்யத் தவறிய வணக்கத்தைச் செய்தா னென்று கூறப்படவில்லை.

பாட பேதம்: எய்தி ஏந்தல்: இறைஞ்சி வாழ்த்தினன். (கஙரு)

### அனுமான் செயல்களால், சீதை சேமமாயிருத்தலையும் கற்புடைமையையும் இராமன் ஊகித்துணர்தல்

**136.** திண்டிற லவன்செய றெரிய நோக்கினன்
வண்டுறை யோதியும் வலியண் மற்றிவன்
கண்டது முண்டவள் கற்பு நன்றெனக்
கொண்டனன் குறிப்பினு லுணருங் கொள்கையான்

**கொண்டுகூட்டு:** குறிப்பினுல் உணரும் கொள்கையான் (இராமன்) திண் திறல் அவன் (அனுமான்) செயல் தெரிய நோக்கினன்: (நோக்கி,) 'வண்டு உறை ஓதி (சீதை)யும் வலியள்; இவன் அவளைக் கண்டதும் உண்டு; அவள் கற்பு நன்று' எனக் கொண்டனன்.

பொருள்: (முகம் முதலிய அவயவங்களின் தோற்றஞ் செயல்களாகிய) குறிப்புக்களினால் (உள்ளத்தினுள்ளே நிகழ்வதைத்) தெரிந்துகொள்ளும் திறமையுடைய இராமன், அனுமானுடைய (வழக்கமில்லாத அசாதாரணமான) செய்கையை நன்றாகக் கவனித்துப் பார்த்தான்; (பார்த்துச்,) 'சீதை சேமமாயிருக்கிறாள்; இவன் அவளைக் கண்டதுண்டு; அவள் கற்புநிலை கலங்கவில்லை' யென்று தெரிந்துகொண்டான்.

*திண்மை - வலிமை. திறல் - வலிமை. திண்திறல் - மிக்க வலிமை. உறைதல் - தங்குதல். ஓதி - கூந்தல். வண்டு உறை ஓதி - வண்டு தங்கும் கூந்தல் (உடையாள்) - சீதை. வலியள் - திடமாயுள்ளவள் - (தேக) பலம் குறையாமல் (சுகமாக) இருக்கின்றவள். கொள்கை, கோட்பு என்பதுபோல வலிமை யென்னும் திறமையை உணர்த்திநின்றது.*

*சீதை இறவாது சேமமாயிருந்தாலன்றி அவளைக் காணக்கூடாமை பற்றி 'வலியள்' என முதலாவதாகவும், அவளைக் கண்டாலன்றி அவள் கற்புநிலை கலங்காதவளோ கலங்கினவளோ வென்பது அறியக்கூடாமையினால் அவளை அனுமான் கண்டதைக் 'கண்டதும் உண்டு' என இரண்டாவதாகவும், அவளை வணங்குதலால் அவன் அவள் கற்பின் தூய்மையை அறிந்ததைக் 'கற்பும் நன்று' என மூன்றாவதாகவும்' இராமன் ஊகித்துணர்ந்தானென, அவனுடைய எண்ண நிகழ்ச்சிகளை நிகழ்ந்த முறைப்படியே கவி கூறியிருத்தல் கவனிக்கத்தக்கது.*

பாட பேதம்: *வண்டறல் ஓதியும்.*　　(கஙகூ)

அனுமான், 'கற்பலங்காரியாய்ச் சேமமாயிருக்கும் சீதையைக் கண்டேன்' எனல்

**137.** கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்
தெண்டிரை யலைகட லிலங்கைத் தென்னகர்
அண்டர்நா யகவினித் துறத்தி யையமும்
பண்டுள துயருமென் றனுமன் பன்னுவான்

கொண்டுகூட்டு: *அனுமன் (இராமனை நோக்கி,) 'அண்டர் நாயக! கற்பினுக்கு அணி(யான சீதை)யைத் தெள் திரை அலை கடல் இலங்கைத் தென் நகரில் (என்) கண்களால் கண்டனன். பண்டு உள ஐயமும் துயரும் இனித் துறத்தி!' என்று (பின்னும்) பன்னுவான்.*

பொருள்: அனுமான், (இராமனை நோக்கித்,) 'தெய்வ நாயகனே! கற்பலங்காரி(யாகவுள்ள சீதாபிராட்டி)யை இலங்கையிலே என் கண்களால் பிரத்தியட்சமாகக் கண்டேன். முன் (அவள் உயிரோடிருக்கிறாளோ, உயிரோடிருந்தாலும் கற்புடனிருக்கிறாளோ, என்றெண்ணி) இருந்த சந்தேகத்தையும் அதனால் உண்டாயிருந்த துன்பத்தையும் விட்டுவிடுவாயாக!' என்று கூறிப் பின்னுங் கூறுகின்றான்:

அணி - ஆபரணம். தெள்திரை அலைகடல் இலங்கை - தெளிவான அலைகள் அலைகின்ற கடல் (சூழ்ந்த) இலங்கை. தென் - தெற்கு; அழகு. தென் நகர் - தெற்கேயுள்ள நகரம்; அழகுடைய நகரம். துறத்தி - துறப்பாய் - நவாய்.

இராவணன் தனக்கு இணங்கும்படி வணங்கியபோது, சீதை கொடுங் கோபங்கொண்டு கடுஞ்சொற் கூறியதையும், அவள் தற்கொலைசெய்யப் புகுந்ததையும் அனுமான் கண்ணாரக் கண்டதை மனத்துட்கொண்டு, தான் சீதை கற்புடைமையை அறிந்தது வேறொருவர் சொல்லக் கேட்டதனாலன்று நேராகக் கண்டதனா லென்று இராமனுக்குத் தெரிவிக்கக் கருதிக், 'கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்' என்றான்.

குலைவுறு வா
ஆசை யால்உயிர் ஆசழி வானையும்
காசில் கண்ணிணை சான்றெனக் கண்டனன்
ஊசலாடி உளையும் உளத்தினன் *

என்பதைக் காண்க.

"'பிராட்டியை" என்று முதலிற் கூறினால், அவளது நிலைமை என்னாயிற் றென்று கூறுவாரோ வென்னுஞ் சங்கையினால் இராமனுக்கு மிக்க துன்பமுளதாகக்கூடு மெனக் கருதி, "கண்டனன்" என முதலிற் கூறினன் அனுமான்; ஸ்ரீவால்மீகி ராமாயணத்தில் "த்ருஷ்டா சீதா" என வருதலுங் காண்க. "கண்டனன்" என்றதையடுத்துக் "கற்பினுக்கணி" என்று கூறியதன் காரணம் தானே விளங்கும்; அவள் கற்பிற் சிறவாதிருப்பின், அவளைக் கண்டது பயன்படாமை யுணர்க..........."கற்பினுக் கணியைக் கண்டே" னென்றது—"அந்தச் சீதாபிராட்டி உன்னைப் பிரிந்து சிறைப்பட்டிருக்கின்ற அங்குக் கண்களினின்று நீரைத் தாரைதாரையாகப் பெருக்கிக்கொண்டிருப்பதனால், அவள் கற்பினுக் கணியாவ ளென்பதை யுணர்ந்தே" னென்றவாறு: கற்புக் கெட்டிருப்பின் துயர்க்குக் காரணமில்லை

* இந்நூல் 44-ம் பாட்டு.

யாதலால், இவ்வாறு கூறியது: "கலங்குதெண் டிரையிற் ருய கண்ணி னீர்க் கடலிற் கண்டேன்" என மேல்வருவதும், "அழுவ தல்லதய லொன் றுஞ் செய்குவ தறியாள்" என்றதுங் காண்க.' *

பாட பேதம்: இனித் தவிர்தி. (கூஎ)

## சீதை இராமன் தேவியாகவும், தசரதன் மருமகளாகவும், சனகன் மகளாகவும் இருத்தற்கு ஏற்ற தகுதி மிகுதியாக உடையா ளெனல்

உன்பெருந் தேவி யென்னு முரிமைக்கு முன்னைப் பெற்ற
மன்பெரு மருகி யென்னும் வாய்மைக்கு மிதிலை மன்னன்
தன்பெருந் தனயை யென்னுந் தகைமைக்குந் தலைமை சான்ருள்
என்பெருந் தெய்வ மையா வின்னமுங் கேட்டி யென்ருன்

**கொண்டுகூட்டு:** 'ஐயா! என் பெரும் தெய்வம் (ஆன பிராட்டி,) உன் பெரும் தேவி என்னும் உரிமைக்கும், உன்னைப் பெற்ற மன் பெரு மருகி என்னும் வாய்மைக்கும், மிதிலை மன்னன் தன் பெரும் தனயை என்னும் தகைமைக்கும் (ஏற்ற) தலைமை சான்ருள். இன்னமும் கேட்டி' என்ருன்.

பொருள்: 'சுவாமி, எனக்குச் சிறந்த தெய்வமான சீதா பிராட்டி, உனது கோப்பெருந்தேவி யென்ற உரிமைப்பாட்டுக் கும், தசரத சக்கரவர்த்திக்கு முதல் மருமகள் என்ற பிரபல வார்த்தைக்கும், சனக மகாராசனது பிரதான புத்திரி யென்னும் தகுதிக்கும் ஏற்ற சிறப்பு மிகுந்தவள். (அவள் பெருமைக் குணங் கள் இவ்வளவில் அடங்கவில்லை) இன்னமும் கேட்பாயாக' என்று (அனுமான் தொடர்ந்து) கூறுகின்ருன்.

மன் - அரசன். மருகி - மருமகள். வாய்மை - வார்த்தை. தனயை - மகள். தகைமை - தகுதி. தலைமை - முதன்மை - மேன்மை - சிறப்பு. சான்ருள் - மிகுந்தாள். கேட்டி - கேட்பாயாக.

சீதை, மனைவியாகவும், மருமகளாகவும், மகளாகவும் உள்ள நிலைகளில் ஒப்பு ஒருவருமின்றி உயர்வற உயர்ந்து முதன்மையுற்று விளங்குகின்ரு ளென்பது கருத்து.

இந்தக் கவியில், சீதை, தனக்கு உறவினரான உயர் பெருந்தகையாளர்க் குத் தான் உறவினளா யிருத்தற்குச் சிறந்த தகுதியைக், கடுஞ் சோதனைக்

* வை. மு. கோ.

குள்ளான காலத்தில் கற்புநிலை கலங்காதிருந்ததனால், மிகுதியாகப் பெற்றா ளென்பது கூறப்பட்டது. அடுத்த இரண்டு கவிகளில், அவள் தனக்கும் தனக்கு உரியோரான மேலோர்க்கும் கீழோர்க்கும், தன் கற்புநிலை காரண மான சிறந்த பெருமையை அளித்தா ளென்பது கூறப்படுகின்றது. (கரு௮)

**'சீதை, தனக்குத் தன்னையும், உனக்கு உன்னையும், எனக்கு என்னையும் தவிர வேறு ஒப்பாரிலராகச் செய்தாள்' எனல்**

பொன்னல தில்லைப் பொன்னை யொப்பெனப் பொறையி னின்றாள்
தன்னல தில்லைத் தன்னை யொப்பெனத் தனக்கு வந்த
நின்னல தில்லை நின்னை யொப்பென நினக்கு நேர்ந்தாள்
என்னல தில்லை யென்னை யொப்பென வெனக்கு மீந்தாள்

கொண்டுகூட்டு: '(சீதாதேவி,) பொன்னை ஒப்பு பொன் அலது இல்லை எனத், தன்னை ஒப்பு தன் அலது இல்லை எனப் பொறையில் நின்றாள்; தனக்கு(க் கொழுநனாக) வந்த நின்னை ஒப்பு நின் அலது இல்லை என நினக்கு(ப் பிரசித்தியை) நேர்ந்தாள்; என்னை ஒப்பு என் அலது இல்லை என எனக்கு (வரம்) ஈந்தாள்.

பொருள்: 'சீதாதேவி, பொன்னுக்கு ஒப்பான பொருள் பொன்னையல்லது வேறில்லை யென்பதுபோலத், தனக்கு ஒப் பாவார் தன்னையல்லது வேறொருவரு மில்லை யென்னும்படி பொறுமைக் குணத்தில் நிலைத்துநின்றாள்; தனக்கு(க் கொழுந னாக) வாய்த்த உனக்கு ஒப்பாவார் உன்னையல்லது வேறொருவரு மில்லை யென்னும்படி உனக்கு(ப் பிரசித்தியை)க் கொடுத்தாள்; (தொண்டனான) என்னை ஒப்பவர் என்னையல்லது வேறொருவரு மில்லை யென்னும்படி எனக்கும் (வரம்) அருளினாள்.

பொறை - பொறுமை. நேர்தல் - கொடுத்தல்.

இராமனைப் பிரிந்து அடைந்த சொல்லற்கரிய துன்பங்களைச் சீதை ஆச்சரியகரமாதப் பொறுத்ததைக் கருத்துட்கொண்டு, இங்கே, அனுமான் கூற்றாகப் 'பொறையில் நின்றாள்' என்ற கம்பர், முன், கவிக்கூற்றாகச் சீதையை 'உமையா ளொக்கும் மங்கையர் உச்சிக் கரம்வைக்கும் கமையாள்'* என்று கூறியிருப்பதும், இனி, இப் படலத்தில் 'விற்பெருந் தடந்தோள்' என்ற 140-ம் பாட்டில் விதந்தெடுத்துக் கூறும் சீதையின்'

* க. ரா. சா. பாலகாண்டம் - 90. கமை - பொறுமை.

சிறந்த குணங்களுள் நடுநாயகமாக அவளது 'இரும்பொறை'*யைக் கூறுவதும் கவனிக்கத்தக்கவை.

கம்பர் சீதையின் குணங்களுள்ளே பொறுமைக் குணத்தைப் பல இடங்களில் சிறப்பாகக் கூறியதன் காரணம், அவள், 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்' எனப் பொறுமைக்குச் சிறந்த உவமானமாகவுள்ள பூமியின் அதிதேவதையான பூதேவியின் அமிசமாய்ச், சனகமகாராசன் யாகஞ் செய்தற்கு உழுத படைச்சாலில் பூமியுள்ளிருந்து தோன்றியது போலும்.

செம்பு முதலிய வேறு லோகக் கலப்புற்ற தங்கத்தைப் புடத்திலிட்டால், தன்னோடு கலந்திருந்த உலோகங்களெல்லாம் எரிந்தொழிந்துபோகத், தனியாகித் தங்குவது தங்கமே. (அதனால், நோக்குத லென்னும் பொருளுடைய நோக்கம் போலத் தங்கம் தங்குத லென்னும் பொருளுடையதாய்ப், பொன்னுக்கு ஒரு பெயராயினதுபோலும்.) புடச் சோதனையைப் பொறுக்கமாட்டாது மற்றெல்லா உலோகங்களும் நிலையா தொழியப் பொன் ஒன்றே பொறுத்து நிலைகெடா திருத்தல்போல, மற்றெல்லா மக்களும் பொறுக்கமாட்டாமல் நிலைகெட் டொழியும்படியுள்ள துன்பச் சோதனையைப் பொறுத்து நிலைகெடாது நின்றாள் சீதை யென்பது முதலிரண்டடிக் கருத்து.

பொறுமைக்கு நிலைப்பிடமாய், அதனால் தானன்றித் தனக்கு நிகரில்லாதவளான சீதை, தனக்கு நாயகனாகப் பெற்ற இராமன், அப்படிப்பட்ட மனைவியைப் பெறாத மற்றைய ஆடவ ரெவரும் ஒப்பாகாது, தனக்குத் தானே ஒப்பாகும் பிரசித்தியைப் பெறச் செய்தா ளென்பது மூன்றாமடிக் கருத்து.

அனுமான், 'ஊழி ஓர் பகலா ஓதும் யாண்டெலாம் உலகம் ஏழும் ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி' என்று சீதை தன்னை வாழ்த்தித், தொண்டரானோ ருள்ளே தன்னையன்றித் தன்னை யொப்பவ ரில்லை யென்னும்படி, தான் சிரஞ்சீவியாகும் வரம் தந்தா ளென்றா னென்பது நான்காமடிக் கருத்து.

**பாட பேதம் :** பொன்னை யொப்பன: தன்னை யொப்பவர்: நுன்னை யொப்பவர்: உன்னை யொப்பவர். (கஉகூ)

* இருமை - பெருமை. பொறை - பொறுமை. இரும்பொறை - மகத்தான பொறுமை.

சீதை, தன்னைச் சார்ந்தார்க்கு மேன்மையும், பகைத்தார்க்குக் கேடும் உண்டாகச் செய்தா ளெனல்

உன்குல முன்ன தாக்கி யுயர்புகழ்க் கொருத்தி யான
தன்குலந் தன்ன தாக்கித் தன்னையித் தனிமை செய்தான்
வன்குலங் கூற்றுக் கீந்து வானவர் குலத்தை வாழ்வித்
தென்குல மெனக்குத் தந்தா ளென்னினிச் செய்வ தெம்மோய்

கொண்டுகூட்டு : *'எம்மோய், உன் குலம் உன்னது ஆக்கி, உயர் புகழ்க்கு ஒருத்தியான தன்குலம் தன்னது ஆக்கித், தன்னை இத் தனிமை செய்தான் (ஆன இராவணன்) வன் குலத்தைக் கூற்றுக்கு ஈந்து, வானவர் குலத்தை வாழ்வித்து, என் குலம் எனக்குத் தந்தாள். (இவற்றினும்) என் இனிச் செய்வ(தற்கிருக்கிற)து !*

பொருள் : *'எங்கள் மாதாவான சீதாதேவி, உன்னுடைய குலம் (இக்ஷ்வாகு குலம், ரகு குலம், ககுஸ்த குலம் என வழங்குத லொழிந்து) இராம குலம் (என வழங்கும்படி) ஆகச்செய்து, தனது குலம் (சனக குல மென்பது தவிர்ந்து) சீதை குலம் (என் னும்படி) ஆகச்செய்து, தன்னை (உன்னைவிட்டுப் பிரித்து)த் தனிய ளாகும்படி செய்த இராவணனது இராட்சச குலத்தை எமனுக் குக் கொடுத்து (மாளச்செய்து), தேவர் குலத்தை வாழச்செய்து, எனது வானர குலத்தை (அனுமான் குலமென என் பேரால் வழங்கச்செய்து) எனக்கு(ப் பெருமை) ஈந்தாள். (அவள் செய்த, இப்படிப்பட்ட அருமையான செயல்களினும் சிறந்த செயல்) யாது இனிச் செய்தற் கிருக்கின்றது !*

*கூற்று - எமன். மோய் - தாய்.*

*புகழ்களில் தன்னை யொத்ததும் தன்னின் மிக்கது மில்லாததாய், உயர்ந்த புகழை வேறெவரோடும் பங்கிடாது தானொருத்திக்கே தனியுரிமை யாகப் பெற்ற என்ற விரிவான பொருளை 'உயர்புகழ்க் கொருத்தியான' எனச் சுருங்கச் சொல்லி விளங்கவைத்த நயம் மிகவும் பாராட்டற்பாலது.*

*சீதையின் அருங்குணங்களும் அரிய செயல்களும் அவளை மேம் படுத்தியதன்றி அவளைச் சார்ந்தாரையும் மேன்மையுறச் செய்த தென்பது கருத்து.*

பாட பேதம் : *ஒருத்தி யாய : இத் தன்மை செய்தான் : செய்த மன்குல மறவி : வானவர் குலமுங் காத்தின்று : செய்வதம்மா.* (கசo)

'இலங்கையிலே சீதையைக் கண்டேனில்லை;
இற்பிறப்பும், பொறுமையும், கற்பும் நடனமாடக் கண்டேன்' எனல்

விற்பெருந் தடந்தோள் வீர வீங்குநீ ரிலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டே னல்லேன்
இற்பிறப் பென்ப தொன்று மிரும்பொறை யென்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றுங் களிநடம் புரியக் கண்டேன்

கொண்டுகூட்டு: 'பெரும் வில் (ஏந்திய) தடந் தோள் வீர! வெற்பு வீங்கு நீர் இலங்கையில், நல் பெரும் தவத்தள் ஆய நங்கையைக் கண்டேன் அல்லேன். இற்பிறப்பு என்பது ஒன்றும், இரும் பொறை என்பது ஒன்றும், கற்பு எனும் பெயரது ஒன்றும் களி நடம் புரியக் கண்டேன்.

பொருள்: 'வீராதிவீரனே, (என்ன ஆச்சரியம்! காணக் கூடிய ஓர் உருவப் பொருளைத் தேடிச்சென்ற அடியேன், அதனைக் காணாமல், அதன் தானத்தில், காணக்கூடாத மூன்று அருவப் பொருள்களைக் கண்டேன். அந்த விவரத்தைக் கேட்டருள்.) இலங்கையிலே (அடியேன் தேடிச்சென்ற) சீதாதேவியைக் கண்டேனில்லை. (வேறு கண்டது யாதோ வெனில்,) உயர்குடிப் பிறப் பென்ப தொரு குணமும், மகத்தான பொறுமை யென்ப தொரு குணமும், கற்பு என்னும் பெயரினையுடைய தொரு குண மும் ஆனந்த நர்த்தனஞ் செய்துகொண்டிருத்தலைக் கண்டேன் (என்பது. இற்பிறப்பு முதலிய மூன்று குணங்களின் சொரூபமா யுள்ளாள் சீதை யென்றவாறு.)

பெரும் வில் தடம் தோள் வீர - பெரிய வில்லை யேந்திய விசாலமான கையையுடைய வீரனே. வெற்பு வீங்கு நீர் இலங்கையில் - திரிகூட மலைமேலுள்ள, மிகுந்த நீரையுடைய கடல் சூழ்ந்த இலங்கை நகரில். இற்பிறப்பு - உயர்குடிப் பிறப்பு. இருமை - பெருமை. பொறை - பொறுமை. களிநடம்புரிதல் - களிப்போடு கூத்தாடல். 'இலங்கை வெற்பில்' என்பது 'வெற்பிலங்கையில்' என மாறியும் உருபு பிரித்துக் கூட்டியும் உரைக்கப் பட்டது.

சிங்காதனத்திலே அரசனும் அரசியும் அரசிளங் குழவியும் ஒருங்கு விளங்கக் கண்டு, அந்தக் கம்பீரமான காட்சியில் முழு மனமும் முழுகிய ஒருவன் சிங்காதனத்தைக் காணானன்றே; அவ்வாறே, சீதையினிடத்தே குடிப்பிறப்பும் பொறுமையும் கற்பும் ஆகிய முக்குணங்கள் மூர்த்தன்னிய மாய் முனைந்து நின்று முற்பட்டுத் தோன்றிச் சொலிக்கக் கண்டு, அந்தக்

காட்சியில் மனம் அழுந்தி அவசனான அனுமான், அந்தச் சமயத்தில் அக் குணங்களைக் கண்டதன்றி, அவைகளையுடைய அவளைக் காணவில்லை யென்பது கருத்து.

இயல்பாக வடிவமும் தொழிலு மில்லாத, கட்புலனாகாத இற்பிறப்பு முதலிய குணங்களின் சிறப்பு இனிது புலப்பட,

'இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்'

என, அவைகளைக் காணப்படும் உருவமும் செயலு முடையனவாகக் கூறிய அதிசய கவிசாதுரியம் பாராட்டத்தக்கது. (கசக)

## சீதை இராமனைப் பிரிந்தா ளென்பது பொருந்தா தெனல்

கண்ணினு முளைநீ தையல் கருத்தினு முளைநீ வாயின்
எண்ணினு முளைநீ கொங்கை யிணைக்குவை தன்னி னோவா
தண்ணல்வெங் காம னெய்த வலரம்பு தொளைத்த வாறாப்
புண்ணினு முளைநீ நின்னைப் பிரிந்தமை பொருந்திற் றாமோ

கொண்டுகூட்டு: 'நீ தையல் கண்ணினும் உளை! கருத்தினும் உளை! வாயின் எண்ணினும் உளை! கொங்கை இணைக் குவை தன்னின் ஓவாது அண்ணல் வெம் காமன் எய்த அலர் அம்பு தொளைத்த ஆறாப் புண்ணினும் நீ உளை. (ஆக) நின்னை (அவள்) பிரிந்தமை (என்பது) பொருந்திற்று ஆமோ?

பொருள்: 'நீ, எப்போதும் சீதாதேவியின் கண்களி லிருக் கின்றாய்! கருத்தினு மிருக்கின்றாய்! மன்மதன் எய்த புட்ப பாணங்கள் தொளைத்ததனா லுண்டான ஆறாத புண்களிலு மிருக் கின்றாய்! (இப்படியிருக்கவேயும்,) உன்னை அவள் பிரிந்திருக் கின்றா ளென்று கூறுவது பொருத்தமான கூற்றாமோ?

உளை - உள்ளாய். எண் - எல்லை. வாயின் எண்ணில் - வாயின் எல்லை யில் - வாயில். இணை - இரட்டை. குவை - மேடு - முகடு. ஓவாது - நீங்காமல் - இடைவிடாமல். அண்ணல் - பெருமை. வெம்மை - கொடுமை. அண்ணல் வெம் காமன் - பெருங் கொடுமையுடைய மன்மதன். அலர் - பூ. தொளைத்த புண் - தொளைத்ததனால் உண்டாகிய புண்.

சீதை, எப்போதும் இராமனை உருவெளித்தோற்றமாகக் காணலால் அவன் அவள் கண்ணைவிட்டுப் பிரியாமையையும், அவனை அவள் சதா

சிந்தித்துக்கொண்டிருத்தலால் சிந்தையைவிட்டுப் பிரியாமையையும், இடைவிடாமல் அவன் பெயரைச் சொல்லிக்கொண்டிருத்தலால் வாயைவிட்டுப் பிரியாமையையும், ஓயாது அவன் காதல் கூர்தலால் மன்மதன் அம்பு செய்த புண்ணைவிட்டுப் பிரியாமையையும் உடையா ளென்பது உள்ளுறை பொருள்.

இதற்கு முந்திய பாட்டில், காணக்கூடாத குணங்கள் காணப்பட்டன வாகக் கூறியது அதிசயமானது. அந்த அதிசயத்துக்கு மேல் அதிசயமானது, இந்தப் பாட்டில் இராமனைப் பிரிந்த சீதையைப் பிரியாதவ ளென்றது. மேற்கொண்டும் அதிசயமானது, பிரிந்த தூலராமன் ஒருவனுயிருக்க, வாயில் உள்ள ராமன், மனத்தில்உள்ள ராமன், கண்ணில்உள்ள ராமன், புண்ணில் உள்ள ராமனுகச் சூக்கும ராமர் பலரா யிருப்பதாகக் கூறியது. (கசஉ)

### சீதை இராவணனுல் தீண்டப்படாமல் தூயளா யிருக்கின்ற ளெனல்

[ 'இலங்கை நகரிலே, ஒருபுறத்திலே, அசோகவன மென்ற சோலையிலே, இளையபெருமாள் இயற்றிய சாலையிலே, "தவம் செய்த தவமாம் தையல்" * ஆன சீதாதேவி. உனது திருநாமத்தையே செபித்து உனது திருவுருவத்தையே தியானித்து அருந் தவம் புரிந்துகொண்டிருக்கக் கண்டேன். அவளுடைய கற்புத் தீயும் "இராவணன், விரும்பாதவளைத் தொட்டால், தலைவெடித்துச் சாவக்கடவன்" என்று பிரம னிட்டிருந்த சாபத் தீயும் அகத் தீக்கோட்டையும் புறத் தீக்கோட்டையுமாய்த் தடையா யிருந்ததனுல், அவளைத் தொடுதற்கு அஞ்சி அவளிருந்த சாலையோடு தூக்கிப்போனுன். ]

### சீதை கற்புநிலை கலங்காமை மாதர்க ளெல்லாருக்கும் உயர்ந்த மதிப்பை உண்டாக்கிய தெனல்

**143.** சோகத்தா ளாய நங்கை கற்பினுற் றேழுதற் கோத்த
மாகத்தார் தேவி மாரும் வான்சிறப் புற்றுர் மற்றைப்
பாகத்தா ளிப்போ தீசன் மகுடத்தாள் பதுமத் தாளும்
ஆகத்தா ளல்லண் மாய ஞயிர மௌலி மேலாள்

* மகாத்துமாக்களாற் செய்யப்படும் மகிமையுடைய தவம், தானே தவஞ் செய்து, அந்தத் தவப்பயனுகப் பெற்ற சீதை - தவத்தின் தவப்பயன் வடிவெடுத் தாற்போன்றவள்.

கொண்டுகூட்டு : 'சோகத்தாள் ஆய நங்கை கற்பி(னிலே கலங்காமையி)னால், தொழுதற்கு ஒத்த மாகத்தார் தேவிமாரும் வான் சிறப்பு உற்றார். ஈசன் (இடப்) பாகத்தாள் (ஆன உமை) இப்போது (அவன்) மகுடத்தாள். பதுமத்தாளும் மாயன் ஆகத்தாள் அல்லள்(ஆய் அவன்) ஆயிரம் மௌலி மேலாள்.

பொருள் : '(உனது பிரிவினால்) துன்பமுடையவளான சீதா பிராட்டி கற்புநிலை (கடுஞ்சோதனைக் குள்ளான காலத்தும்) கலங்காமையினால் (அவள் உயர்வுற்றாளென்பானேன், "தக்கவன் ஒருவன் வாழத் தன் குலமெல்லாம் வாழும்" என்றவாறு, பெண்ணாகிய அவளினமான பெண்களெல்லாருமே உயர்வுபெற்றார்கள். அப்படி உயர்வுபெற்ற பெண்கள் பூலோகத்துப் பெண்கள் மட்டுமோ வென்னில், அன்று) தேவலோகத்துத் தெய்வப் பெண்களும் உயர்வடைந்தார்கள். (ஏனைய எல்லா உலகத்துப் பெண்களும் உயர்ந்தார்கள். பிராட்டியொருத்தியுடைய கற்பினால், பெண்களெல்லாரும் அடைந்த மேம்பாட்டைக் கொண்டாடுவாராய், ஆடவரெல்லாம், அவரவர் நாயகிமாரைத் தலைமேற்கொண்டு கௌரவப் படுத்தினார்கள். சீதாதேவி கற்புச் சோதனைக் குள்ளாகுமுன்) சிவபிரானுடைய பாகத்தாளாயிருந்த உமாதேவி, இப்போது (சோதனைக் குள்ளான சீதாதேவி கற்புநிலை கலங்காமை தெரியலான போது) அந்தப் பெருமானுடைய தலைமேலுள்ளாள். இலக்குமி தேவியும் திருமால் மார்பி லுறைபவ ளல்லளாய் அந்த அமலன் சிரமே லிருக்கின்றாள்.

சோகம் - துக்கம். மாகம் - தேவலோகம். பதுமத்தாள் - இலக்குமி. மகுடம் - மௌலி. முடி - கிரீடம்.

'அர்த்தநாரீசுவர மூர்த்தத்திலே சிவபிரானது பாகம் வலப்புறமாதலால், இடப்புறம் "மற்றைப் பாகம்" எனப்பட்டது. "ஆயிர மௌலி" என்றது — விராட் ஸ்வரூபத்தின் நிலைமையைக் கருதி.' *

சீதை ஒருத்தியின் கற்பினால் மாதர்களெல்லாருக்கும் மதிப்பு அதிகப்பட, ஆடவர் மாதரை முன்னிலும் அதிகமாகக் கவுரவப்படுத்தினார்களென்பதைப் பாவனாரீதியான கவிமுறையாக, ஆச்சரியமும் ஆனந்தமுமுண்டாக,

> 'பாகத்தாள் இப்போ தீசன் மகுடத்தாள் பதுமத் தாளும்
> ஆகத்தா ளல்லள் மாயன் ஆயிர மௌலி மேலாள்'

என்று கூறியிருத்தல் கண்டுகளிக்கத்தக்கது.

---

* வை. மு. கோ.

சீதையின் மேம்பாடு, 'உன்பெரும்,' 'பொன்னல,' 'உன்குலம்,' 'சோகத்தாள்' என்ற கவிகளில் ஆரோகண கதியாக உயர்தலுடன் பரவுதலும் உடையதாகக் கூறப்பட்டு, அக் கவிகளிற் கடைசியான இந்தச் 'சோகத்தாள்' என்ற பாட்டில், அத்தியந்த உச்சமும் வியாபகமும் அடைந்ததாகக் கூறப்பட்டிருத்தல் காண்க.

பாட பேதம்: மௌலியாளே. (கசாங)

அனுமான், 'சீதையை அசோகவனத்திற் கண்டேன்' எனல்

[ 'தெண்ணீர்க் கடலின் நடுவே இலங்கையைக் கண்ட அடியேன், அங்கே சாதாரணமாகச் சன சஞ்சாரமுள்ள எல்லா இடங்களிலும், விசேடமாக இராவணன் அரண்மனையிலும், தேவியைத் தேடிக் காணாமல் அசோகவனத்தை அடைந்தேன்; அங்கே கண்ணீர்க் கடலின் நடுவே அவளைக் கண்டேன். ]

'இரக்கமே பெண்ணுருக் கொண்டாற்போன்று
சீதை சிறையிலிருக்கின்றாள்' எனல்

**144.** அரக்கிய ரளவற் றோர்க ளலகையின் குழுவு மஞ்ச
நெருக்கினர் காப்ப நின்பா னேசமே யச்ச நீக்க
இரக்கமென் றொன்று தானே யேந்திழை வடிவ மாகித்
தருக்குயர் சிறையுற் றன்ன தகைமைய டமிய ளம்மா

கொண்டுகூட்டு: 'அலகையின் குழுவும் அஞ்ச, அரக்கியர் அளவற்றோர்கள் நெருக்கினர் காப்ப, (ஏற்பட்ட) அச்சத்தை நின்பால் நேசமே நீக்கத், தமியள் (ஆன சீதாதேவி,) இரக்கம் என்ற ஒன்று தானே ஏந்திழை வடிவம் ஆகித், தருக்கு உயர் சிறையுற்றது அன்ன தகைமையள் (ஆய் இருக்கின்றாள்.)

பொருள்: '(தாம் பயப்படாது பிறரைப் பயப்படுத்துமியல்புடைய பேய்கள், ஒன்றன்று, அனேகம் திரண்டு கூடியனவான பல) பேய்க் கூட்டங்களுமே பயப்படும்படி (இமிசிக்கும்) அரக்கியர் (ஒருவரல்ல) அளவற்றவர்கள் (தப்பிப்போதற்குச் சந்துவிடாது நெருங்கிச் சூழ்ந்துநின்று) வருத்தஞ்செய்துகொண்டு காவல் காத்துநிற்க, (அவ் வருத்தத்தால் ஏற்பட்ட) அச்சத்தை உன்பால் வைத்த அன்பு ஒன்றே (பக்கபலமில்லாமல்) நீக்காநிற்க, (அந்த அன்புத் துணையன்றி எந்தத் துணையுமில்லாது)

தனியளாயுள்ள சீதாதேவி, இரங்கிப் பரிதாபப்படத்தக்கதென்ற ஒரு தன்மையானது ("பெண்ணென்றால் பேயு மிரங்கும்" என்பதற் கிலக்கான) பெண்ணுருக்கொண்டு சிறையி லிருந்தாற்போன்ற தன்மையளா யிருக்கின்றாள்.

அலகை - பேய். குழு - கூட்டம். நெருக்குதல் - வருத்துதல்.— தூ. அ. நெருக்கினர் - நெருக்கி - வருத்தி: முற்றெச்சம். ஏந்திழை - பெண். தருக்கு - தருக்குதல் - வருத்துதல்: முதனிலைத் தொழிற் பெயர்.— தூ. அ. தருக்கு உயர் - வருத்துதல் மிகுந்த. சிறை - சிறைச்சாலை - காவற்கூடம். தகைமை - தன்மை. தமி - தனி. அம்மா, அதிசய இரக்கக் குறிப்பு.

பேய், பிறரைப் பயமுறுத்தும்; தான் பயமுறாது. அப்படிப்பட்ட பேய் தனியாகவன்றிக் கூட்டங்களாக வுள்ளவைகளும் அஞ்சும்படி, எனவே அதி அசாதாரண அச்சமுண்டாம்படி, அரக்கிகள் சீதையை வருந்தச்செய்தார்க ளென்பான் 'அலகையின் குழுவும் அஞ்ச நெருக்கினர்' என்றான். அப்படிப்பட்ட வருத்தப்படுத்துதலைப் பொருட்படுத்தாதபடி செய்தது சீதை இராமன்பால் வைத்த நேச மென்றதனால், சீதையின் இராம நேசத்தை, அன்பென்பதை அறியாரும் அறியச்செய்தான்.

> 'இரக்கமென் றொன்று தானோர் ஏந்திழை வடிவமாகித்
> தருக்குயர் சிறையுற் றன்ன தகைமையள் தமியள் அம்மா!'

என்ற இனிய அருமந்த இரக்க வருணனை, சீதையின் அதி பரிதாபகரமான நிலைமையை நன்குணரச்செய்து, கருங்கல் மனமுங் கரைந்துருகச் செய்வதாயுள்ளது. அது கருணை சொரூபியான இராமன் மனத்தை யாது செய்திருக்கு மென்பது பகரமுடியாத தன்றிப் பாவிக்கவும் முடியாததா யுள்ளது.

(கசச)

## இராமனைக்காட்டிலும் பாக்கியசாலியான் ஆடவரில்லை யெனல்

[ 'எப்படிப்பட்ட பெருந் துன்பத்தையும் அச்சத்தையும் பொருட்படுத்தாதபடி செய்யவல்ல சிறந்த அன்பைச் சீதாதேவி உன்பால் வைத்திருக்கின்றாள். அப்படிப்பட்ட அன்பைத் தம் மனைவியரால் வைக்கப்பெற்றவர் எவரும் இலர்: ஆதலால், நீ ஆடவ ரனைவரினுஞ் சிறப்புடையையாய், அவ ரெவரும் அநுபவியாத, ஆணாகப் பிறந்ததன் பயனாக அநுபவிக்கும் செல்வங்களுட் சிறந்த செல்வத்தை அநுபவிப்பாயா யிருக்கின்றா யென்பதைத் தேவியைக் கண்டபோது தெரியலானேன். ]

இராவணன் இணங்கும்படி இரந்து வேண்டச்
சீதை கடிந்து மறுத்தா ளெனல்

[ 'அடியேன் தேவியை அணுகித் தெரிசித்துச் சேவை செய்தற்கு ஏற்ற சமயத்தை எதிர்பார்த்திருந்தபோது, இராவணன் வந்து இறைஞ்சி இணங்கும்படி இரந்து வேண்ட, அவள் கொடுங் கோபங்கொண்டு கடுஞ்சொற் கூறி மறுக்க, அவன் அவளைக் கொல்லத் தொடங்கிவிட்டான். அப்போது, அவள் தூய கற்பும், உன் திருவருளும், நல்லறமும் ஒன்றுகூடிக் காத்தன. அவன் அவளைத் தனக்கு இணக்கும்படி காவல் காத்துநின்ற இராட்சசிகளுக்குக் கட்டளையிட்டுச் சென்றான். அவர்கள் என் மந்திர வலியால் இறந்துபோனார் போல உறங்குவாரானார்கள். ]

சீவனை விடப்போன சீதையை இராம நாமம் இயம்பிக் காத்ததும்
மோதிரங் காட்டியதும் கூறல்

[ 'அப்போது பிராட்டி உயிரைவிட ஒருப்பட்டு ஒரு கொடியைக் கழுத்தில் இறுக மாட்டக் கண்டு, அடியேன் பதறிப் பக்கத்திலே போய்க் கையாற் றடுக்கமாட்டாது, வாயாற் றடுப்பேனாய், உன் திருநாமத்தை உச்சரித்தபோது, குரக்குருக்* கொண்ட அரக்கனோ வென்று ஐயுற்றுளாளுனும், "யான் இறக்கலுற்ற போது எம்பெருமான் பேரைக்கூறி இறவாது காத்தாய்" என்று நன்றி யுரைத்தாள். அடியேன், உன் செய்திகளைத் தெரிவித்து உன் மோதிரத்தைக் காட்டினேன். அது, அவளுக்கு அந்திய காலத்தில் சாவாது காக்கும் தேவாமுதம் போன்றது. ]

எதிரிடையான இரண்டு அதிசய சம்பவங்கள் நிகழ்ந்தன வெனல்

ஒருகணத் திரண்டு கண்டே னொளிமணி யாழி யான்ற
திருமுலைத் தடத்து வைத்தாள் வைத்தலுஞ் செல்வ நின்பால்
விரகமென் பதனின் வந்த வெங்கொழுந் தீயி னால்வெந்
துருகிய துடனே யாறி வலித்தது குளிர்ப்புள் ளூற

கொண்டுகூட்டு: 'செல்வ! ஒரு கணத்து இரண்டு கண்டேன். (தேவி, உனது) ஒளி மணி ஆழியை ஆன்ற திருமுலைத் தடத்து வைத்தாள்: வைத்தலும், நின்பால் விரகம் என்பதனின் வந்த வெம் கொழும் தீயினால் (அவ் ஆழி) வெந்து உருகியது: உடனே (மகிழ்வால்) உள் குளிர்ப்பு ஊற (அது) ஆறி வலித்தது.

---

* குரக்குரு - குரங்கின் வடிவம்.

பொருள்: 'சீமானே! ஒரு கண நேரத்துக்குள்ளே (ஒன்றுக்கொன்று எதிரிடையான) இரண்டு (வியப்பான நிகழ்ச்சிகளைக்) கண்டேன். (அவை எவையெனில், தேவி, உனது பொன்) மோதிரத்தை (உன் அன்பு தூண்டத் தன்) தனமுகட்டிலே வைத்தாள்: வைத்தவுடனே (உன் பிரிவுத் தீயாகிய) விரகாக்கினி(யினால் வெதுப்பப்பட்டிருந்த அவள் திருமேனி வெம்மை)யினால் (அந்த மோதிரம்) வெதும்பி உருகியது: உடனே (அம் மோதிரத்தை அனுப்பிய நீ "விரைவாய் வந்து சிறை மீட்பாய், திரும்ப உன்னைச் சேரலாம்" என்ற சந்தோஷ சிந்தனையினால்) மனத்திலே குளிர்ச்சி உண்டாக (அது கொங்கையுள்பட்ட உடம் பெங்கும் பரவிக் கொங்கைமீது வைக்கப்பட்டிருந்த மோதிரத்தையுங் குளிர்விக்க, அது) சூடாறி யிறுகிக் கட்டியானது (ஆச்சரியம்! ஆச்சரியம்! மிகவும் ஆச்சரியம்!)

மணி (- அழகுடைய) ஆழி (- மோதிரம்). ஆன்ற - அகன்ற - பரந்த. தடம் - உயர்ந்த இடம். (திருக்கோ. ச)—ச. அ. - முகடு. விரகம் - பிரிவு, வலித்தல் - வன்மையாதல். ஊறல் - பெருகல்.—த. அ. 'உள் (மனம்) குளிர்ப்பு ஊற' என மாறுக.

இராமன் பிரிவு நீட்சிபற்றிய சிந்தனையால் வெதும்பியிருந்த சீதை தேகம் அவனைத் திரும்பச் சேரலா மென்ற எண்ணத்தாற் குளிர்ச்சி யடைந்த தென்பது கருத்து. இதனை அதிசயமும் ஆனந்தமும் உண்டாக உணர்த்துவானாய், இராமன் மோதிரம் முந்திய வெப்பத்தால் உருகிப், பிந்திய தட்பத்தால்* இறுகிய தென்றான். இது உயர்வுநவிற்சியணி. இது போலக் 'காதளவும் நீண்ட கண்' எனத் தமிழிலும், 'இரு காதுக்கும் எட்ட இளித்தான்'† என ஆங்கிலத்திலும், 'பிணமலை' 'இரத்த ஆறு' என ஆங்கிலம் தமிழ் இரண்டினும் வழங்குவன உயர்வுநவிற்சிக்கு உதாரணங்களாம்.

தேகத்தில் பொன் உருகும்படியான சூடு உண்டாகுதல் இயல்பன்று. மோதிரம் (பொன்) உருகியபோது மோதிர வடிவத்தை யிழந்துவிடும்: பின்பு அது, குளிர்ந்து கட்டியாகும்போது பழைய மோதிர உருவத்தை அடையமாட்டாது. இவற்றுக் கெதிரிடையாக, மோதிரம் உடற் சூட்டினால் உருகிய தென்றும், அப்படி உருகிய மோதிரம் உடற் குளிர்ச்சியால்

---

* தட்பம் - குளிர்ச்சி.

† கடைவாய்கள் காதுகளை அணுகவும் பற்கள் மிகவும் வெளிப்படவும் மூடச் சிரிப்புச் சிரித்தான் ('He grinned from ear to ear').

இறுகிய தென்றும் உரைத்தல் பொருத்த மன்றென்று கருதலாகாது. யாதாயினு மொன்றை இன்பமும் அதிசயமும் உண்டாக மிகைப்படுத்துக் கூறுவதே அதிசயோக்தி யலங்கார மென்னும் உயர்வுநவிற்சி யணியாம். இப்பாட்டிலுள்ள உயர்வுநவிற்சி, அதி அசாதாரண அற்புத கற்பனு சக்தியுடையாராலேயே கூறக்கூடியது. இந்த உயர்வுநவிற்சிக் கவி, மராமரப் படலத்தில் வரும் 'ஊழி பேரினும்' என்ற முதற் கவி தொடக்கமாக 'எழு மாமரம்' என்ற கவி இறுதியாகத் தொடர்ச்சியாகப் பரமாச்சரியமும் பரமானந்தமும் பயக்கும் பதினன்கு உயர்வுநவிற்சிக் கவிகளையும் கலிங்கத்துப்பரணியில் உள்ள 'அணைகண்ட' என்ற அருமந்த அதிசய உயர்வு நவிற்சிக் கவியையும் நினைவுறச் செய்கின்றது.

'கடலில் திருவணை கட்டிய (இராமன் சேனையைச் சேர்ந்த) குரங்குக் கூட்டங்கள் (அந்தப் பாலைவனத்தில் அதி உட்டணமான மணற்பரப்பிலுள்ள எண்ணிறந்த மணல்களுள்) ஒரு மணல் (காணப் பெற்றிருக்குமாகில், அதைக் கடலிற் போட்டுக் கடல்நீர் முழுவதையும் வற்றச்செய்து கடலைக் கடக்க அணை கட்டவேண்டிய வேலையை அனுவசியகமானதாகச் செய்திருக்கும். அந்த ஒரு மணல்) காணுமையால் (கடலில் அணை கட்டுதற்கு) மலைகளையெடுத்து(க் கொண்டுவந்து போட்டு வருந்தி) மயங்குவனவாயின' என்ற பொருளடங்கிய அந்தப் பாட்டு வருமாறு:

> அணை கண்ட குரங்கினங்கள் அலைகடலுக் கப்பாலை
> மணலொன்று காணுமல் வரையெடுத்து மயங்கினவே.

உண்மையில், கடலைச் சுவறச்செய்யும் சூட்டுமணல் உள்ளதன்று, உள்ளதாயினும் தொடக் கூடியதா யிரா தென்றும், தேகச் சூட்டினால் மோதிரம் உருகாது, உருகி உருவழிந்த மோதிரப் பொன் சூடாறியபோது (கம்மியன் கைத்தொழிலாலன்றி) மோதிர மாகாதென்றும் ஆட்சேபிப்போர், கவிஞர்கள் மனோபாவனையாற் சிருட்டிக்கும் கற்பனுலோகக் காட்சிகளைக் காண மறுப்போராவார்.

பாட பேதம்: ஆழி என்ற. (கசரு)

## 'சீதை "ஒரு மாதத்துக்குட் சிறை மீட்கப்படாவிட்டால் சேத்திடுவே" னென்றள்' என்ல்

[ 'அடியேன் உன் திருநாமம் தீட்டிய கணையாழியைக் காட்டியபோது கையில் வாங்கி, அநியாயம் மிகுந்த அரக்க ரிருக்கும் ஊருக்கு வந்து ஆசூசமடைந்த* தென்று ஆயிரங் கலசம் புண்ணிய தீர்த்தத்தினால் அபிடேகஞ் செய்வாள்போல, அதனை

* ஆசூசமடைந்தது - தீட்டுப்பட்டது.

எம்பெருமாட்டி ஆனந்தக் கண்ணீரால் முழுக்காட்டினாள். மகிழ்ச்சி யழுகை அழுதுகொண்டு வாய்பேசாமல் மௌனமாயிருந்தாள். மெலிந்திருந்த மேனி விம்மூதலுற்றாள். ஆச்சரியத்தால் மூச் சடங்க, ஆவிபோனாள் போன்றிருந்தாள். அப்போது அடியேன் அவள் பிரிந்த பின்பு நிகழ்ந்தவைகளையும் உன் துயரையும் உரைத்து, அவளிருக்குமிடம் அறியப்படாததனால் நீண்ட கால தாமதம் நேர்ந்ததென்று கூறக் கேட்டபின் நெடுமூச்சு விடுவா ளாய்ப், போன உயிர் மீளவந்தாள் போன்றாள். உன்னைப் பிரிந்த பின் தனக்கு நேர்ந்த ஆபத்தையும் துன்பத்தையும் அறிவித்தாள். முடிவில், "இன்னும் ஒரு மாதம் உயிரோடிருப்பேன். அதற் குள் எம்பெருமான் இன்னருள்புரியா னெனில் இறந்திடுவேன்" என்று கூறித் தன் திருமுடியில் உன் திருவடிகள் பொருந்தத் தியானித்துத் திக்கு நோக்கித் தெண்டனிட்டாள். ]

## இராமன் கையிற் சூளாமணியைக் கொடுத்தல்

[ 'பின்பு, தன் முன்தானையில் முடிந்துவைத்திருந்த சூளா மணியை அவிழ்த்தெடுத்து அடையாளமாக அடியேன் கையிற் கொடுத்தாள். அதனைக் கண் களிக்கக் காண்பாயாக!' என்று கூறி அனுமான் சூளாமணியை இராமன் கையிற் கொடுத்தான். ]

## சூளாமணியை வாங்கிய இராமன் மெய்ப்பாடுகள்

**146.** பையவுட் பயந்த காமம் பரிணமித் துயர்ந்து பொங்கி
மெய்யுற வெதும்பி யுள்ள மெலிவுறு நிலையை விட்டான்.
ஐயனுக் கங்கி முன்ன ரங்கையாற் பற்று நங்கை
கையென லாயிற் றன்றே கைபுக்க மணியின் காட்சி

**கொண்டுகூட்டு:** (சூளாமணியைப் பெற்ற இராமன்) பைய உள் பயந்த காமம் பரிணமித்து உயர்ந்து பொங்கி(யதால்) மெய்யுற வெதும்பி உள்ளம் மெலிவுறும் நிலையை விட்டான். (அவன்) கைபுக்க மணியின் காட்சி, ஐயனுக்கு அங்கி முன்னர் அங்கையால் பற்றும் நங்கை கை எனல் ஆயிற்று.

பொருள்: (சீதையின் சூளாமணி இராமன் கையி லுற்ற போது அதன் காட்சியாலும் பரிசத்தாலும் அவன்) நெஞ்சி னுள்ளே மெள்ள உண்டாகிய சீதை காதல் வளர்ந்து மேன்மே லோங்கியதனால் உடம்பு வெதும்பி மெலிவுற்றிருந்த நிலைமை

நீங்கப்பெற்றான். அவன் கையை அடைந்த சூளாமணி அவனுக்குக் (கல்யாண காலத்தில்) அக்கினி முன்னிலையில் அவன் கையாற் பற்றிய சீதை கைபோல (இன்பம் அளிப்பது) ஆயினது.

பைய - மெல்ல. பயத்தல் - உண்டாகுதல்.—த. அ. பரிணமித்தல் - (வித்திலிருந்து மரம் உண்டாதல்போல) வளர்தல். மெய் - உடம்பு. அங்கி - அக்கினி. கை எனல் ஆயிற்று - கை போலுதலானது - கைபோன்றது: குலமுறை கிளத்து படலத்தில் 'வில்லென்னும்' என்ற பாட்டில், 'அல்லென்னும் திருநிறத்த அரி' என்பதில் 'என்னும்' என்பது 'போலும்' என்று பொருள்பட நிற்றல் காண்க. அன்று, ஏ, அசைகள். காட்சி - தன்மை.—த. அ.

முன் சீதையை மிதிலையிலே கன்னிமாடத்திலே கண்டு காதல்கொண்டு வருந்தியிருந்த இராமன் விவாக காலத்தில் அவள் கையைப் பற்றியபோது 'அவளை அடைந்தோ' மென்று மகிழ்ச்சியுற்றதுபோல, இப்போது அவள் பிரிவால் வருந்தும் அவன், அவளுடைய சூளாமணியைக் கையிற் கொண்டபோது, 'இராவணனை விரைந்து வென்று இச் சூளாமணிக்குடையாளை மீட்டு அடைந்திடுவோம்' என்று களிப்படைந்தா னென்பது ஈற்றடியிரண்டின் கருத்து.

பாட பேதம்: பைப்பய. (க்சசு)

போடித்தன உரோம மேன்மேற் பொழிந்தன கண்ணீர் பொங்கித்
துடித்தன மார்புந் தோளுந் தோன்றின வியர்வின் றுள்ளி
மடித்தது மணிவா யாவி வருவது போவ தாகித்
தடித்தது மேனி யென்னே யாருளர் தன்மை தேர்வார்

கொண்டுகூட்டு: (இராமனுக்கு) உரோமம் பொடித்தன; கண்ணீர் பொங்கி மேல் மேல் பொழிந்தன; மார்பும் தோளும் துடித்தன; வியர்வின் துள்ளி தோன்றின; மணிவாய் மடித்தது; ஆவி வருவது போவது ஆகி மேனி தடித்தது: என்னே! (இத்) தன்மை தேர்வார் யார் உளர் ?

பொருள்: (அந்தச் சூளாமணியின் பரிசம் அதனை அணிந்திருந்த சீதையின் பரிசம்போன்றிருந்ததனால், இராமனுக்கு) உரோமம் சிலிர்த்தது; (ஆனந்தக்) கண்ணீர் மேன்மேலாகப் பொங்கி வழிந்தது; தோளும் மார்பும் துடித்தன; (இன்ப) வேர்வைத் துளிகள் (இனிது) வெளிப்பட்டன; வாய் மடித்தலுற்றது; (ஆனந்தமேலீட்டால்) உயிர் (வெளியே) போவதும் (உள்ளே) வருவதுமாகி உடம்பு பூரித்தது: என்ன ஆச்சரியம்!

இத்தன்மைகளை ஆராய்ந் தறியவல்லார் யார் இருக்கின்றனர்? (எவருமில்லை யென்றபடி).

பொடித்தல் - புளகித்தல் - சிலிர்த்தல். வியர்வு - வேர்வை. துள்ளி - துளி. மணி (- அழகு)வாய் - அழகியவாய். ஆவி - உயிர்.

சீதையினது சூளாமணியின் பரிசம் அவள் தேகப் பரிசமேபோல, இராமனுக் குண்டாக்கிய மெய்ப்பாடுகளை வியப்பு விளைய விவரித்திருக்கும் வித்துவ சாதுரியம் மெச்சத்தக்கது. அத்தியந்த துக்கத்தாற்போல், அத்தியந்த சந்தோஷத்தாலும் சிலர் இறக்கும் உண்மையை மனத்துட்கொண்டு ஆவி அகன்றிடலாம்படியான பேரானந்தத்தை இராமன் அடைந்தான் என்பார் 'ஆவி வருவது போவதாகி' யென்றார். (கசஎ)

## இராமன் சேனையுடன் தென்கடற்கரை சேர்தல்

[ அப்போது அங்கதனுதியர் வந்து இராம சுக்கிரீவரை வணங்கினார்கள். சுக்கிரீவன் இராமனை நோக்கித், 'தேவியைத் தேடச் சென்றிருந்த சேனைக ளெல்லாம் திரும்பி வந்துவிட்டன. அவளிருக்கு மிடத்தை அறிந்துகொண்டோம். இனி வீணே காலஞ்செல்லவிடலாமோ?' என்றவுடனே, இராமன் எழுந்து, 'நமது படைகள் புறப்படுக' என்றான். சேனைக ளெல்லாம் திரண்டு தெற்குநோக்கிச் செல்வனவாயின. அப்போது இராம லக்குமணரை முறையே அனுமானும் அங்கதனும் வணங்கி வேண்டிக்கொண்டபடி முந்திய முன்னவன் பிந்திய முன்னவன் மீதும், முந்திய பின்னவன் பிந்திய பின்னவன் மீதும் ஏறிக், கருடாரூடனான திருமாலும் இடபாரூடனான சிவபிரானும்போலச், செல்வாரானார். தேனும் பழங்களும் கிழங்குகளும் கிடைக்கும் மலைப்பிரதேச மார்க்கமாகச் சேனை சென்றது. இலங்கையையும் இராக்கதரையும் பற்றிய எல்லா விவரங்களையும் அனுமான் சொல்லிக்கொண்டு செல்ல, எளிதாக வழிகடந்து எல்லாரும் பன்னிரண்டாம் நாள் தென்றிசைக் கடலைக் கண்டார்கள். ]

சுந்தரகாண்டம் முற்றுப்பெற்றது.

**காண்டம் ஐந்துக்கு விருத்தம் 659.**



# பாட்டு முதற்குறிப்பகராதி

[ எண்—பக்கவெண் ]

# அரும்பத அகராதி

[எண்—பாட்டெண். பதப் பொருளைப் பாட்டுப் பொருட்கீழ்ப் பார்க்க.]

| பிழை திருத்தம்: | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| | 53 | 26 | பொருள்களின் | பொருளின் |
| | 161 | 21 | போனுலுல் | போனுலும் |

ராவ் ஸாஹிப்

## வெ. ப. சுப்பிரமணிய முதலியார், G. B. V. C.

### இயற்றிய நூல்கள்

1. சுவர்க்க நீக்கம் முதற் காண்டம் .... 0 12 0

*('பாரடைஸ் லாஸ்ட்' என்னும் ஆங்கில நூலிலிருந்து விருத்தப்பாவில் மொழி பெயர்த்தது ; திண்மையான அட்டையுடன்)*

ஷை காலிகோ கட்டிடம் .... 1 4 0

2. கோம்பி விருத்தம் (2-ம் பதிப்பு) .... 0 8. 0

*(சென்னைச் சர்வகலாசாலை 1934-ம் வருஷத்து இண்டெர்மீடியேற்றுப் பாட புஸ்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றது.)*

3. நெல்லைச் சிலேடை வெண்பா (2-ம் பதிப்பு) ... 0 6 0

*(இதிற் சில வெண்பாக்கள் சென்னைச் சர்வகலாசாலை 1936-ம் வருஷத்து B. A. பாட புஸ்தகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.)*

4. அகலிகை வெண்பா (2-ம் பதிப்பு) ... 1 0 0

5. இந்து தேசத்துக் கால்நடைக்காரர் புஸ்தகம் ... 2 0 0

*(ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்தது.)*

6. இந்தியாவில் கால்நடைகளுக்குக் காணுகிற அதிக பிராணபாயமான வியாதிகளைப் பற்றிய புஸ்தகம்

*(ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்து, கவர்ண்மென்டுரால் பிரசுரிக்கப்பட்டது. சென்னைக் கவர்ண்மென்று அச்சுக்கூடம் சூப்பிரிண்டண்டுக்கு எழுதிப் பெறலாம்.)*

7. இராமாயண உள்ளுறை பொருளும் தென்னிந்திய ஜாதி வரலாறும் (2-ம் பதிப்பு) ... 0 6 0

